# அண்ணல் அநுமன்

ஸ்ரீ ராம்



பேராசிரியர்

ந. சுப்பு ரெட்டியார்

## கம்பன் புகழ் பாடிக் கன்னித்தமிழ் வளர்க்கும்




ஜஸ்டிஸ் டாக்டர் மு.மு. இஸ்மாயீல்

சென்னைக் கம்பன் கழகம் கண்டதுடன்
மாவட்டந்தோறும்
கவின்பெறும் வண்ணம் கம்பன் கழகங்கள்
காண வழிவகைகள் செய்து
கம்பன் புகழ் பரவக் காரணபூதர்
நீதி அரசர் டாக்டர் மு.மு. இஸ்மாயீல் அவர்கட்கு

## அன்புப் படையல்

செம்பொருள் ஒன்றென் றுணர்ந்தமெய்ஞ் ஞான
தேசிகர்; எட்டய புரத்து
நம்பரெம் உமறே மீளவும் இங்கே
நண்ணினன் எனவுல குரைப்பக்
கம்பனை உணர்ந்து திறமுறப் பகரும்
கண்ணியர்; புண்ணியர்; சீலர்;
தம்பமாய் நீதி புரந்தஇஸ் மாயீல்
தகவினுக் குரியதிந் நூலே.

# பதிப்புரை

கதையாலும் கற்பனைத் திறத்தாலும் கருத்து வளத்தாலும் ஒப்பற்ற இலக்கியங்களாய் ஓங்கி நிற்கும் இணையற்ற இரு இதிகாசங்கள் இராமாயணமும் மகாபாரதமுமாகும். இவை தோன்றிக் காலங்கள் பல நூறு கடந்துவிட்ட போதிலும், இவற்றில் அமைந்துள்ள பாத்திரங்கள் அறிவுக்கு விருந்தாய், ஆன்மிகப் பெட்டகமாய், நம்மை வழி நடத்திச் செல்லும் வழிகாட்டியாய் விளங்குகின்றன.

மேற்குறித்த இணையற்ற இரு இதிகாசங்களுள் ஒன்றான இராமாயணத்தில் சிறந்து விளங்கும் ஒரு பாத்திரம், "உய்த்துள காலமெல்லாம் புகழால் ஓங்கி நிற்கும்" அநுமன் ஆவார். அவர் அடக்கம், ஒழுக்கம், அறிவு, பணிவு, வீரம், விவேகம் முதலிய அருங்குணங்களின் ஓர் உருவாய் நின்று, கதைத் திருப்பங்களுக்குக் காரணராய் விளங்குகிறார்.

"இசை சுமந்து எழுந்த தோளுடைய" அநுமனின் சிறப்பையெல்லாம், பூத்தோறும் சென்று தேன் சேகரிக்கும் வண்டு போல், தம் நுனித்தறியும் புலமையாலும், செறிந்த ஞானத்தாலும் எட்டுத் தலைப்புகளில் 'அண்ணல் அநுமன்' என்னும் இந்த அரிய நூலைப் படைத்தளித்துள்ளார், 'அருங்கலைக்கோன்' **ந. சுப்பு ரெட்டியார்** அவர்கள்.

இலக்கிய நோக்ககோடு கற்பார்க்கு இனிய கரும்பாய், பக்திப் பரவசத்தோடு பயில்வார்க்கு அருட்பிரசாதமாய் விளங்கும் இந்நூலை வெளியிடுவதில் நாங்கள் மிகப்பெருமிதம் கொள்கிறோம்.

எந்நோக்கில் படித்தாலும் நன்மையே நல்கும் இந்நூலைத் தமிழ் மக்கள் பெருமையோடு வரவேற்றுப் போற்ற வேண்டுகிறோம்.

**- பழனியப்பா பிரதர்ஸ்**

# அணிந்துரை

## கம்பன் அடிசூடி பழ. பழநியப்பன்



"கம்பருக்கு அடிமையென்று
கைச்சாத்து செய்துவிட்டேன்;
இம்பர்வேறு ஒன்றற்கு
இடமுண்டோ?"

என்னும் சொ. முருகப்பாவின் பாடல் அடிகளே என் உச்சிமேற் கொண் டொழுகத் தக்கன என்றாலும், கலி காலம் நிரம்பவும் பொல்லாதது! இல்லாவிட்டால் ஆசிரியப்பிரான் ஒருவர் தம் மாணாக்கனையே தம் நூலொன்றுக்கு அணிந்துரை எழுதச் சொல்வாரா, என்ன?

அதுவும் யாரைப்பற்றி? "வேத நன்னூல் உய்த்துள காலமெல்லாம் புகழொடும் ஒக்க நிற்கும்" அநுமனைப்பற்றி! மனமாசுகளை எல்லாம் ஆசு இரியும் பிரானல்லவா? காரணத்தோடுதான் செய்துள்ளார்கள். "போர் உதவிய திண்தோளால் பொருந்துறப் புல்லுக!" என்று இராமபிரானே தன் தொண்டனாம் அநுமனைத் தன்னை வந்து மார்புறத் தழுவிக்கொள்ளப் பணித்தானே, அதே போன்று, அந்த அநுமனைப்பற்றி ஐம்பது ஆண்டுகட்கும் மேலாகத் தம் கருவில் உருக்கொண்டிருந்து வெளிவரும் நூற்குழந்தையை முதலில் அவர்தம் மாணாக்கத் தொண்டனாம் இச்சிறியவனிடம் தந்து சீராட்டச் சொல்வது சாலப் பொருத்தந்தானே? அதுதானே, அந்த இராம நாமத்தை அல்லும் பகலும் அனவரதமும் நினைந்து நினைந்து நெகிழ்ந்துருகித் துதி செய்து மகிழும் 'ஸ்ரீ சடகோபன் பொன்னடி'யாம் பேராசிரியர் சுப்பு ரெட்டியாரவர்களுக்கு உகந்த கைங்கர்யம்!

இன்னுமொன்று : தன்னை வணங்குவோரையும் தான் வணங்கி மகிழும் ஒரே கடவுள் அநுமனே! எந்தச் சந்நிதியிலும் இல்லாது, அநுமன் சந்நிதியில் மட்டுமே 'அஞ்சலி ஹஸ்தனாய்'க் கூப்பிய கைகளுடன் கூடின இறையைக் 'கண்கள் கொள'

முடியும். 'அருங்கலைக் கோனும்' அங்ஙனமே தம் மருங்கணைந்த சீடனிடம் சீராட்டப் பணித்தார் கொல்லோ?

'தமிழ்ச்செம்மல்' ரெட்டியாரவர்களின் 121ஆவது நூலாக, மூன்றாயிரம் ஆண்டுத் தொடக்கத்தில் அவர்தம் முதல் நூலாக இந்நூல் வெளிவருவதும் 'இம்மையே, எழுமை நோய்க்கும் மருந்தாம்', 'இராமன் என்னும் செம்மைசேர் நாமம்' தன்னைத் தாரக மந்திரமாகக்கொண்ட அநுமனைப்பற்றியதாக வருவதும் காலங்கருதிய செயல்; காலத்தினாற் போற்றப்பெற வேண்டிய தொன்றுமாகும். அதிகாரம், ஆணவம், தலைமை வேட்கை, சுய நலம், பண வெறி என்றிப்படிப் பலவும் மனிதர்களைப் பிடித்தாட்டி ஆட்கொண்டுள்ள இக்காலத்திற்குத் தேவை யானதாம். எப்படி?

பரம்பொருளாம் இராமனே 'போர் உதவிய திண்தோளால் பொருந்துறப் புல்லுக' என்று தொண்டனை அன்போ டழைத்துத் தலைவனைத் தழுவிக்கொள்ளச் சொல்லியும், அடிக்கீழ் இருந்து 'அரியணை தாங்கும்' தொண்டே போதும் என்று நிறைந்த அநுமனின் தொண்டுள்ளமே இன்றைய சூழலில் பின்பற்ற வேண்டியதொன்றாகும்; முன்மாதிரியுமாகும். தலைவன் விரும்பித் தந்தாலும் பணிவுடனே அடித்தொண்டனாகி வாழ்ந்து காட்டிய அநுமனே, இன்றைக்கு - தலைவன் அயரும் நேரம் பார்த்துத் தானே தலைவனாகிவிடத் துணிவோர் நிறைந்த இன்றைக்கு - தலைவர்களும் தொண்டர்களை அனுசரித்து அடங்கிப்போக வேண்டிய தொண்டர் நிறைந்த இன்றைக்கு - இளைய தலைமுறைக்கு, விதை நெல்லுக்கு முன்மாதிரியாய், வழிகாட்டியாய் விளங்க முடியும்.

கம்பன் 'பாத்திரம் சுவைசெய் பாவலன்' ஆவான். பெரும் பாத்திரமோ, சிறிய ஒன்றோ, ஒரு காட்சியில் தோன்றி மறையும் பாத்திரமோ, எதனையும் சுவை குன்றாது ஒரே விதமான கலையழகுடன் படைக்கவல்ல கவிதைத் தச்சன். சீதா பிராட்டியை எவ்விதம் 'காந்தையருக்கு அணி' எனக் காட்டினானோ அவ்விதம், அதற்கு ஒரு மாற்றும் குறையாது அவள் தோழியாய் ஒரே ஓரிடத்தில் வந்து போகும் நீலமாலையை யும் 'சுந்தரி'யாய்க் காட்டவல்ல ஓவியக் கவிஞன். அப்படிப்பட்ட கவிச்சக்கரவர்த்தி அநுமனைப் படைத்துக் காட்டும் விதம் ஒப்பற்றது. உடலாற்றல் நிறைந்த ஒருவன் அறிவாற்றலும் நிரம்பி யிருத்தல் உலக வழக்கில் அதிசயமே. கம்பன் அநுமனைப் பேரறிஞனாகவும், அதே சமயம் பெருவீரனாகவும் காட்டுகிறான். 'வீங்கிய வீரன்', 'வீரருள் வீரன்', 'வெந்திறல் வீரன்' என்றெல்லாம்

அவன் ஆற்றலைப் பாடும் கம்பன், இராமன் கூற்றாகப் 'பேரறிவாளன்' என்று புகழ் பாடிடுவான். வீடணனை ஏற்றுக் கொள்ளலாமா என்று தன் துணைவரையெல்லாம் கேட்ட இராமன் அநுமனிடம் கேட்பதை இதோ, கம்பன் வாயிலாய்க் காண்போம் :

**"உறுபொருள் யாவரும் ஒன்றக் கூறினார்**
**செறிபெருங் கேள்வியாய்! கருத்து என்? செப்புஎன,**
**நெறிதரு மாருதி என்னும் நேர்இலா**
**அறிவனை நோக்கினான், அறிவின் மேல்உளான்."**

**(யு.கா.6448)**

நெறிதரு மாருதியாம், நல்வழி காட்டும் அநுமனைச் 'செறிபெருங் கேள்வியாய்!' என இராமன் விளிக்கிறான். இறுதி அடியில் உள்ளது முத்தாய்ப்பு! "அறிவனை நோக்கினான் அறிவின் மேல்உளான்"; அதுவும் நேர்இலா அறிவன்; அநுமனுக்கு நிகர் அவனேயாம். அப்படிப்பட்ட அறிவனை நோக்கியவன் யார்? 'அறிவின் மேல்உளான்' ஆகிய இராமன். அறிவின்மேல் உளனாகியவனே கருத்துக் கேட்கும் அளவுக்கு, 'செறிபெருங் கேள்வியன்' என்னுமளவுக்கு, 'நேர் இலா அறிவன்' அநுமன் ஆவான் என்றால், 'பேரறிவாளன் அநுமன்' என்பதில் ஐயமுண்டோ? பேராசிரியர் ரெட்டியாரவர்கள் அப்படி மாருதி நுணங்கிய கேள்வியனாய் வடித்துச் சொல்லும் 18 காரணங்களை மிக அழகாகத் தொகுத் துச் சொல்கிறார்கள், 'குணக்குன்றன்' என்ற கடைசிப்பகுதியில் 'சமயோசித புத்தி' என்ற தலைப்பில்.

'கவிக்கு நாயகன்' என்ற தலைப்புடைய முதல் இயலில் 'இராகவன் புகழினைத் திருத்தும்' என்ற தொடருக்குப் பேராசிரியரவர்கள் விளக்கம், செவிக்குத் தேனாய்த் தித்திக் கின்றது. இராமகாதை மங்களகரமாய் முடியக் காரணனாய் அமைந்தவன் என்பது எப்படி என்ற பேராசிரியரின் ஆய்வு, சிந்தைக்கும் தேனாய் இனிக்கின்றது.

'விழையும் உருவினன்' என்ற நான்காவது பகுதி, இதுவரை அநுமனைப்பற்றி யாரும் சிந்தித்திராத முயற்சி. எங்கெல்லாம் அநுமன் பேருருவம் எடுக்கிறான், அதன் நயம் என்ன என்று பட்டியலிட்டுக் காட்டியுள்ளது 'அருங்கலைக்கோன்' அவர் கட்கே உரித்தான அரிய ஆய்வு.

இப்படியெல்லாம் அநுமனை ஒவ்வொரு புதுக் கோணத்திலும், யாரும் கண்டு காட்டியிராத முயற்சியிலும் ஈடுபடுவதுதான் பேராசிரியர் ரெட்டியாரவர்கட்கே கைவந்த

கலை. இந்நூலில் காணப்பெறும் ஒவ்வோர் இயலும், ஒவ்வொரு கோணத்தில் அநுமனை முழுவதுமாய்க் காட்டிடும் புதிய பார்வை வீச்சுகள்; முழுப்பார்வை முயற்சிகள்; பேருருவ தரிசனங்கள். 'கவிக்கு நாயகன்', 'சிந்தனைச் செம்மல்', 'இராம பக்தன்' என்னும் பகுதிகள் அநுமனின் மனோ பலத்தையும், 'சொல்லின் செல்வன்', 'இராம தூதன்', 'குணக்குன்றன்' என்னும் பகுதிகள் அநுமனின் வாக்கு பலத்தையும், 'அஞ்சா நெஞ்சன்', 'விழையும் உருவினன்' என்பன அநுமனின் காய பலத்தையும், மொத்தத்தில் அநுமனின் பேருருவைக் கண்ட மகிழ்ச்சியை நம்முள் உண்டாக்குவன.

நூன்முகத்தில் ஆசிரியரே சொல்லுவது போல, இராம பக்தனாகிய அநுமனைப்பற்றி எழுதிய இந்நூலும் எட்டெழுத்து மந்திரம் போல, எட்டுப் பகுதியாய் அநுமனின் எண்குணங்களை விரித்துச் சொல்கிறாற்போல அமைந்ததுவும் அவன் திருவுளமேயாம்.

'சுப்பு ரெட்டியாரா, சுறுசுறுப்பு ரெட்டியாரா?' என்று எண்பத்து ஏழாண்டான வயதில் இவர்கள் உழைப்பும் முயற்சியும் நம்மை வியக்க வைக்கின்றன. அவர் வணங்கும் அந்த வேங்கடவனை, வேண்டுவார்க்கு வேண்டுவன ஈந்து நலந்தரும் நாராயண நாமத்தானை, அவர் நூற்றாண்டு கண்டு, இன்னுமொரு நூறு நூல்கள் தமிழ் இலக்கிய உலகிற்கு விருந்தாகச் செய்தளிக்கப் பிரார்த்திப்பது அல்லால், வேறென் செய்ய வல்லோம்?

**"அடியார்கள் வாழ! அரங்கநகர் வாழ!**
**சடகோபன் தண்தமிழ்நூல் வாழ! - கடல்சூழ்ந்த**
**மண்உல கம்வாழ! 'வேங்கடம்' உறைரெட்டியே!**
**இன்னும்ஒரு நூற்றாண்டு இரும்!**

**இனிய தமிழ்ப்பிழிவாய் உன்னிலிருந்து**
**இன்னும் ஒருநூறு நூல்கள்வரும்!**

**- கம்பன் அடிசூடி**

**'சரணம்'**
**வி 110/1, அண்ணா நகர்,**
**சென்னை - 600 040.**

# நூல் முகம்

“அஞ்சிலே ஒன்று பெற்றான்,
அஞ்சிலே ஒன்றைத் தாவி,
அஞ்சிலே ஒன்று ஆறுஆக,
ஆர்உயிர்க் காக ஏகி,
அஞ்சிலே ஒன்று பெற்ற
அணங்கைக்கண்டு, அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான்,
அவன்நம்மை அளித்துக் காப்பான்” [1]

- கவிநாயகன் கம்பன்

*இராம காதையில் வரும் கதை மாந்தர்களுள் ஈடும் எடுப்பும் அற்றவன், அநுமன். வீடு பேற்றையும் வேண்டாத விறலினன்; இராமபிரானின் புகழ் பாடி, இராம நாமத்தை உச்சரித்துக்கொண்டு சிரஞ்சீவியாக நம்மிடையே இன்றும் இருப்பவன்; என்றும் இருந்துகொண்டிருப்பவன். இவனைப் பற்றி எழுத நினைத்தது 1948இல். அஃது இராமபிரான் அருளால் இரண்டாயிரம் ஆண்டு முடிந்து மூன்றாயிரம் ஆண்டுத் தொடக்கத்தில் என் முதல் நூலாக (121ஆவது நூலாக) வெளிவருவது இராமபிரானின் சித்தம் போலும்!*

*காலத்திற்கேற்ற நூல்களை வெளியிட்டுத் தமிழ் நாட்டில் சிறந்த முறையில் தமிழ்ப்பணியாற்றிவரும் பழநியப்ப சகோதரர்கள், இந்தச் சிறிய நூலையும் மனமுவந்து ஏற்று வெளியிட்டமைக்கு அவர்கட்கும், நூலைச் செவ்விய முறையில் அச்சிட்டுக் கற்போர் கரங்களில் கவினுடன் தவழச் செய்த ஏஷியன் அச்சகத்தாருக்கும் என் மனமுவந்த நன்றி என்றும் உரியது.*

*கம்பன் புகழ் பாடிக் கன்னித்தமிழ் வளர்க்கப் பிள்ளையார் சுழி போட்டுப் பல்லாண்டுகளாகக் கம்பன் திருநாள் நடத்தி வந்த ‘கம்பன் அடிப்பொடி’ சா.கணேசனாருக்குப் பின்னர், முக்கிய வில் விசையாக இருந்து நடத்தி வருபவர் ‘கம்பன் அடிசூடி’ பழ. பழநியப்பன்.*

*1. கம்பராமாயணம் - காப்பு*

இவர் சென்னைக் கம்பன் கழகச் செயலராக இருந்து நடத்தி வரும் விழாக்களின் சிறப்பைச் சென்னை நகர் கம்பன் சுவைஞர்களும் பிற இடங்களிலுள்ள கம்பன் பக்தர்களும் நன்கு அறிவர். அடியேன் காரைக்குடியில் வள்ளல் அழகப்பர் நிறுவனம் ஒன்றில் பணியாற்றிய காலம் முதல் (1950 முதல்) இவர்தம் தந்தையார் பழநியப்பச் செட்டியாரை நன்கு அறிவேன். அவர்தம் ஒரே மகன், நம்மிடையே உள்ள இந்தப் பழ. பழநியப்பன். பள்ளியில் படிக்கும்போது நான் இவரிடம் கண்ட துடிப்பும் சுறுசுறுப்பும் இன்னும் குறையாமல் இருந்து வருவதைக் கண்டு மகிழ்பவன்; பெருமை கொள்பவன். இந்தக் கம்பன் அடிசூடியின் அணிந்துரை இந்நூலை அணி செய்வது இந்நூலின் பேறு; அடியேனின் பேறுங்கூட.

நீதியரசர் **டாக்டர் மு.மு.இஸ்மாயீல்** உயர்குணச் செம்மல். மேலிடத்தின் கருத்து வேறுபாட்டின் காரணமாகத் தலைமை நீதிபதிப் பதவியைத் துச்சமாக எண்ணி உதறித் தள்ளிச் 'சித்திரத்தின் அன்றலர்ந்த செந்தாமரை' முகத்துடன் திகழும் குணப்பெருமகனார். கடந்த ஐம்பதாண்டுகட்குமேல் கம்பன் காவியத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்த சுவைஞர் மாமணி. இவர் சென்னைக் கம்பன் கழகம் கண்டு, அதன் தலைவராக இருந்துகொண்டு, விழாக்களைச் சீரும் சிறப்புமாக நடத்தி வருபவர். தவிர, மாவட்டந்தோறும் கம்பன் கழகங்கள் அமைய முதற்காரணமாக இருந்து, அவை சிறப்புடன் இயங்கிவரக் கண்காணித்து வருபவர். அடியேன் திருப்பதியிலிருந்த காலம் (1960-77) முதல் இவரை நன்கு அறிவேன்; சென்னையில் குடியேறிய பிறகு (1978 சனவரி முதல்) இவரிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்புகள் பெற்றவன். எல்லோரிடமும் இன்முகத்துடன், சமயக் காழ்ப்பற்று மனித நேயத்துடன் பழகிவரும் டாக்டர் ஜஸ்டிஸ் அவர்கட்கு இந்நூலை அன்புப் படையலாக்கிப் பெருமகிழ்ச்சி அடைகின்றேன்; இதனைப் பெரும் பேறாகவும் கருதுகின்றேன்.

அடியேனுக்கு எல்லா நலன்களையும் ஈந்து, உடல் நலத்துடனும் மனவளத்துடனும் வாழ அருள் சுரந்து, எட்டெழுத்து மந்திரம் போல் எட்டு இயல்களாக அமைந்த இந்நூல் எழுதவும் வெளிவரவும் நிமித்த காரணமாக

*இருந்து, என் இதயத்தில் நிரந்தரமாக எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் ஏழுமலையப்பன் திருவடிகளை வாழ்த்தி வணங்கி அமைகின்றேன், கம்பனின் கடவுள் துதியுடன்.*

“ஒன்றே என்னின் ஒன்றேயாம்;
பலவென்று உரைக்கின் பலவேயாம்;
அன்றே என்னின் அன்றேயாம்;
ஆம்என்று உரைக்கின் ஆமேயாம்;
இன்றே என்னின் இன்றேயாம்;
உளதுஎன்று உரைக்கின் உளதேயாம்;
நன்றே நம்பி குடிவாழ்க்கை
நமக்குஇங்கு என்னோ பிழைப்பம்மா !” [2]

‘வேங்கடம்’,
ஏடி - 13, அண்ணா நகர்,
சென்னை - 600 040.
தொ.பே. : 26211583

ந. சுப்பு ரெட்டியார்

---

*2. கம்ப. யுத்த. கடவுள் வாழ்த்து*

# உள்ளுறை

# 1. கவிக்கு நாயகன்

சீதாப்பிராட்டியைத் தேடிக்கொண்டு இலங்கை நகர் முழுவதும் தேடிச் செல்லும் அநுமன், கும்பகர்ணனின் உறையுள் சென்று அதனைக் கடக்கும் நிலையைக் கூறும் கம்பநாடன்,

> "செவிக்குத் தேனென இராகவன்
> புகழினைத் திருத்தும்
> கவிக்கு நாயகன் அனையவன்
> உறையுளைக் கடந்தான்"[1]

என்று கூறுவான். இப்பகுதிக்கு அடியிற்கண்ட மூன்று பொருள்கள் கிடைக்கின்றன.

(1) 'வான்மீகத்திலுள்ள இராம சரித்திரத்தைத் தேவையான இடங்களில் மாற்றி - திருந்தச்செய்து - கேட்போர் செவிக்கு இனிமையாக இருக்குமாறு - தேனாக இருக்குமாறு - செய்த கவிக்கு நாயகன் - கவிகளுக்கெல்லாம் தலைவன் - கவிச்சக்கரவர்த்தி - கம்பநாடன்' என்பது ஒன்று.

இதனை நாம் ஈண்டுக் கருதவில்லை.

(2) 'இராமபிரானது புகழ் அமிழ்தம் கேட்பவர் செவிகளுக்கு இனிமை தரும்; தேனாக இனிக்கும்'; 'இராமபிரானது புகழைத் தனது செவிகளுக்குத் தேனாக அழகியதாகக் கொள்ளும் கவிக்கு நாயகன் - வானரத் தலைவன்' என்பது இரண்டு[2].

---

1. சுந்தர - ஊர்தேடு. - 132

2. 'எந்தெந்த இடங்களிலெல்லாம் இராமகதை சொல்லப் பெறுகின்றதோ அந்தந்த இடங்களிலெல்லாம் அநுமன் தலைமேற் கூப்பிய கையனாய் நின்று ஆனந்தக் கண்ணீர் ததும்ப, அச்சரித்திர அமிழ்தத்தைச் செவியிலேற்றுப் பருகிக் களிக்கின்றனன்' என்று சொல்லுவார், இராம பக்தர்கள்.

(3) இராமசரிதம் நடைபெறுகிற முறையில் அமைந்து விட்டால் (அநுமன் இல்லாவிட்டால்) அது துன்ப நிலையில் முடிவதாக அமைந்திருக்கும். **கவிக்கு நாயகனான அநுமனே** அதில் நடைபெற்ற கோணல்களை நிமிர்த்திக் (திருத்தி என்பதற்குத் திருந்தச்செய்து என்று பொருள் கொள்ள வேண்டும்) கதை மங்களகரமாக முடியக் காரணமாக இருந்தவன்' என்பது **மூன்று**.

இந்த **மூன்றாவது** கருத்தை ஆழ்ந்து சிந்திப்பதே இப்பகுதியின் நோக்கம்.

**(1) இராம - சுக்கிரீவ நட்பு :** இராமகாதையில் இஃது உயிராய ஏற்பாடு. இந்த ஏற்பாட்டை மிக்க சாமர்த்தியமாகச் செய்தவன், அநுமன். முதலில் வாலி அரசு ஒன்றுதான் இருந்தது. சகோதரர்களிடையே கருத்து மாறுபாடு ஏற்பட்டது. ஒருசமயம் வாலி தன் தம்பி சுக்கிரீவனைக் கொல்லவே நினைத்தான். அதனால் சுக்கிரீவன், அநுமன் உட்பட சில நல்ல வானரர்களுடன் கிட்கிந்தையை விட்டு வெளியேறி, ஒரு முனிவர் சாபத்தால் வாலி புகமுடியாத ருசியமுக பர்வதம் என்ற பகுதியில் வாழ்ந்து வருகின்றான். இராமலக்குமணர்கள் பிராட்டியைத் தேடிக்கொண்டு அவ்வழியாக வந்தபோதுதான் இந்த நட்பு ஏற்படக் காரணமாகின்றது; இதனை ஏற்படுத்தியவன் "தன் பெருங்குணத்தால் தன்னைத் தானலது ஒப்பிலாதான்" (அநுமப்-11) என்று கம்பனால் போற்றப்பெறும் மாருதி.

தன் அண்ணனால் நையப் புடைக்கப்பெற்ற சுக்கிரீவன் வாலியைச் 'சிம்ம சொப்பனமாக'க்கொண்டு நடுங்கிக் கொண்டிருப்பவன். இராமலக்குமணர்கள் தானிருந்த மலையின்மேல் ஏறி வருவதைக் கண்ட சுக்கிரீவன் 'வருகிற இருவரும் நமக்குப் பகைவர்கள்' என எண்ணி அஞ்சி ஓடி அம்மலையின் குகையொன்றினில் ஒளிந்துகொள்ளுகின்றான்.

மாருதி சிறந்த சிந்தனைச் செல்வனாதலால் வானர வீரர்களுடன் சுக்கிரீவன் இருக்குமிடம் அடைந்து, 'வந்து கொண்டிருக்கின்ற வீரர்கள் இருவரும் வாலியின் ஏவலால்

வருகின்றவர்கள் அல்லர்; தளர்கின்ற நிலைமையுடைய வர்கள்" என்பதைத் தனது ஞானத்தால் ஆலோசித்து அறிந்து, மலை முழையில் பதுங்கியிருந்த சுக்கிரீவனுக்குத் தேறுதல் கூறுகின்றான். பின்னர், மாணி வடிவத்துடன் இராம லக்குமணர்களை அணுகி, அவர்களுடன் விநயமாகப் பேசியும், மீண்டு வந்து சுக்கிரீவனுடன் தெளிவாகப் பேசியும் இருவர்களிடையும் நேசத்தையும் பாசத்தையும் உண்டாக்கி விடுகின்றான். இஃது அநுமனின் செயற்கருஞ்செயல்! இதனால் இராமகாதை இனிதாக நடைபெற வழி அமைகின்றது.

(2) இராமலக்குமணர்கள் சுக்கிரீவன் இருப்பிடத்துக்கு எழுந்தருள்கின்றனர், அவன் வேண்டுகோட்கிணங்கி. இராமன் நீராடி விருந்துண்டபின் இனிமையாக இராமனும் சுக்கிரீவனும் அளவளாவுகின்றனர். சுக்கிரீவனுடைய இல்லக் கிழத்தி இராமன் கண்ணில் படவில்லை.

"பொருந்து நன்மனைக்
குரிய பூவையைப்
பிரிந்து ளாய்கொலோ நீயும்!"[3]

என்று இராமன் சுக்கிரீவனை அன்பினால் வினவுகின்றான். அதற்கு அநுமன் விடை கூறத் தொடங்கி, "வாலி யென் றுளான் வரம்பி லாற்றலான்" என்ற வாலியின் வரலாற்றைக் கூறுமுகத்தான் இராமன் வினாவுக்கு விடை தருகின்றான்[4]. பேச்சின் இறுதியில்,

"உருமை யென்றுஇவற்கு
உரிய தாரமாம்
அரும ருந்தையும்
அவன்வி ரும்பினான்
இருமை யுந்துறந்து
இவன்இ ருந்தனன்"[5]

என்று கூற இராமன் வாலியின்மீது சினங்கொள்ளுகின்றான். இராமபிரான் வாலியைக் கொல்வதாகவும் உறுதி கூறுகின்றான்.

---

3. கிட்கிந்தை - நட்புக்கோள். 35
4. நட்புக்கோள் - 37 - 72
5. நட்புக்கோள் - 67

"தலைமை யோடுநின் தாரமும்
உனக்கின்று தருவென்"[6]

எனபது இராமனது திருவாக்கு; உறுதிமொழி. இங்ஙனம் அநுமன் வாலி வதத்திற்கு வழியமைத்தலால் இராமகாதை இனிது நடைபெற வழி அமைகின்றது.

*(3) பிராட்டியைத் தேட நான்கு திசைகளிலும் வானர சேனைகளுடன் வீரர்களை அனுப்புகின்றான், சுக்கிரீவன். தென்திசைக்கு அங்கதன் தலைமையில் அநுமன், சாம்பவான் ஆகியவர்களுடன் இரு வெள்ளச் சேனையை அனுப்புகின்றான். சிறப்பாகத் தென்திசையில் தேட வேண்டிய இடங்களை ஒவ்வொன்றாகச் சொல்லி அனுப்பு கின்றான். அநுமனிடம் பிராட்டியைப்பற்றிய அடையாளங் களைக் கூறித் தன் கணையாழியையும் தருகின்றான், இராமன். வானரர் பல இடங்களில் பிராட்டியைத் தேடிக்கொண்டு மகேந்திர மலைக்கு வருகின்றனர்; சம்பாதியைக்[7] காண்கின்றனர்; பின்னர் அவனால் இலங்கைக்கு வழி அறிகின்றனர். அநுமன் பேருருவம் கொண்டு இலங்கையை நோக்கி வான் வழியாகப் புறப்படுகின்றான். இலங்கையில் அசோக வனத்தில் பிராட்டியைக் கண்டு அவளிடம்* **'சூளாமணி'** *பெற்றுப் பல்வேறு போர்கள் செய்து வெற்றி வாகையுடன் இராமனை அடைகின்றான். சீதையைக் கண்டதாக விரிவாகக் கூறும் கவிதைகள் யாவும் உள்ளத்தை உருக்குபவை. அவற்றிலுள்ள,*

"உன்பெருந் தேவி என்ற
உரிமைக்கும்" (59)

"உன்குலம் உன்ன தாக்கி
.........................................
என்குலம் எனக்குத் தந்தாள்" (61)

"இற்பிறப்பு என்ப தொன்றும்
இரும்பொறை என்ப தொன்றும்
கற்பெனும் பெயர தொன்றும்
களிநடம் புரியக் கண்டேன்" (62)

*6. நட்புக்கோள் - 70*

*7. சம்பாதி - நன்றாகப் பறப்பவன் என்று பொருள் கூறுவர்.*

"வேலையுள் இலங்கை என்னும்
விரிநகர் ஒருசார் விண்தோய்
காலையும் மாலை தானும்
இல்லதோர் கனகக் கற்பச்
சோலைஅங் கதனுள் உம்பி
புல்லினால் தொடுத்த தூய
சாலையில் இருந்தாள் ஐய!
தவம்செய்த தவமாம் தையல்" (64)

"சோகத்தாள் ஆய நங்கை
கற்பினால் தொழுதற்கு ஒத்த
மாகத்தார் தேவி மாரும்
வான்சிறப்பு உற்றார் மற்றைப்
பாகத்தாள் அல்லள் ஈசன்
மகுடத்தாள் பதுமத் தாளும்
ஆகத்தாள் அல்லள் மாயன்
ஆயிரம் மோலி யாளல்" (67)[8]

என்ற பாடல் தொடர்களும் பாடல்களும் உள்ளத்தை உருக்குபவை; 'சொல்லின் செல்வனின்' வாக்கு வன்மைக்குச் சான்றாகத் திகழ்பவை. அநுமன் பிராட்டியைக் கண்டு செய்தியை இராகவனுக்குச் சொல்லியிராவிடில், இராம காதை அவலத்தில் முடிய ஏதுவாயிருந்திருக்கும்.

**(4) மருத்துமலை கொணர்தல் :** இருமுறை அநுமனால் மருத்துமலை கொணரப்பெறுகின்றது. இந்நிகழ்ச்சிகள் நடைபெறாமல் போயிருப்பின் இராமகாதை செவிக்குத் தேனென இனித்திராது. துன்பக் கதையாக முடிந்திருக்கும்.

**(அ) முதல் முறை :** மகரக் கண்ணன்[9] முதலியோரின் வதைக்குப் பிறகு இந்திரசித்தன் போர்க்களம் புகுகின்றான். இலக்குவனுக்கும் இந்திரசித்துக்கும் கடுமையான போர் நிகழ்கின்றது. இராமன்கூட இலக்குவனின் போர்த்திறத்தை

---

8. இவற்றிலுள்ள பாடல்களின் எண்கள் திருவடி தொழுத படலத்தில் உள்ள பாடல்களின் எண்கள் (வை.மு.கோ. பதிப்பு)

9. மகரக் கண்ணன் : மகராட்சன் என்பதன் பரியாயம். இவன் மகரம் போன்ற கண்ணையுடையவன் என்பது பொருள். இவன் கரனுடைய மகன். படைத்தலைவர்கள் இறந்தொழிந்ததைக் கேட்ட

வியந்து போற்றுகின்றான். அவன் ஆரவாரம் செய்யுமாறு வானரர்கட்குக் கட்டளையிட அவர்களும் அவ்வாறே செய்கின்றனர்.[10] ஒரு நிலையில் இந்திரசித்து எவரும் உணராதவாறு வானத்தில் மறைந்திருக்கின்றான். இந்நிலையில் மகோதரனின் மாயப் போரினால் இந்திரன், தேவர் முதலியோர் வானரர்மீது பொரவருவது போன்ற ஒரு மாயத்தோற்றம் நிகழ்கின்றது.[11] இதைப்பற்றி இலக்குவன் வினவிக்கொண்டிருக்கையில் இந்திரசித்து இலக்குவன்மீது நான்முகன் கணையை விடுகின்றான். அதனால் இலக்குவன் அறிவொடுங்குகின்றான்; அநுமனும் சோர்ந்து விழுகின்றான்.[12] வானர சேனை முழுவதற்கும் இதே நிலைதான். உணவு கொண்டுவரச் சென்ற வீடணன் திரும்பிய நிலையில் அனைத்தும் நான்முகன் கணையின் விளைவு என்பதை உணர்ந்து கழுவாய் காண முயல்கின்றான். முதலில் அநுமனைக் கண்டு, அவனுடைய உடலம்புகளைக் களைந்து அவனுடைய அயர்ச்சியைப் போக்குகின்றான்.[13] சாம்பவானைக் கண்டால் வழி பிறக்கும் என்று கருதி அநுமனும் வீடணனும் அவனிடம் வருகின்றனர்.[14] அநுமனைக் கண்ட சாம்பவான் "இனி யாவரும் உய்ந்தோம்" என்று கூறி மகிழ்கின்றான்.[15]

மருந்து கொணரும் பொறுப்பு அநுமனால்தான் முடியும் எனக் கூறி, மருத்துமலை உள்ள இடத்திற்கு

---

இராவணன் வருந்தியபோது, 'இவன் தன்னை ஏவின் தன் தந்தையைக் கொன்ற பழம் பகைவனைக் கொன்று தீர்வதாகச் சொன்னதால் இராவணன் இசைவு தர, இருபது வெள்ளச் சேனையுடனும் இரக்தாட்சன், சிங்கன் என்ற தேர்ச்சக்கரக் காவலர்கள் உடன்வரப் போர்க்களத்துக்குச் சென்றவன்.

*10. யுத்த. பிரமாத்திரப் - 79*

*11. யுத்த. பிரமாத்திரப் - 170*

*12. யுத்த. பிரமாத்திரப் - 173, 174*

*13. யுத்த. மருத்துமலைப்பட - 11, 12*

*14. யுத்த. மருத்துமலைப்பட - 19*

*15. யுத்த. மருத்துமலைப்பட - 20*

வழிவிவரங்களைத் தருகின்றான்.[16] அநுமன் பேருருவம் கொண்டு புறப்படுகின்றான்.[17] பல இடங்களைக் கடந்து இறுதியில் மருத்துமலையை அடைகின்றான்.[18] அதனை வேருடன் பெயர்த்தெடுத்துக் கையிலேந்திக்கொண்டு விரைந்து திரும்புகின்றான்.

**" இங்குநின்று இன்னன**
**மருந்தென்று எண்ணினால்**
**சிங்குமால் காலம்என்று**
**உணர்ந்த சிந்தையான்**
**அங்கது வேரொடும்**
**அங்கை தாங்கினான்**
**பொங்கிய விசும்பிடைக்**
**கடிது போகுவான்."** [19]

*(இன்னன - இன்னவை, விசும்பு - ஆகாயம்)*

*வாயு பகவான் அநுமன் கொண்டுவரும் மலையின் மீதுள்ள மருந்தில் பட்டு வீசிச் சுக்கிரீவன் முதலியோரை ஆர்த்தெழுமாறு செய்துவிடுகின்றான். இலக்குவன் உயிர் பெற்று எழுகின்றான். இராமன் தன் தம்பியைத் தழுவி மகிழ்கின்றான்.*

*(ஆ) இரண்டாம் முறை : மூலபலம் வதை முடிவுற்றதும் இராவணன் தேரேறிப் போர்க்களத்திற்கு வருகின்றான். கடுமையான போர் நிகழ்கின்றது. இலக்குமணனும் இராவணனும் நெருங்கிப் பொருகின்றனர்.[20] இலக்குவனது வலிமை கண்டு இராவணன் மோகனாஸ்திரத்தை விடுகின்றான். வீடணன் யோசனைப்படி இலக்குவன் திருமாலின் படைகொண்டு அதனை அழிக்கின்றான்.[21]*

*இதனால் இராவணன் தன் தம்பி வீடணன்மீது சீற்றம் கொண்டு அவன்மீது மயன் தந்த வேலை ஏவுகின்றான். அது தன் உயிரை மாய்க்கும் எனத் தெரிவிக்க, இலக்குவன்*

*16. யுத்த. மருத்துமலைப்பட - 24 - 27*
*17. யுத்த. மருத்துமலைப்பட - 30*
*18. யுத்த. மருத்துமலைப்பட - 60*
*19. யுத்த. மருத்துமலைப்பட - 63*
*20. யுத்த. வேலேற்ற படலம் - 19, 20*
*21. யுத்த. வேலேற்ற படலம் 21 - 24*

*'அஞ்சற்க' என்று கூறிப் பல அம்புகளைக்கொண்டு தடுக்க முயல்கின்றான், அம்புகளினால் பயன் இல்லை.*[22] *உடனே அபயங்காத்தற்பொருட்டு இலக்குவன் வேலுக்கு எதிரே நிற்கின்றான். இலக்குவனுக்கு முன்னே வீடணன் புகுபவனானான். அவ்விருவரையும் விலக்கி அங்கதன் முன்னே செல்பவனானான். வானரத் தலைவனான சுக்கிரீவன் அங்கதனை விலக்கித் தான் முன் சேர்பவனாகின்றான்; அநுமன் அவனினும் விரைந்து முந்துபவனாகின்றான். இறுதியாக இலக்குவன் அவ்வேலைத் தன் மார்பில் ஏற்றுத் தியாகச் செம்மலாகின்றான்.*[23] *இராவணன் இலங்கைக்குத் திரும்பிவிடுகின்றான்.*

*இலக்குவன் இறந்தபின் தான் இருப்பதால் பயன் இல்லை என்று வீடணன் இறக்க முயலச் சாம்பவான் அவனைத் தடுக்கின்றான். 'அநுமன் இருக்கையில் ஆருயிர்க்கு இரங்குவதறிவோ?.. சிறிதும் அல்லலுற்று அழுங்கன்மின்'*[24] *என்று சாம்பவான் தேற்றி அநுமனை மருந்து கொணருமாறு பணிக்கின்றான்.*[25] *முன்னொரு முறை அரிதில் தேடிக் கண்டுபிடித்து மருத்துமலையைக் கொணர்ந்து வந்துள்ள அநுமன் இப்போது எளிதிற் கொணர்கின்றான்.*[26]

**" தந்தனன் மருந்து தன்னைத்**
**தாக்குதல் முன்னே யோகம்,**
**வந்தது மாண்டார்க்கு எல்லாம்**
**உயிர்தரும் வலத்தது என்றால்,**
**நொந்தவர் நொய்வு தீர்க்கச்**
**சிறிதன்றோ நொடித்தல் முன்னே**
**இந்திரன் உலகம் ஆர்க்க**
**எழுந்தனன் இளைய வீரன்"** [27]

*(யோகம் - நினைவு; நொய்வு - நோய்; நொடித்தல் - கண நேரம்; ஆர்க்க - ஆரவாரிக்க)*

---

*22. யுத்த. வேலேற்ற படலம் - 27, 28, 29*
*23. யுத்த. வேலேற்ற படலம் - 30, 31, 32*
*24. யுத்த. வேலேற்ற படலம் - 39*
*25. யுத்த. வேலேற்ற படலம் - 40*
*26. யுத்த. வேலேற்ற படலம் - 41*
*27. யுத்த. வேலேற்ற படலம் - 42*

*இளைய பெருமாள் பிழைத்துக்கொள்ளுகின்றான். இந்த இருமுறைகளிலும் அநுமன் தலையீடு இராவிடில் இராமகாதையின் போக்கு எப்படிப் போயிருக்கும் என்பதை நாம் உய்த்து உணரலாம் அல்லவா?*

*(5) இவை மட்டுமா? பதினான்கு ஆண்டுகள் நிறைவுற்று இராமன் அயோத்திக்குத் திரும்புகையில், இராமன் பரத்துவாச முனிவரின் விருந்தினனாக - சாப்பாட்டு இராமனாகத் - தங்கினபோது அநுமன் மூலம் தான் திரும்பிய செய்தியைப் பரதனுக்கு அனுப்புகின்றான். நெருப்பில் விழும் நிலையிலிருந்த பரதனிடம் இராமன் வருகையைத் தெரிவித்தமையைக் கவிஞன்,*

**"ஐயன் வந்தனன் ஆரியன் வந்தனன்**
**மெய்யின் மெய்யனை நின்னுயிர் வீட்டினால்**
**உய்யு மேயவன் என்றுரைத்து உட்புகாக்**
**கையி னால்எரி யைக்கரி ஆக்கினான்."**[28]

*என்று நயம்பட உரைப்பான். அநுமன், இராமன் கட்டளைப்படி இச்செய்தியைக் கூறி இராவிடில் இராம காதை துன்ப முடிவாக மாறியிருக்கும்.*

*இவற்றையெல்லாம் கருதியே கம்பநாடன் 'செவிக்குத் தேனென இராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகன்' என்று அநுமனைக் குறித்தனன் என்று கருதலாமல்லவா? அதனால்தான் பிறிதோர் இடத்திலும் கவிஞன்,*

**"மாணியாம் வேடம் தாங்கி**
**மலர்அயற்கு அறிவு மாண்டோர்**
**ஆணியாய் உலகுக்கு எல்லாம்**
**அறம்பொருள் நிரப்பும் அண்ணல்."**[29]

*என்று கூறினனோ என்றுகூட நம்மைச் சிந்திக்க வைக்கின்றது.*

---

*28. யுத்த - மீட்சி. 240*
*29. சுந்தர. கடல்தாவு - 26*

## 2. சொல்லின் செல்வன்

"வேட்பத்தாம் சொல்லிப்
பிறர்சொல் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார்
கோள்" (646)[1]

**தா**ம் சொல்லும்போது பிறர் விரும்புமாறு சொல்ல வேண்டும். பிறர் சொல்லும்போது அச்சொல்லின் பயனை ஆராய்ந்து ஏற்றுக்கொள்ள வேண்டும். இது மாசற்ற சிறப்புடையவரின் கொள்கையாகும். இங்ஙனம் வள்ளுவர் பெருமான் சொல்லின் சிறப்பைப் பேசுவர். இதற்கு எல்லா வகையிலும் எடுத்துக்காட்டாகத் திகழ்பவன் "தன் பெருங்குணத்தால் தன்னைத் தானலாது ஒப்பிலாதான்"[2] என்று கம்பனால் போற்றப்பெறும் அநுமன். இவனே 'சொல்லின் செல்வன்' ஆகின்றான். 'சொல்லின் செல்வன்' என்றால் சந்தர்ப்பத்திற்கு ஒவ்வாத அழகுக்காகவும், அணி நயத்திற்காகவும், கேட்போர் கைதட்டலுக்காகவும் சொற்களை அடுக்கிச் 'சொல்லடுக்குகளாகப் பேசி உதிர்க்கும் சொல் திறமை உடையவன் என்று பொருள் அன்று. நயமாக, விநயமாக, நாநயம்படப் பேசப்பெறும் சொற்கள் கலந்த பேச்சே அது. அத்தகைய பேச்சை இயல்பாக உடையவன், அநுமன். முதல் சந்திப்பிலேயே அவன் பேச்சில் மயங்கிய இராமன் இவனை - இவன் திறமையை - அறுதியிட்டு இலக்குவனிடம்,

"மாணியாம் படிவம் அன்று
மற்றுஇவன் வடிவம் மைந்த!
ஆணிஇவ் வுலகுக்கு எல்லாம்
என்னலாம் ஆற்றற்கு ஏற்ற

---

*1. குறள் - சொல்வன்மை - 6*
*2. கிட்கிந்தை - அநுமப் - 11*

சேணுயர் பெருமை தன்னைச்
சிக்கறத் தெளிந்தேன்" [3]

*(மாணி - பிரம்மச்சாரி, ஆணி - அச்சாணி; சேண்உயர் பெருமை - அதிகமான மகிமை; சிக்கு அற - ஐயம் இன்றி)*

*என்று சொல்லுவதைக் காணலாம். உருவத்தைக் கண்டு ஒருவரை எடை போடக்கூடாது என்று வள்ளுவர் கூறும் உண்மையை,*

"உருவுகண்டு எள்ளாமை
வேண்டும் உருள்பெருந்தேர்க்கு
அச்சாணி அன்னார்
உடைத்து" (667) [4]

*என்னும் குறள்மூலம் ஈண்டு எண்ணல் தகும். உருளுகின்ற பெரிய தேரில் அச்சில் நின்று தாங்கும் சிறிய ஆணி போன்றவர்கள் உலகில் உள்ளனர் என்று கூறுவர். அப்பெருந்தகை அநுமனை அவ்வாறு கருதுதல் வேண்டும் என்பது குறிப்பு.*

*மேலும்,*

" இல்லாத உலகத்து எங்கும்
ஈங்குஇவன் இசைகள் கூறக்
கல்லாத கலையும் வேதக்
கடலுமே என்னும் காட்சி
சொல்லாலே தோன்றிற்று அன்றே
யார்கொல்இச் சொல்லின் செல்வன்" [5]

*என்பான் என்று கூறியவன், 'சொல்லின் செல்வன்' என்ற விருதையும் வழங்கி 'இவன் நான்முகனோ? உருத்திரனோ?' என்று அவர்களோடு ஒப்பிட்டும் பேசுவான். கம்பன் காவியத்தில் அநுமன் வாழ்க்கையில் வரும் சந்தர்ப்பங்களை யொட்டி இப்பேருண்மையைத் தெளிவாகக் காணலாம்.*

*(1) சுக்கிரீவனைக் காட்டுமாறு கேட்டபோது, தானும் தன் தம்பியும் கவிக்குலத்திறைவன் சுக்கிரீவனைக்*

*3. கிட்கிந்தை - அநுமப். - 21*
*4. குறள் - வினைத்திட்பம் - 7*
*5. கிட்கிந்தை - அநுமப் - 20*

காண்பதற்காகவே அவண் வந்ததாகக் கூறி, "நீ இன்று சொன்ன, செவ்வழி உள்ளத்தானைக் காட்டுதி தெரிய" என்று வினவுகின்றான், இராமன். அதற்குக் கோதில் சிந்தை அநுமன் கூறிய முகமன் : "ஐயன்மீர், தங்களைப் போன்ற புனிதர் யாருளர்? இங்ஙனம் ஒப்பவரில்லாத நீங்கள் எங்குலத் தலைவனிடத்து அன்பு பாராட்டி அவனைக் காண்டற்கு அணுகினீர் என்னின், அதனால் அப்பெருமகன் செய்த தவமேயாகும்" (24). "ஆதவன் புதல்வனாகிய சுக்கிரீவனை, தமையனான இந்திரன் புதல்வனான வாலி என்பவன் சிறிதும் இரக்கமின்றித் துரத்திவிட்டதனால் துன்பத்தை அநுபவித்தற்குத் தனியனாய் என்னுடன் ஒளிந்திருக்கின்றான். அவனிடம் செல்வம் வருவது போன்ற குறிப்பில் நீங்கள் வந்துள்ளீர்கள்" (25). "பலவகைப்பட்ட அறங்கள், வேள்விகள், தவங்கள் முதலியவை யாவற்றையும்விடப் புகலடைந்தோர்க்கு 'அஞ்சற்க' என்று அபயம் அளித்தலே பேரறம் என்பது பெரியோர் கருத்து." (26)[6]. "நீர் எல்லா உலகங்களையும் காக்கும் முழுமுதற் கடவுளின் அமிசமாதலின், நீரே எமக்குப் புகல்; உம்மைச் சரணம் அடைவதே எமக்கு எல்லா நன்மைகளையும் விளைக்கும். ஆகவே, யாம் உம்மைச் சரண் அடைவோம்." (27)[7].

இங்குப் பேரறிவினனாகிய அநுமன் இராமலக்குமணர்களின் சொரூபத்தை நன்கு அறிந்துகொண்டு பேசுவதைக் காண்கின்றோம். இப்பேச்சில் வாலி வதத்திற்கு அடிப்படை அமைத்தலையும் காணமுடிகின்றது. இவ்வாறு பீடிகை போட்டுப் பேசும் மாருதி மிக நாகரிகமாக,

> " யாரென விளம்பு கேன்நான்
> எங்குலத் தலைவற்கு உம்மை
> வீரநீர் பணித்திர்." [8]

என்று விநயமாக வினவுகின்றான், 'மெய்ம்மையின் வேலி போன்ற' அநுமன். இக்குறிப்பே நமக்கு அஞ்சனைச் சிறுவனைச் 'சொல்லின் செல்வனாக' அறிமுகப்படுத்திவிடுகின்றது.

6. "நாங்கள் நும்மைச் சரண் அடைந்துள்ளோமாதலால் எம்மைக் காக்க வேண்டியது நுமது கடன்" என்பது குறிப்பெச்சம்.
7. கிட்கிந்தை - அநுமப். - 24, 25, 26, 27
8. கிட்கிந்தை - அநுமப். - 28

*(2) சுக்கிரீவனிடம் இராமனின் சிறப்பைக் கூறுதல் :* இலக்குவன் கூற இராமனது வரலாற்றை அறிந்துகொண்ட அநுமன், அவன் திருவடிகளில் வீழ்ந்து தண்டனிட்டான். பின்னர்ச் சுக்கிரீவனைக் கொணர்வதற்காக விடைபெற்று விரைந்து செல்லலானான், இராமபிரானது அனந்த கல்யாண குணங்களையெல்லாம் நினைந்தவண்ணம். சுக்கிரீவனிடம், "பெருமானே, நீ ஐயுற்றவாறு அவன் வாலியைச் சேர்ந்தவன் அல்லன்; அவ்வாலியையே வெல்லத்தக்க மிக்க பலம் பெற்ற வீரன்" என்று கூறி அவனது மனக்கவலையை மாற்றுகின்றான்.

பின்னர் இராமனைப்பற்றியும் அவனது பெருமையைப் பற்றியும் கூறுகின்றான். இதில் மாருதியின் சொல்திறன் மனம் கவர்வதாக இருப்பதைக் காணலாம்.

மூன்று பாடல்களில் (நட்புக்கோள் படலம்) இராம லக்குமணர்களின் தன்மையை

**" மண்ணுளார் விண்ணுளார்**
**மாறுளார் வேறுளார்**
**எண்ணுளார் இயல்உளார்**
**இசையுளார் திசையுளார்**
**கண்ணுளார் ஆயினார்**
**பகையுளார் கழிநெடும்**
**புண்ணுளார் ஆருயிர்க்கு**
**அமிழ்தமே போல்உளார்" (3)**

(மண் - நில உலகம்; விண் - உம்பர் உலகம்; மாறு - பாதளம்; வேறு - வேறு உலகங்கள்; கண் - கண்ணாக)

**"ஆழியான் மைந்தர்பேர்**
**அறிவினார் அழகினார்**
**ஊழியால் எளிதினில்நிற்கு**
**அரசுதந்து உதவுவார்" (4)**

(ஆழியான் - தசரதன்; நிற்கு - உனக்கு)

**" நீதியார் கருணையின்**
**நெறியினார் நெறிவயின்**
**பேதியா நிலைமையார்**
**எவரினும் பெருமையார்**

காதிசேய் தருகடல்
கடவுள்வெம் படையினார்" (5)

(நெறிவயின் - சன்மார்க்கத்தில்; பேதியா - மாறுபடாத; காதிசேய் - விசுவாமித்திரர்)

என்று கூறுகிறான். இப்பாடல்கள்மூலம் அநுமனின் சொல் திறத்தைக் கண்டு மகிழலாம். இவற்றில் "ஊழியால் (முறைமையினால்) நிற்கு அரசு தந்து உதவுவார்" என்ற குறிப்பு கவனிக்கத்தக்கது.

"நீதியார் கருணையின் நெறியினார், பேதியா நிலைமையார் எவரினும் பெருமையார்" என்பவற்றால் 'நம்மிடத்தில் பழகியும் ஒருகால் வாலி வலியன் என்று மாறுவரோ?' என்ற ஐயத்தை ஒழிக்க வந்தன என்பதைச் சிந்திக்கலாம்.

(3) ஏழு கவிகளால் அநுமன் இராமன் பெருமையை எடுத்துக்காட்டுகளால் விளக்குகின்றான்.[9] தாடகையின் மகன் சுபாகுவைக் கொல்லுதல், தன் திருவடிப் பொடியினால் கல்லாய்க் கிடந்த அகலிகைக்கு உண்மை உருவம் நல்குதல் (6), பிராட்டியை மணக்கத் 'தியம்பகம்' என்ற வில்லை முரித்தல் (7), இளவல் பரதனுக்குக் கைகேயி கட்டளைப்படி ஆட்சியை நல்கி இராமன் வனவாசம் ஏற்றல் (8), பரசுராமனுக்குப் பங்கம் விளைவித்து, விராதனை வதைத்தல் (9), கரனையும் கடல் போன்ற அவன் சேனையையும் ஒழித்து உருத்திரன் முதலிய தேவர்களையும் வியக்கச் செய்தல் (10), சூர்ப்பணகையின் 'மூக்கும் காதும் வெம்முரண் முலைக் கண்களும்' அரியச் செய்தல், நிருத மாரீசனார் மாய மானாக வந்தபோது அவனுக்கு யமனாதல் (11), தன்னிடத்துப் பக்தி கொண்ட சபரிக்கும், தன்னை விழுங்க முயன்ற கவந்தனுக்கும் பரமபதம் அளித்தல் (12) போன்ற செய்திகளைக் கூறி இராமலட்சுமணர்களின் பெருமைகளை உணர்த்தி, இறுதியாக, 'இருடியர் முதலியோர் இவர்தம் வருகையைக் குறித்துத் தவம் செய்கின்றதனால் இவர் தீயோரை அழித்து நல்லோரைக் காக்கத் திருவவதரித்த முதற்கடவுளே' என்று அறுதியிட்டுக் கூறி, "இத்தகைய

9. கிட்கிந்தை - நட்புக்கோள் - 6 - 13.

*புகழ்மிக்கவர்கள், வஞ்சனையால் இராவணன் தூக்கிச் சென்ற பிராட்டியைத் தேடுபவர்களாக இவண் போந்தவர்கள். மனத்தூய்மையுடைய உன் உறவினை நாடுகின்றனர்" என்று முடித்து, இராமலக்குவர்களுடன் உறவு கொள்ளுமாறு ஆலோசனை கூறுகின்றான். இவைபற்றிய பாடல்களைப் படிக்கும்போது அநுமனை நாம் சொல்லின் செல்வனாகக் காண்கின்றோம்.*

*(4) இராமனுக்கு வாலியைப்பற்றிக் கூறும்போது : சுக்கிரீவன் அளித்த விருந்தில் இராமன் பங்கு கொள்ளுகின்றான். அங்குச் சுக்கிரீவனின் மனைவி இராமன் கண்ணில் படவில்லை. உடனே குரக்கரசனை நோக்கி,*

**"பொருந்து நன்மனைக்**
**குரிய பூவையைப்**
**பிரிந்து ளாய்கொலோ**
**நீயும்?"** [10]

*என்று இராமன் வினவ, அதற்கு அநுமன் விடை பகரத் தொடங்குகின்றான்.*[11] *உருக்கமான இந்தப் பேச்சில் அநுமனின் சொல்லாற்றல் தெளிவாகின்றது; சொல்லின் செல்வனாக நாம் காண்கின்றோம்.*

*"ஆதிமூர்த்தியாகிய நீதியாய், உருத்திர மூர்த்தியின் அருள் பெற்றவன், வாலி; சுக்கிரீவனுக்கு மூத்தவன்; வரம்பிலாற்றல் உடையவன். சாவா மருந்தாகிய அமிழ்தத்தைப் பெறுவதில் வாலி தனி நின்று கடைந்து அதனைப் பெற்றவன் (38). நிலம் முதலிய நான்கு பூதங்களின் ஆற்றலுடன் சக்கரவாள மலையினின்றும் இங்குள்ள மலைக்குத் தாவும் ஆற்றலுடையவன் (39). எவருடன் போர் புரியினும் அந்த எதிரியின் பாதிப்பலம் எய்தும் பேறு பெற்றவன்; நாடோறும் எட்டுத் திக்கிலும் சென்று அஷ்டமூர்த்தி எனப்படும் சிவபெருமானின் திருவடிகளைப் பணிகின்ற அன்பினன். (40)*

*"அந்த வாலியின் வேகத்திற்குக் காற்றுத்தேவனும் ஈடாகான்; கந்தவேளின் வேலும் அவன் மார்பில் நுழையாது;*

---

***10. கிட்கிந்தை - நட்புக்கோள் - 35***

***11. கிட்கிந்தை - நட்புக்கோள் - 37 - 65***

அவனது வால் சென்ற இடத்தில் இராவணனது கோல் செல்லாது; அவ்விராக்கதனது வெற்றியும் செல்லாது (41).[12] அவன் இடம்விட்டு எழுவானாயின் பெரிய மேரு முதலிய மலைகள் எல்லாம் வேரோடும் இடம்விட்டுப் பெயர்ந்து போகும்; அவனுடைய பெரிய தோள்களால் பெரிய மேகமும் ஆகாயமும் இருசுடர்களும் பர்வதங்களும் மறைந்து போய்விடும் (42). பூமியைக் கோட்டால் குத்தி எடுத்த ஆதிவராகத்தையும், மந்தர மலையைத் தாங்கி நின்ற கூர்மத்தையும் தனக்கு ஒப்பாகக் கொண்டுள்ளவன்; இரணியனது மார்பைக் கீண்ட நரசிங்கமானாலும் அவனது மார்பை எதிர்க்கவல்லதோ?(43). ஓரிடத்தில் இருந்து கொண்டு பூமியைத் தாங்கும் ஆதிசேடனும் வாலி நடந்து செல்லும்போது அவனது உடற்பொறையைத் தாங்க முடியாமல் பூமி குழிந்து அழுந்த, பூமி பிளந்திடுமோ என்று அஞ்சித் தானும் இடம் பெயர்ந்து அவனுடனே சென்று கொண்டே தாங்கி வருவன் (44).

"இடைவிடாமல் கடல் ஒலிப்பதும், காற்று சஞ்சரிப்பதும், அருக்கர் தேர்மீது செல்வதும், அவன் (வாலி) சினந்திடுவான் என்ற அச்சத்தினால் அல்லாமல் வேறொரு வகையால் ஆவனவோ? (45). வள்ளலே, வாலி வாழும்போது, அவன் அநுமதியின்றி உயிரைக் கொண்டுபோதற்கு யமனும் அஞ்சலால், மகா மேருவையும் புரட்டிட வல்ல தோள் வலிமையுடைய எழுபது வெள்ள வானரச் சேனைகள்

12. இவ்விடத்தில் 'மாருதி அல்லனாகில் நீ எனும் மாற்றம் பெற்றேன்' என்று பெருமித மனநிறைவுடன் செல்லும் அங்கதன் இராவணனுக்குப் படார்க்கையில் தன்னை வாலியின் மைந்தன் என்று கூறும்போது வரும்,

"இந்திரன் செம்மல் பண்டுஓர்
இராவணன் என்கின் றானைச்
சுந்தரத் தோள்க ளோடும்
வாலியைத் தூங்கச் சுற்றிச்
சிந்துரக் கிரிகள் தாவித்
திரிந்தனன் தேவர் உண்ண
மந்தரப் பொருப்பால் வேலை
கலக்கினான் மைந்தன் என்றான்."

(யுத்த. அங்கதன். தூது 24)

என்ற பாடலை நினைவுகூர்ந்து மகிழ்ந்து அனுபவிக்கலாம்.

அழிவில்லாமல் வாழ்கின்றன (46). வாலியின் சினத்தால் தமக்கு அழிவு நேரிடுமே என்று அஞ்சுதலால், அவன் வாழும் இடத்திற்கு நேராக மேகங்கள் இடிக்கமாட்டா; குகையில் உள்ள சிங்கங்களும் கர்ச்சிக்கமாட்டா; காற்றும் அங்குள்ள மெல்லிய இலைகளும் உதிரும்படியாக வீசாது (47). அவன் இராவணனை வாலினாற் கட்டி அலட்சியமாகத் தூக்கிக் கொண்டு எல்லா உலகங்களிலும் தாவித்தாவிச் சென்றபோது அவன் சென்ற இடங்களிலெல்லாம் அவ்வரக்கனது குருதிப் பெருக்கு சொரிந்துகொண்டே இருந்தது (48).

"வலிமையுடையவனே, வாலி தேவேந்திரனின் தப்பில்லாத புதல்வன்; முழு மதியம் விளங்கினாற்போன்ற வெண்ணிறத்தையுடையவன்; யமனுக்கும் கடப்பதற்கு அரிய ஆணையுடையவன். ஒரே தாய் வயிற்றில் சுக்கிரீவனுக்கு முன் தமையனாகப் பிறந்தவன் (49). வாலி அரசனாகவும், சுக்கிரீவன் இளவரசாகவும் இருந்து வந்த நாளில் எங்கள் கூட்டத்துக்குப் பகைவனான மாயாவி என்ற ஓர் அசுரன் எதிர்த்துப் போர் செய்தான் (50). அவ்வாலியோடு போர் செய்ய முடியாமல் பின்வாங்கிய அந்த அசுரன் 'இப்பூமண்டலத்தில் இருந்தால் வாலி தவறாமல் தன்னைக் கொல்வான்' என்று கருதிப் பாதாள லோகத்தில் ஒளிப்பதற்காகப் பாய்ந்து செல்லுவதற்கு அருமையான பூமியின் கீழுள்ள பெரும் பிலத்தினுள் (பிலம் - துவாரம்) சென்றான் (51). மாயாவி பிலத்தினுட் புக்கதைக் கண்டு வாலி பெருஞ்சீற்றம் கொண்டு, தன் இளவலாகிய சுக்கிரீவனைக் காவல் வைத்து, விரைந்து மாயாவியைத் தொடர்ந்து சென்றனன் (52). பிலத்தினுட் சென்ற வாலி அசுரனைத் தேடுதல், தேடிக் கண்டறிதல், போர் செய்தல் ஆகிய செயல்களில் ஈடுபட்டு இருபத்தெட்டுத் திங்கள் வரையிலும் வெளிவராததனால், காவல் காத்து நின்ற சுக்கிரீவன் 'வாலிக்கு என்ன அபாயம் நேர்ந்ததோ?' என்று அஞ்சிக் கலங்கினன் (53).

"எழுதத் தக்க வெற்றியையுடையவனே, நெடுநாள் கழிந்தும் வாலி மீண்டுவராததால் இச்சுக்கிரீவன் கலங்கி நிற்க, நாங்கள் அவனைத் தேற்றி 'இளவரசாகிய நீயே வாலிக்குப் பின் அரசு புரியவேண்டும்' என்று வற்புறுத்திக் கூறவும், அவன் அதனைத் தடுத்துக் கூறலாயினன் (54). நானும்

பிலத்தினுட் சென்று என் அண்ணனைத் தேடிப் பார்ப்பேன்; அண்ணன் மரித்துப் போயிருந்தால், அவனைக் கொன்ற மாயாவியைக் கொல்லுவேன்; கொல்ல முடியாமல் போனால், போரில் யானும் இறப்பேன்' என்று சொல்லிப் பிலத்தினுள் நுழையப் போனான் (55). "நாங்கள் வற்புறுத்தியும் கேளாமல் சுக்கிரீவன் செல்வதைக் கண்ட மந்திரிமார் இவனைத் தடுத்துப் பலவாறு சமாதானம் கூறி நாட்டை ஆளுமாறு பட்டயங்கட்டித்தரவே, இவன் அமைச்சர்களின் கட்டளையைக் கடக்க மாட்டாமல் அரசாளுதலுக்கு உடன் பட்டானேயன்றித் தானே கைப்பற்றவேண்டும் என்ற எண்ணத்தால் அரசை ஏற்றுக்கொள்ளவில்லை. இதனால் சுக்கிரீவன்மீது சிறிதும் குற்றமில்லை என்பது தெளிவு (56). அந்தக் காலத்தில் வாலியைக் கொன்ற மாயாவி அந்தப் பிலத்திலிருந்து இந்த வழியாக ஏறி வரக்கூடும் என எண்ணி நாங்கள் பல மலைகளைக்கொண்டு அப்பிலத் துவாரத்தை அடைத்துவிட்டோம் (57). நாங்கள் சுக்கிரீவனை அழைத்துக் கொண்டு வந்து கிட்கிந்தை மலையில் வாழ்ந்துகொண்டிருந்த காலத்தில் வாலி அந்த மாயாவியைக் கொன்றுவிட்டான் (58).

"பிலத்தில் மறைந்த மாயாவியின் உயிரைக் குடித்த களிப்பினால் வாலி விரைவாகப் பிலத்தின் வாயிலில் வந்து, வழி தடைபட்டிருப்பதைக் கண்டு, தம்பியை அழைத்து, அவனிடமிருந்து எந்த மறுமொழியையும் பெறாதவனாய், 'வாயிலில் இருந்து தம்பியார் காவல் செய்த விதம் நன்றாயிருந்தது' என்று எண்ணி (59); வாலை வலிமையாகத் தூக்கிக் காலைப் பலமாக எடுத்துப் பெருங்காற்று எழுந்தாற் போல் அடைப்பை வேகமாக உதைத்துத் தள்ளின மாத்திரத்தில் அடைத்து வைத்திருந்த மலைகள் யாவும் விண்ணிலும், சில கடலிலும் சென்றுஅடைந்தன (60). பின்னர் மிக்க சீற்றத்துடன் இம்மலையை எய்தினன்; மனத்தில் வேறுபாடில்லாத சுக்கிரீவன் தமையன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான் (61). நிகழ்ந்தவற்றை நிகழ்ந்தவாறு நவின்று (62), தன்னையும் அறியாது நேர்ந்த தன் குற்றத்தைப் பொறுத்தருளுமாறு வேண்டினான் (63).

இவற்றைக் கேட்டபின்பும் வாலி, பல கொடிய சொற்களைத் தம்பியின்மீது வீசினான். சுக்கிரீவனைச் சார்ந்த வானரர்களின் கூட்டம் அஞ்சி நடுங்கிப் பதுங்கி ஒளிந்தது. வாலியோ தம்பியைக் குத்திக் குமைத்துக் கலக்கினான் (64). சுக்கிரீவன் மிக உலைந்து நடுங்கி எழு கடல்கட்கு அப்பாலுள்ள இடத்தை அடைந்தான். வாலியும் பின்தொடர்ந்து சிங்கத்தைப்போல அலட்சியமாக அவன் மீது பாய்ந்தான் (65). இவ்வரலாற்றைக் கேட்ட இராமன் மிகவும் வியப்பெய்தி (66) மேலும் கூறுமாறு வேண்ட (67) அநுமனும் தொடர்ந்து கூறுவானாகினான். (நான்கு கவிகளில்)

“சுக்கிரீவன் சக்கரவாள மலைக்கு அப்பால் அண்ட பித்திகையை அடைந்து அதற்கு மேல் ஏகமுடியாத நிலையில் திகைத்து நிற்க, வாலியும் தொடர்ந்து சென்று அவனைப் பற்றிக்கொண்டனன் (68). பழிக்கு அஞ்சாத வாலி சினம் முற்றிய நிலையில் தன் வலிய கையினால் உயர எடுத்து மோதுதற்கு முயன்றபோது சுக்கிரீவன், அண்ணன் சோர்ந்திருக்கும் சமயம் பார்த்துத் தப்பி உய்ந்து ஓடிவிட்டான் (69). எமது சுவாமியே, வாலி கோபிப்பானானால் எமனுக்கும் ஒரு பாதுகாப்பான இடம் இல்லை. ஆனால், வாலிக்குச் சாபம் ஒன்று இருந்ததனால் சுக்கிரீவன் இந்த மலையைப் புகலிடமாகக்கொண்டு இருக்கின்றான் (70). ஐயனே, இந்தச் சுக்கிரீவனுக்கு உரியவளாகிய மனைவி உருமை என்பாளையும் விரும்பிக் கவர்ந்துகொண்டான். எனவே, இவன் செல்வத்தையும் தாரத்தையும் இழந்து இருக்கின்றான்.” இதனைக் கேட்டவுடன் இராமன் வாலியின்மீது சினம் கொள்ளுகின்றான். “வாலியைக் கொல்வேன்” என்றும் உறுதி கூறுகின்றான். பாம்பின் கால் பாம்பு அறியுமன்றோ! அநுமனது இந்தக் கூற்றால் அவனை நாம் சொல்லின் செல்வனாகக் காணமுடிகின்றது.

(5) இராமன் வாலியைக் கொல்ல வல்லவன் என்பதைக் கூறுமுகமாக : இராமன் ‘வாலியைக் கொல்வேன்’ என்று கூறியவுடன் சுக்கிரீவன் ‘நாங்கள் ஆலோசிக்க வேண்டுவது ஒன்று உளது’ என்று சொன்னான். அநுமன் முதலிய

அமைச்சர்களுடன் சுக்கிரீவன் தனியே இருக்கும்போது அநுமன் 'இராமனுக்கு வாலியைக் கொல்லும் ஆற்றல் உண்டு' என்பதாகக் கூறுவான். (ஆறு கவிகளில்)[13]

'வாலியைக் கொல்லும் ஆற்றல் இராமலக்குமணர்களிடம் இல்லை என்று ஐயுற்றனை. யான் சொல்லுபவற்றை உன்னிப்பாகக் கேட்டு அவற்றைக் கடைப்பிடிப்பாய்' (78).

இராமனுடைய திருக்கைகளிலும் தாளிலும் திருஆழி திருச்சங்குக் குறிகள் உள்ளன. இவை பிறர்பால் இல்லை. ஆகவே, இராமன் அறம் நிலை நிறுத்தற்பொருட்டுத் திருவவதரித்த திருமாலேயாவன் (79); இதனை ஊகித்து உணரலாம்.

பிராட்டியின் திருமணத்தில் கன்யா சுல்கமாக வைக்கப்பெற்றிருந்த சிவதனுசை முரிக்கும் அற்புத ஆற்றல் அந்தத் திருமாலுக்கேயன்றிப் பிறரிடம் இருக்க முடியுமா? இதனாலும் அவன் திருமாலே என்பதை அறியலாம் (80).

என்னை ஈன்ற வாயுதேவன் ஒருசமயம் என்னிடம், "குழந்தாய், நீ திருமாலுக்கு அடிமை செய்; அது சிறந்த தவமாகும். அஃது உனக்கு மாத்திரமேயன்றி உன்னைப் பெற்றெடுத்த எனக்கும்' சிறந்த பதவி நல்கும்," என்றான். இந்தச் சீராமனே அத்திருமால் என்பதை அறிக (81).

அக்காலத்தில் 'அப்புருடோத்தமனை அறிதற்கு உறுதியான உபாயம் என்ன?' என்று தந்தையைக் கேட்க, அதற்கு அவர், 'யாவர்க்கும் துன்பம் தோன்றும்போது உடனே தோன்றுவன். அப்பெருமானைக் கண்ட மாத்திரத்தில் உனக்கு உள்ளன்பு உண்டாகும்' என்று கூறினன். இப்போது இராமனைக் கண்ட மாத்திரத்தில் எலும்பு உருக்காணாதபடி உருகிவிட்டது. இதனால் வேறு வகையாகச் சான்று தேடத் தேவையில்லை (82).

'சிறந்தவனே, சீராமனின் பெருவலியை அறிய விரும்புவாயானால், அதற்கும் ஓர் உபாயம் உண்டு. நாம் அவனை ஏகும் வழியில் இருக்கும் மராமரங்கள் ஏழினையும்

13. கிட்கிந்தை - நட்புக்கோள். 78 - 83

ஓர் அம்பு கொண்டு துளைக்கும்படி ஏவச் செய்வதே யாகும்!' என்றான் (83).

இந்த அறிவுரை யோசனையாலும் அநுமனது சொல்லாற்றலை அறியலாம்; அவன் சொல்லின் செல்வன் என்பதையும் தெளியலாம்.

(6) வாலிவதை - சுக்கிரீவன் ஆட்சி ஆகியவற்றிற்குப் பிறகுதான் அனைத்தும் செய்ய வேண்டுவன எனல் : இராம லக்குமணர்கள் கிட்கிந்தையிலிருக்கும்போது ஒருசமயம் சுக்கிரீவன் பிராட்டியின் திருவாபரணங்கள் அடங்கிய ஒரு முடிச்சைக் கொண்டுவந்து கொடுக்கின்றான். அந்த ஆபரணங்களைக் கண்ணுற்ற இராமன் மூர்ச்சையடைகின்றான். சுக்கிரீவன் தெளிவித்தபின் இராமன் கூறுவது : "அன்பனே, நீ தேற்றியதனால் துன்பத்தை ஒருவாறு தணித்துக்கொண்டேனேயன்றிப் பிழைக்கக் கடவேனோ? இப்பழி தீர மரணம் ஒன்றே வழி" என்று கூறியவன், "ஆனால், உனது குறையை நிறைவேற்றாமல் மரணத்தை அடையேன்" என்று கூறுகின்றான்.[14] இச்சமயத்தில் அநுமன் பேசிய பேச்சு உள்ளத்தை உருக்குவது; 'சொல்லின் செல்வன்' என்பதை நிலைநாட்டுவதாக அமைகின்றது. மாருதி வணங்கிப் பேசுகின்றான். "அடியேன் இப்போது கூறவேண்டுவது ஒன்று உள்ளது. அதனை உணர்ந்து திருவுள்ளம் வைத்துக் கேட்பாயாக" [15] என்று தொடங்குகின்றான்.

"பெருமானே, பிராட்டி இருக்கும் இடத்தைக் கண்டறிவதற்குப் பலர் பல இடத்து ஏக காலத்தில் தேட வேண்டுமாதலால்,

" கொடுந்திறல் வாலியைக்
கொன்று கோமகன்
கடுங்கதி ரோன்மகன்
ஆக்கிக் கைவளர்
நெடும்படை காட்டினால்
அன்றி நேடரிது." [16]

14. கிட்கிந். கலன்காண் - 26.
15. கிட்கிந். கலன்காண் - 27.
16. கிட்கிந். கலன்காண் - 28.

(கோமகன் ஆக்கி - அரசனாகச் செய்து; நேடு - தேடுவதற்கு)

என்று கூறுவான். சமயோசிதமான பேச்சு; தொடங்கும் போதே உயிராய கருத்தை முன்வைக்கின்றான்.

"இராவணனது இருப்பிடம் தரையிலுள்ளதோ, மலைகளின் மேல் உள்ளதோ, வானத்திலுள்ளதோ, இவற்றிலும் வேறான பெரிய நாகலோகத்திலுள்ளதோ? நாம் மனிதப் பிறப்பின்பாற்பட்டிருத்தலால் இன்னவிடத்தென்று எளிதில் அறியக்கூடியதன்று" (29).[17]

"அந்த இராக்கதர் ஒருநொடிப் பொழுதில் எல்லா உலகங்களிலும் போய்ச் சேருவர்; சென்ற இடங்களில் எல்லாம் தாம் விரும்பிய பொருள்களை எல்லாம் கவர்ந்து கொள்வர்; கொடிய வினை வந்தாற்போல் வருவர்; திரும்பிச் செல்வர். ஆதலால், அவர்தம் உறைவிடம் எளிதில் அறியற்பாலதன்று." (30).

"ஒரேசமயத்தில் உலகங்கள் எல்லாவற்றிலும் சென்று பரவி, பிராட்டியிருக்கும் இடத்தைத் தேடி அறிய வேண்டும். அங்ஙனமன்றி ஒவ்வோரிடமாகத் தேடுவதால், உலகம் பரந்து கிடத்தலால் சிரமம் உண்டு; தேடுவதிலும் பல்லாண்டுகள் கழியும்." (31).

"எம்மிடத்துள்ள எழுபது வெள்ளம் என்னும் தொகையுடைய வானரச் சேனை கற்பாந்த காலத்துக் கடல்போல உலகம் முழுதும் பரந்து மூடவல்லது. ஆழியை அருந்த வேண்டுமானாலும், அயன் படைத்த அண்டத்தைக் கீழே பிடித்து எடுக்க வேண்டுமென்றாலும், தமக்கு நேர்ந்த கட்டளையைத் தவறாமல் செய்யும்" (32).

இஃது அநுமனது முத்தான - முத்தாய்ப்பான - பேச்சு. சோர்வுற்ற இராமனுக்குக் கிளர்ச்சியும் உற்சாகமும் ஊட்டும் பான்மையது. இராமனும் சிறிய திருவடியின் யோசனையை அங்கீகரிக்கின்றான்.

---

17. அநுமன் முதலியோர் முகத்திலும் வாலிலும் வானரம் போலிருப்பினும், மற்றபடி மனிதர் போன்ற வடிவமுடையவராதலால், அநுமன் தன்னையும் பிறரையும் மானிடருடன் உளப்படுத்திக்கொண்டான் என்பது அறியப்படும்.

*(7) இலக்குவன் சீற்றம் தணிந்தபின் அநுமன் அருகில் வரல் : தாரை சமாதானம் கூறியபின், இலக்குவனின் சீற்றம் தணிகின்றது. மாருதி இலக்குவன் அருகில் வருகின்றான்.*

"வன்துணை வயிரத் திண்தோள்
மாருதி மருங்கின் வந்தான்."[18]

*இலக்குவன்,*

"வந்தடி வணங்கி நின்ற
மாருதி வதனம் நோக்கி
அந்தமில் கேள்வி நீயும்
அயர்த்தனை யாகும் அன்றே
முந்தின செய்கை."[19]

*என்று அநுமனை நோக்கிச் சொல்ல, 'இயம்ப வல்லான்' (பேசுதலில் வல்லவனான அநுமன்) கூறிய மறுமொழி ஆறு கவிகளில் நடைபெறுகின்றது. இங்கும் வள்ளுவர் கூறும் 'சொலல் வல்லவன்' (குறள் - 647) - சொல்லின் செல்வனைக் காணமுடிகின்றது.*

"சிதைவுஅகல் காதல் தாயைத்
தந்தையைக் குருவைத் தெய்வப்
பதவிஅந் தணரை ஆவைப்
பாலரைப் பாவை மாரை
வதைபுரி குநர்க்கும் உண்டாம்
மாற்றலாம் ஆற்றல் மாயா
உதவிகொன் றார்க்கொன் றேனும்
ஒழிக்கலாம் உபாயம் உண்டோ?"[20]

*என்று தொடங்கும் முதற்பாடலே கம்பீரமாகவும் பெருமிதமாகவும் தொடங்குகின்றது. தாய், தந்தை, ஆசான், குழவிக்கொலை, பெண் கொலை என்னும் கொடும் பாதகங்கட்கெல்லாம் கழுவாய் உண்டு; செய்ந்நன்றி மறத்தலுக்கு அது இல்லை என்று பேசுகின்றான்.*

---

*18. கிட்கிந்தை - கிட்கிந்தை - 60*

*19. கிட்கிந்தை - கிட்கிந்தை - 61.*

*20. கிட்கிந்தை - கிட்கிந்தை - 62. 'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்' (புறம்-9) என்ற பாடலின் கருத்தையும் ஈண்டுச் சிந்தித்து மகிழலாம்.*

தொடர்ந்து, "ஐயனே, உங்கட்கும் எங்கட்கும் நட்பு உண்டாகும்படி செய்தது என் செயலன்றோ? அந்த நட்பு அறம் சிதையுமானால், தப்பும் வகை நட்பு ஆனவனாகிய சுக்கிரீவனுக்கும் நட்பைச் செய்வித்தவனான எனக்கும் உண்டோ? இதனால் அறிவெல்லாம் குற்றம் உடையதாகுமன்றோ? (63).

"எம் பெருமானே, இப்பிறப்பிலும் முப்பிறப்பிலும் நாங்கள் செய்த தவமும், நாங்கள் செய்த நல்லறச் செயல்களும், தேவர்களும், மற்ற எத்திறத்தாரும் நீரே என்பது என்னிடத்தில் பொருந்தி உள்ளது. அது கிடக்கட்டும். மூன்று உலகங்களையும் பாதுகாக்கும ஆற்றல் உடையீர், உங்கட்கு எங்கள்மீது சீற்றம் உண்டாகுமானால், நாங்கள் தப்பி உய்வதற்கு அரண் ஏதாவது உண்டா? தங்கள் அருள் ஒன்றே எங்கட்குக் கதியாக உள்ளது." (64).

"எங்கள் கவிக்குலத்தரசன் தங்கள் கட்டளையை மறக்கவில்லை. வல்லமையுள்ள சேனைகளை அழைத்து வரும்படி நாற்றிசைகட்கும் ஆள்களை அனுப்பியுள்ளான். அவர்கள் வந்து சேர்தலை எதிர்பார்த்துக்கொண்டிருந்ததால் தாமதம் ஏற்பட்டது. இதுவேயன்றிச் சத்தியத்தினின்று இப்போது தவறுவானேயாகில் அவன் இவ்வுலகில் பிறந்தும் பிறவாதவனேயாவன். இது மட்டிலுமா? அவனுக்கு நரகமும் தப்பாது." (65).

"வீரர் திலகமே! 'செய்யாமல் செய்த உதவிக்கு, வையகமும் வானகமும் மாற்ற லரிது' என்பது அறமே யாயினும், அவ்வுதவி செய்தவருக்காகப் போர்க்களத்துக்குச் சென்று அவன் பகைவரை அழித்தலும், அது இயலாவிடின் அப்பகைவர் கையால் தான் உயிர் மாய்தலும் ஒருவாறு ஈடாகலாம்; இவையன்றி வேறு என்ன உளது?" (66)

"வானர வீரர்கள் வாயிலை அடைத்துக் குன்றுகளை அடுக்கியது முதலியன உனது சீற்றத்தைக் கண்டு அஞ்சியதனால் நிகழ்ந்த செய்கைகளேயன்றி வேறு அல்ல. இவற்றை நீ இவ்வாறு கருதாமல் உம்மோடு மாறுபட்டுச் செய்தனவாகக்கொண்டு நொதுமலன் போல ஈண்டு நிற்பின்,

*அது நம் மாற்றார் உனது சீற்றத்தை மிகுவித்து நம் இரு திறத்தார்க்குமுள்ள நட்பைக் கெடுத்தற்குக் காரணமாகி விடும். ஆதலால், நீ உள்ளே வந்து நீங்கள் அளித்த செல்வத்தினால் சிறப்புப் பெற்றிருக்கும் சுக்கிரீவனைக் கண்டு சீற்றந்தணிவாயாக." (67)*

*இங்கு நாம் சிறிய திருவடியின் பக்குவமான சொற்களைக் காணமுடிகின்றது. தக்க முறையில், தக்க சொற்களைக்கொண்டு பணிவான முறையில் தன் கருத்தை இலக்குவன் முன்வைத்ததனால், அவன் சீற்றம் தணியப் பெறுகின்றான்.*

*(8) பிராட்டியைக் கண்டு திரும்பிய அநுமன் இராமனிடம் செய்தியைக் கூறும்போது : இராமனை அடைந்த அநுமன் "ஏந்தல்தன் மொய்கழல் தொழுதிலன்." பின் என்ன செய்தான்?*

**"முளரி நீங்கிய**
**தையலை நோக்கிய தலையன் கையினன்**
**வையகம் தழீஇ நெடிது இறைஞ்சி வைகினான்"**[21]

*இங்ஙனம் பிராட்டி இருக்கும் திசையை நோக்கித் தண்டன் இட்டது, பேசாத பேச்சாக - இலங்கையில் பிராட்டி குற்றமற்ற நிலையில் இருப்பதைத் தெரிவித்தற்காக. ஈண்டு பேசாத பேச்சிலும் சொல்லின் செல்வனைக் காணமுடிகின்றது; கண்டு களிக்கவும் முடிகின்றது.*

*முதலில் பேச்சைத் தொடங்கும்போதே,*

**" கண்டெனன் கற்பினுக்கு**
**அணியைக் கண்களால்**
**தெண்திரை அலைகடல்**
**இலங்கைத் தென்னகர்**
**அண்டர்நா யகஇனித்**
**தவிர்தியால் ஐயமும்."** [22]

*இரத்தினச் சுருக்கமாகப் பொருள் பொதிந்த சொற்களால் அற்புதமாகத் தொடங்குகின்றான். பயனிலையால் தொடங்கி எழுவாயால் முடிக்கின்றான்.*

---

*21. சுந்தர. - திருவடி தொழுத - 55*
*22. சுந்தர. - திருவடி தொழுத - 58*

எழுவாயால் தொடங்கினால் பயனிலையால் முடிப்பதற்குள் - ஒருசில விநாடிக்குள் - ஆயிரம் ஐயங்கள் தோன்றலா மல்லவா? அவற்றைத் தவிர்த்தற்பொருட்டே 'கண்டெனன்' என்று தொடங்கினான் என்பது சிந்தித்து அநுபவிக்கத் தக்கது.

இங்ஙனம் இலக்கண நூற்பா போல் சுருங்கக் கூறியதைப் பின்னர் இருபத்து மூன்று கவிதைகளால்[23] வகுத்துக் கூறுகின்றான். அவற்றுள் சிலவற்றை அநுமன் வாக்காலேயே ஈண்டுத் தருகின்றேன்.

**"உன்பெருந் தேவி என்னும்**
**உரிமைக்கும் உன்னைப் பெற்ற**
**மன்பெரும் மருகி என்னும்**
**வாய்மைக்கும் மிதிலை மன்னன்**
**தன்பெருந் தனயை என்னும்**
**தகைமைக்கும் தலைமை சான்றாள்**
**என்பெருந் தெய்வம் ஐயா**
**இன்னமும் கேட்டி என்பான்" (59)**

(தேவி - மனைவி; உரிமை - தகுதி; மருகி - மருமகள்; வாய்மை - உண்மை; தனயை - மகள்; தகைமை - தன்மை; தலைமை - சிறப்பு; தெய்வம் - கடவுள்.)

**"உன்குலம் உன்ன தாக்கி**
**உயர்புகழ்க்கு ஒருத்தி யாய**
**தன்குலம் தன்ன தாக்கித்**
**தன்னைஇத் தனிமை செய்தான்**
**வன்குலம் கூற்றுக்கு ஈந்துஅவ்**
**வானவர் குலத்தை வாழ்வித்து**
**என்குலம் எனக்குத் தந்தாள்**
**என்இனிச் செய்வது எம்மோய்." (61)**

(உன்குலம் - இரகு வமிசம்; தன் குலம் - தான் பிறந்த குலம்; தனிமை செய்தான் - தனித்திருக்கும்படி செய்த இராவணன்; வன்குலம் - வலிமையான குலம் (இராக்கதர் குலம்); கூற்று - யமன்; வானவர் - தேவர்.

23. சுந்தர - திருவடி தொழுத. 59-82 : சந்தர்ப்பத்துக்கேற்றவாறு கம்பனும் யாப்பை மாற்றிக்கொள்வதையும் கண்டு மகிழ்கின்றோம்.

*என்குலம் - வானரர் குலம்; எனக்குத் தந்தாள் - அக்குலத்துப் பிராணிகளை எல்லாம் அநுமன் என்று வழங்குமாறு செய்தாள்; குரங்கு என்ற பெயரை நீக்கி அநுமன் என்று வழங்குமாறு செய்தாள் என்பது குறிப்பு; எம் ஓய் - என் தாய்)*

**"விற்பெரும் தடந்தோள் வீர !**
**வீங்குநீர் இலங்கை வெற்பின்**
**நற்பெருந் தவத்த ளாய**
**நங்கையைக் கண்டேன் அல்லேன்;**
**இற்பிறப்பு என்ப தொன்றும்**
**இரும்பொறை என்ப தொன்றும்**
**கற்பெனும் பெயர தொன்றும்**
**களிநடம் புரியக் கண்டேன்" (62)**

*(வெற்பு - திரிகூடமலை; வீங்குநீர் - மிக்கநீர்; நங்கை - பிராட்டி; இல்பிறப்பு என்பது ஒன்று - உயர்குடியிற் பிறத்தல் என்பது ஒரு குணம்; பொறை - பொறுமை; கற்பு - பதிவிரதாந் தன்மை; (ஒருங்கு கூடி) களிநடம் - களிப்போடு கூத்தாடுதல்.)*

**"கண்ணினும் உளைநீ தையல்**
**கருத்தினும் உளைநீ வாயின்**
**எண்ணினும் உளைநீ கொங்கை**
**இணைக்குவை தன்னின் ஓவாது**
**அண்ணல்வெம் காமன் எய்த**
**அலர்அம்பு தொளைத்த ஆறாப்**
**புண்ணினும் உளைநீ நின்னைப்**
**பிரிந்தமை பொருந்திற்று ஆமோ !" (63)**

*(உளை - இருக்கின்றாய்; தையல் - பிராட்டி; கருத்து - மனம்; குவை - முகடு; ஓவாது - இடைவிடாமல்; காமன் - மன்மதன்; அலர் அம்பு - மலர் அம்பு; தொளைத்த - தைத்து ஊடுருவின; பிரிந்தமை - பிரிந்தனள் என்பது; பொருந்திற்று - பொருந்திய சொல்.)*

**"வேலையுள் இலங்கை என்னும்**
**விரிநகர் ஒருசார் விண்தோய்**
**காலையும் மாலை தானும்**
**இல்லதோர் கனகக் கற்பச்**

சோலைஅங்கு அதனுள் உம்பி
புல்லினால் தொடுத்த தூய
சாலையில் இருந்தாள் ஐய
தவம்செய்த தவமாம் தையல்" (64)

*(வேலை - கடல்; விரிநகர் - பெரிய பட்டணம்; ஒருசார் - ஒருபுறத்தில்; விண்தோய் - ஆகாயத்தை அளாவிய; கனகம் - பொன்; கற்பம் - கற்ப மரம் உள்ள; உம்பி - உன் தம்பி; புல் - தருப்பை; தொடுத்த - அமைத்த; சாலை - குடிசை; தவம் செய்த - தவம்தான் செய்த; தவமாம் - தவத்தின் வடிவினள்; தையல் - பிராட்டி)*

"சோகத்தாள் ஆய நங்கை
கற்பினால் தொழுதற்கு ஒத்த
மாகத்தார் தேவி மாரும்
வான்சிறப்பு உற்றார் மற்றைப்
பாகத்தாள் அல்லள் ஈசன்
மகுடத்தாள் பதுமத் தாளும்
ஆகத்தாள் அல்லள் மாயன்
ஆயிரம் மோலி ஆனாள்" (67)

*(சோகம் - துக்கம்; நங்கை - பிராட்டி; தொழுதற்கு ஒத்த - வணங்குதற்கு ஏற்ற; மாகத்தார் - வானத்தில் வசிப்பவர்; தேவிமார்கள் - இந்திராணி, சரசுவதி முதலியோர்; வான்சிறப்பு - மிக்க பெருமை; பாகத்தாள் - பாகத்தில் இருப்பவள்; மகுடத்தாள் - தலைமேல் இருப்பவள்; பதுமத்தாள் - திருமகள்; ஆகம் - திருமார்பு; ஆயிரம் மோலி - ஆயிரம் திருமுடி)*

*தான் கொடுத்த கணையாழியைப் பிராட்டி என்ன செய்தாள் என்பதைக் கூறும் போக்கில்,*

"ஒருகணத்து இரண்டு கண்டேன்
ஒளிமணி ஆழி ஆன்ற
திருமுலைத் தடத்து வைத்தாள்
வைத்தலும் செல்வ நின்பால்
விரகம்என் பதனின் வந்த
வெங்கொழுந் தீயி னால்வெந்து
உருகியது உடனே ஆறி
வலித்தது குளிர்ப்புள் ஊற"[24]

*24. சுந்தர - திருவடி தொழுத. 77*

*(இரண்டு - இரு நிகழ்ச்சிகள், மணி ஆழி - இரத்தினம் பதித்த மோதிரம்; ஆன்ற - சிறந்த; விரகம் - பிரிவினால் உண்டான ஆசை; உள் ஊற - உள்ளத்தில் மிக; ஆறி - தணிந்து)*

**"வாங்கிய ஆழி தன்னை**
**வஞ்சரூர் வந்த தாமென்று**
**ஆங்குயர் மழைக்கண் நீரால்**
**ஆயிரம் கலசம் ஆட்டி**
**ஏங்கினள் இருந்த தல்லால்**
**இயம்பலள் எய்த்த மேனி**
**வீங்கினள் வியந்த தல்லால்**
**இமைத்திலள் உயிர்ப்பு விண்டாள்"** [25]

*(ஆழி - மோதிரம்; வஞ்சர் ஊர் - வஞ்சனை உள்ளவர்களான அரக்கர்களின் நகரம்; வந்தது - பரிசுத்தம் இழந்தது; ஆங்கு - அப்பொழுது; ஆயிரம் கலசம் - ஆயிரம் குடம்; ஆட்டி - நீராட்டி; ஏங்கினள்- இரங்கினள்; இயம்பிலள் - பேச்சில்லாதவள்; எய்த்த - இளைத்த; வீங்கினள் - பூரித்தாள்; இமைத்திலள் - மூடவில்லை; உயிர்ப்பு - பெருமூச்சு; விண்டாள் - எறிந்தாள்)*

*இரண்டும் அற்புதமான சொல்லோவியங்கள். உணர்ச்சி பொங்கி வழிபவை.*

*அடுத்துத் தான் ஆடையில் முடித்து வைத்திருந்த சூளாமணியைத் தந்தாள்.*

**"வைத்தபின் துகிலின் வைத்த**
**மாமணிக்கு அரசை வாங்கிக்**
**கைத்தலத்து இனிதின் ஈந்தாள்"** [26]

*இங்ஙனம் தந்த சூளாமணியைத்*

**"தாமரைக் கண்கள் ஆர**
**வித்தக ! காண்டி"**

*என்று கொடுத்தனன். கொடுத்தவர் யார்? சொல்லுகின்றான் கம்பன்:*

---

*25. சுந்தர - திருவடி தொழுத. - 78*
*26. சுந்தர - திருவடி தொழுத. - 81*

**"வேத நன்னூல்**
**உய்த்துள காலம் எல்லாம்**
**புகழொடும் ஓங்கி நிற்பான்."**

*என்று அநுமனை அறிமுகம் செய்யும் பாங்கில் - 'காலதத்துவம் உள்ள அளவும் கீர்த்தியுடன் சிரஞ்சீவியாய் நிற்பவன்' என்ற அளவில் - நம் உள்ளத்தில் நிலையாக இடம் பிடித்துக்கொள்கின்றான், அக்கவிக்கு நாயகன்.*

**(9) போர்க்களத்தில் – வீரவாதத்திலும் :** *இங்கும் அநுமனது சொற்றிறத்தைக் கண்டு மகிழலாம். அநுமன் இந்திரசித்தன் மீது ஒருமலையை எறிய, அதனை அவன் அம்புகளால் தடுத்தும்*[27] *இருவர்க்கிடையே வீரவாதம் நிகழ்கின்றது.*

*முதலில் இந்திரசித்தன் பேசுகின்றான், இகழ்ச்சிக் குறிப்புடன்.*

**"நில்ல டாசிறிது நில்ல டாஉனை**
**நினைந்து வந்தனென் முனைக்குநான்**
**வில்லெ டாமைநினது ஆண்மை பேசிஉயி**
**ரோடு நின்றுவிளை யாடினாய்**
**கல்ல டாநெடு மரங்க ளோவரு**
**கருத்தி னேன்வலி கடப்பவோ**
**சொல்ல டா'வெனஇயம்பி னான்இகல்**
**அரக்கன் ஐயன்இவை சொல்லினான்."** [28]

*(முனைக்கு - போர் முனைக்கு)*

*இதற்கு மறுமாற்றம் உரைக்கும் போக்கில் அநுமன் உரைப்பவை :*

**"வில்லெ டுக்கஉரி யார்கள் வெய்யசில**
**வீரர் இங்கும்உளர், மெல்லியோய் !**
**கல்லெ டுக்கஉரி யானும் நின்றனன்**
**அதுஇன்று நாளைஇடை காணலாம்,**
**எல்லெ டுத்தபடை இந்தி ராதியர்**
**உனக்கிடைந்து உயிர்கொடு ஏகுவார்**
**புல்லெ டுத்தவர்கள் அல்லம் வேறுசில**
**போர்எ டுத்துஎதிர் புகுந்துளேம்"** [29]

***27. யுத்த - நாகபாசம் - 72***

***28. யுத்த - நாகபாசம் - 73***

***29. யுத்த - நாகபாசம் - 74, பாட்டை மீண்டும் மீண்டும் படித்து அநுபவித்து அநுமனின் சொல்லாற்றலைக் காணவேண்டும்.***

(வெய்ய - கொடிய; எல் - ஒளி; உயிர்கொடு - உயிர் கொண்டு; அல்லம் - அல்லோம்; போர் எடுத்து - போர்வகைகளைத் தொடங்கி)

'இங்கு வில் எடுத்துப் போர்செய்பவர்களும் இருக்கின்றார்கள். நீ இந்திரனை வென்றதாக நினைத்துச் செருக்கு கொண்டுள்ளாய். உன்னுடன் வில் எடுத்து வெய்து பொருபவர்களால் உனது வலியின்மை வெட்ட வெளிச்ச மாகும். அதனை இன்றோ நாளையோ காணலாம். நீ வில் வீரர்க்குத் தோற்று இறந்தவுடன் உனக்குக் கல் எடுத்தலாகிய சவச் சடங்கைப் புரிய உரியவனான வீடணனும் இங்கு உள்ளான்' என்றும், 'உங்களோடு கல்லெடுத்து (மலை எடுத்து)ப் போர் புரிதற்கு உரிய யானும் (மற்றும் வானரர்களோடு) நின்றேன்' என்றும் இருபொருள்படும். 'கல்லெடுப்பு' என்று உலக வழக்கிலும் சவச்சடங்கைக் குறிப்பதை ஈண்டு நினைவு கூரலாம். இந்திரசித்தனைச் சார்ந்த மற்றையரக்கர் யாவரும் இறக்க, வீடணன் ஒருவனே எஞ்சி நிற்றலால், அரக்கனாகிய இந்திரசித்தனுக்குக் கல்லெடுக்கும் சடங்கைச் செய்தற்கு உரியவன் வீடணன் என்று கருதி இங்ஙனம் கூறினான் என்பது ஈண்டு அறியப்பெறும்.

இன்னும் பேசுகின்றான் :

**"என்னொ டேபொருதி யோஅது அன்றுஎனின்**
**இலக்கு வப்பெயரின் எம்பிரான்**
**தன்னொ டேபொருதி யோஉன் உந்தைதலை**
**தள்ள நின்றதனி வள்ளலாம்**
**மன்னொ டேபொருதி யோஉ ரைத்தது**
**மறுக்கி லேம்என வழங்கினான்**
**பொன்னொ டேபொருவின் அல்லது ஒன்றொடு**
**பொதுப்ப டாஉயர் புயத்தினான்."[30]**

(எம்பிரான் - எம் தலைவன்; உந்தை தலை - உன் தந்தையின் தலைகளை; தள்ள - துணித்துத் தள்ள; நின்ற தனி வள்ளல் - வந்துள்ள ஒப்பற்ற இராமபிரான்; மறுக்கிலேம் - மறுக்கமாட்டோம்; வழங்கினான் - கூறினான்; பொன் - மேருமலை; பொருவின் அல்லது

30. யுத்த. - நாகபாசம் - 75

*- ஒத்தால் அல்லாமல்; ஒன்றொடு பொதுப்படா - வேறு ஒரு பொருளோடு பொதுத் தன்மை பொருத்தப்படாத (ஒப்பற்ற); உயர்புயத்தினான் - அநுமன்)*

*பாடலை மீட்டும் மீட்டும் படித்துப் பொருள் தோன்ற அநுபவிக்க வேண்டும்.*

*பின்னும் பேசுகின்றான் :*

**"எங்கு நின்றனன் இலக்கு வப்பெயர்அவ்**
**ஏழை எம்பிஅதி காயனாம்**
**சிங்கம் வந்துஅவனை வென்று தன்உயிர்**
**எனக்கு வந்ததொர் சிறப்பினான்**
**அங்கு அவன்தனை மலைந்து கொன்றுமுனிவு**
**ஆற வந்தனன் அதுஅன்றியும்**
**உங்கள் தன்மையின் அடங்கு மோஉலகு**
**ஒடுக்கும் வெம்கணை தொடுப்பினே"** [31]

*(ஏழை - அறிவுக்கேடன்; மலைந்து - பொருது; முனிவு கோபம்; ஆற - தணிய; ஒடுக்கும் - ஒடுங்கச் செய்யவல்ல)*

*இங்கும் பாடலைப் பன்முறை படித்து அநுபவித்து அநுமனின் சொல் வளத்தைக் கண்டு மகிழலாம்.*

*மேலும் பேசுகின்றான் :*

**"ஆரும் என்படைஞர் எய்தல் இன்றுஅயல்**
**ஏக யானும்இகல் வில்லும்ஓர்**
**தேரின் நின்றுஉமை அடங்க லுந்திரள்**
**சிரந்து ணிப்பென்இது திண்ணமால்**
**வாரும் உங்களுடன் வானு ளோர்களையும்**
**மண்ணு ளோரையும் வரச்சொலும்**
**போரும் இன்றுஒரு பகற்க ணேபொருது**
**வெல்வென் வென்றுஅலது போகிலேன்"** [32]

*(ஆரும் - எவரும்; படைஞர் - சேனை வீரர்; அயல்ஏக - அப்புறம் சென்றுவிட; இகல் - வலிமையுள்ள; உமை அடங்கலும் திரள் - உங்கள் எல்லோரையும் கூட்டமாக, சிரம் - தலை; திண்ணம் - உறுதி; வாரும் - வாருங்கள்.)*

---

*31. யுத்த. - நாகபாசம் - 76*
*32. யுத்த. - நாகபாசம் - 77*

பாடலைப் பன்முறை படித்துப் பொருள் கண்டு அநுபவித்து மகிழவேண்டும்.

இங்ஙனம் இங்கு கூறப்பெற்ற நிகழ்ச்சிகளிலெல்லாம் அநுமனின் சொற்றிறத்தையும் அவன் நிகழ்ச்சிகளைச் சுமுகமாக - பலர் வியப்பெய்தும் வண்ணம் - தீர்த்துவைக்கும் பெற்றியையும் காண்கின்றோம்.

# 3. சிந்தனைச் செம்மல்

"எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு" (467)[1]

நன்றாக எண்ணிய பிறகே ஒரு செயலைத் துணிந்து தொடங்க வேண்டும். 'துணிந்தபின் எண்ணுவோம்' என்று கருதுவது குற்றமாகும். சிந்திக்கும் ஆற்றல் மனிதன் ஒருவனுக்கே இறைவனால் வழங்கப்பெற்ற ஓர் அற்புத ஆற்றல். அதனை வளர்த்துக்கொண்டு அதனைச் செயற்படுத்துவது ஒவ்வொருவரின் கடமையாகும்; பொறுப்பும் ஆகும். கவிநாயகனான அநுமனிடம் இவ்வாற்றல் அற்புதமாகச் செயற்பட்டுத் திகழ்வதை இராமகாதையில் தெளிவாகக் காணலாம். அதனை ஈண்டுக் காட்ட முயல்வேன்.

**சிந்தனை - 1 :** எந்த ஒரு செயலையும் தந்திரமாக முடிக்கவேண்டுமெனில், பார்ப்பன வடிவத்தை மேற்கொண்டு செயலில் இறங்குவதைக் காணலாம். மாவலியிடம் மூவடி மண் பெறுவதற்குத் திருமால் ஒரு வாமன மாணியாச் சென்றதையும், கன்னனுடைய தருமத்தையெல்லாம் பெறுவதற்குக் கண்ணன் பார்ப்பனக் கோலத்தில் சென்றதையும் இதிகாசங்களில் காண்கின்றோம். இங்ஙனமே இராமலக்குமணரைக் கண்ட சுக்கிரீவன் முதலிய வானரர்கள் அவரை வாலியைச் சேர்ந்தவர் என அஞ்சியோடி மலைக்குகைகளில் புகுந்து ஒளிந்துகொள்ள முயல, அநுமன் அவர்களைத் தேற்றியபின், தான் ஒரு பார்ப்பனப் பிரம்மச்சாரி கோலங்கொண்டு அவர்களை ஆராய முற்படுகின்றான்.[2] அவர்கள் இருக்குமிடத்தை அணுகி, மறைவாக நின்று, ஆராயத் தொடங்குகின்றான்.

---

*1. திருக்குறள், தெரிந்து செயல்வகை - 7*
*2. கிட்கிந்தை - அநுமப் 6 - 16*

அநுமனது சிந்தனையோட்டம்: இவர்களைத் தேவர்கட்குத் தலைவர்களான மும்மூர்த்திகள் என்றால் அவர்கள் மூவர்; இவர்கள் இருவர்; வலிமை பொருந்திய வில்லைத் தாங்கியவர்களாகக் காணப்பெறுகின்றனர். இவர்களை ஒப்பவர் எவரும் இலர்; இவர்கள் செய்வதற்கு அரிய பொருள் ஒன்றும் இல்லை; இவர்கள் தன்மையை எப்படி ஆராய்வது? (7)

இவர்களைக் கூர்ந்து நோக்கினால் துன்பத்தினால் வருந்தி அயர்த்தவர்கள்போல் காணப்பெறுகின்றனர். அவ்வாறு எளிதில் வருத்தமுறுவதற்கு எளியவர்களும் அல்லர்; உம்பர் உலகத்தைச் சார்ந்தவர்களோ என்று ஐயுறுவதற்கும் காரணம் இல்லை. மானிடரின் உருவமுடைய வர்களாக உள்ளனர். ஏதோ ஒரு பொருளைத் தேடுவது போலவும் காணப்பெறுகின்றனர். (8)

மேலும், அறத்தையும் ஒழுக்கத்தையும் செல்வமாக எண்ணுபவர்கள்; இவர்கள் இவண் போந்தது பிறிது ஓர் காரியத்தைப்பற்றியதும் அன்று; அக்காரியம் என்னவென்று ஆலோசித்துப் பார்க்குமிடத்து, கிடைத்தற்கரிய வானமிழ்தத் துக்கு ஒப்பானதும், நடுவில் நீங்கிப் போனதுமாகிய ஒரு பொருளை இருமருங்கும் தேடுகின்றவர்களாகத் தெரி கின்றது. (9)

இவர்கள் சினம் என்னும் தன்மை சிறிதும் இல்லாதவர்கள்; கருணைக் கடலாகத் திகழ்பவர்கள்; நன்மையேயன்றித் தீமை சிறிதும் அணுகப்பெறாதவர்கள்; இந்திரனும் அஞ்சத்தக்க கம்பீரமான தோற்றமுடையவர்கள்; அறக்கடவுளும் அஞ்சத்தக்க திருமேனியையுடையவர்கள்; இயமனும் அஞ்சத்தக்க வல்லமை படைத்தவர்கள். (10)

இங்ஙனம் சிந்தனையில் ஆழ்ந்தவன் யாவன்? கூறுவான் கம்பன், “தன் பெருங்குணத்தால் தன்னைத் தானலாது ஒப்பிலாதான்” (11) என்று. நாம் சிந்தித்து நோக்கினால் உண்மையும் அதுதானே!

இவ்வாறு சிந்தித்த நிலையில் அநுமன் சில இயற்கை நிகழ்ச்சிகளைக் கண்ணுறுகின்றான். அவற்றின் அடிப்படை யில் அவனது சிந்தனையோட்டத்தைக் காணலாம்.

பெரிய வாயினையுடைய காட்டு யானைகள் இவர்களைக் கண்டு தம் கன்றுகளைக் கண்டாற்போன்ற அன்புடையனவாய் உள்ளன. சிங்கங்களும் வேங்கை வரிப் புலிகளும் அவை போன்ற கொடிய விலங்குகளும் தம் கொடுமையை மறந்து காதல் கூர ஆசையுடன் நிற்க, பேய்களும் இவர்களை நன்கு மதித்து மனம் இளகுகின்றன. இவுர்களைக் கண்டு எந்தக் கொடிய பிராணிகளும் சினம் கொள்ளுவதில்லை. (12)

இவர்கள் வழி நடத்தலால் இவர்கள் திருமேனியில் வெம்மை முதலியன தோன்றாதிருக்கும்பொருட்டு, மயில் முதலான பறவைகள் எல்லாம் மனம் இரங்கி, இவர்கட்கு மேலாகப் பெரிய சிறகுகளாகிய பந்தரைப் பரப்பி, மதில்போலச் சுற்றிலும் வளைத்துக்கொண்டு இவர்களுடன் வருகின்றன. வானத்திலுள்ள முகிற்கூட்டங்கள் எல்லா விடத்தும் நீர்த்துளிகளைச் சிந்திக்கொண்டு இவர்களைத் தொடர்ந்து வருகின்றன. (13)

இவர்கள் நடையாடும்போது இவர்தம் திருவடிகள் பட்டமாத்திரத்தில் சுடுகின்ற கற்களும் மலர்போல் குளிர்ந்து மென்மையாகின்றன; இவர்தம் திருமேனியைக் கண்டபோதே மரம் முதலிய அஃறிணைப் பொருள்களும் வணங்கி இவர்தம் கடவுள் தன்மையைப் புலப்படுத்துகின்றன. (14)

பிறவித் துன்பங்களைப் போக்கி அத்துன்பங்கட்குக் காரணமான அவிச்சையாலுண்டான தொல்வினைகளை ஒழித்து, யமலோகத்துக்குச் செல்லாமல் மீளா உலகத்தில் உய்க்கின்ற தேவாதி தேவனான திருமால்தானோ இவர்கள்? இவர்களைக் கண்டமாத்திரத்தில் என் எலும்பும் கரைகின்றதே. அளவில்லாத பக்தியும் மேன்மேலும் பெருகுகின்றது. இவர்கள் திறத்தில் உண்டான அன்புக்கு எல்லையே இல்லை. இவற்றிற்கெல்லாம் காரணம் யாதோ? அறியமாட்டாத நிலையில் இருக்கின்றேன். (15)

இவ்வாறு சிந்தித்தவண்ணம் தான் இருக்கும் இடத்துக்குத் தசரத குமாரர்கள் வரும்போது,

"செவ்வழி உள்ளத் தானும்
தெரிவுற எதிர்சென்று எய்திக்
கவ்வையின்று ஆக நுங்கள்
வரவெனக் கருணை யோனும்
'எவ்வழி நீங்கி யோய்நீ?
யார்?'என வினவல் உற்றான்" (16)

இதற்குமேல் நடைபெற்ற நிகழ்ச்சிகளை நாம் அறிவோம். அநுமனது சிந்தனையோட்டத்தைமட்டிலும் ஈண்டுக் காட்டினேன்.

**சிந்தனை 2 :** பிராட்டியைத் தேடிக்கொண்டு 'அணுவின் மேருவின் ஆழியான் எனச் செலும் அநுமன்' (ஊர்தேடு - 134) இலங்கை நகர் முழுதும் தேடிக்கொண்டு வருகின்றான். கும்பகர்ணன், வீடணன், இந்திரசித்து, மண்டோதரி, இராவணன் முதலியவர்களைக் காணும்போது, அநுமன் நமக்கு ஒரு சிந்தனைச் செம்மலாகக் காட்சி தருகின்றான். இந்நிலைகளைத் தனித்தனியாக நோக்குவோம்.

**கும்பகருணன்[3] :** இயக்கியர்கள், அரக்கிமார்கள், நாக கன்னியர், வித்தியாதர மாதர்கள் முதலானவர்களையும் நன்றாகப் பார்த்துக்கொண்டு 'புகை புகாவாயிலும் புகவல்ல' அநுமன், மலைபோல் படுத்து உறங்கும்

"கலக்கமில் துயிற்சிக் கும்ப
கருணனைக் கண்ணிற் கண்டான்."[4]

(துயிற்சி - தூக்கம்.)

இவனை அரக்கர்கோனோ - இராவணனோ - என்று ஐயுறுகின்றான், 'கோதில் சிந்தை அநுமன்' (கிட்கிந்தை-29). சினம் தலைக்கேறுகின்றது.

"காவல் நாட்டங்கள் பொறிபுகக்
கனல்எனக் கனன்றான்."[5]

---

3. கும்பகருணன் என்னும் வடமொழிப் பெயருக்குக் குடம் போன்ற காதுகளையுடையவன் என்பது பொருள்.
4. சுந்தர. ஊர்தேடு - 121
5. சுந்தர. ஊர்தேடு - 130

*(காவல் நாட்டங்கள் - தன்னைச் சரண் அடைந்தவர்களைப் பாதுகாக்க வல்ல கண்கள்; கனன்றான் - கோபித்தான்)*

*நெருங்கிச் சென்று நோக்கியபோது பத்துத் தலைகளும் இல்லை; இருபது தோள்களும் இல்லை. சினம் தணிந்து போகின்றது.*

**"மறுகி ஏறிய முனிவுஎனும்**
**வடவைவெங் கனலை**
**அறிவு எனும்பெரும் பரவைஅும்**
**புனலினால் அவித்தான்"** [6]

*(மறுகிய - மாறுபடக்கருதிய; முனிவு - கோபம்; வடவை - படமுகாக்கினி; பெரும்பரவை - பெருங்கடல்)*

*பிறகு, அவ்விடத்தை விட்டு நீங்கினான்.*

**"அவித்து நின்றுஎவன் ஆயினும்**
**ஆகவென்று அங்கை**
**கவித்து நீங்கிடச் சிலபகல்**
**என்பது கருதாச்**

. . . . . . . . . . . . . . . . . . . . .

**அனையவன்**
**உறையுளைக் கடந்தான்"** [7]

*'இவன் எவன் ஆயினும், இருக்கட்டும்' என்று உதாசீனமாகச் சொல்லி, 'இவன் அழிதற்கு இன்னும் சில நாள்களே உள்ளன' என்று சிந்தித்து அவன் இருப்பிடத்தை விட்டு அகன்றான். இப்பொழுதே 'இராம-இராவணப்போர்' இவன் சிந்தனையில் எழுகின்றது; இவ்வரக்கன் முடிவும் சில நாள்களில் முடியும் என்றும் இவன் மனம் எண்ணுகின்றது.*

**வீடணன்** : *பல இடங்களிலும் பிராட்டியைத் தேடிக்கொண்டு வருபவனாகிய ஏந்தல் ( = அநுமன்),*

**"வேந்தர் வேதியர் மேலுளோர்**
**கீழுளோர் விரும்பப்**

---

*6. சுந்தர. ஊர்தேடு - 131*
*7. சுந்தர. ஊர்தேடு - 132*

போந்த புண்ணியன் கண்ணகன்
கோயிலுட் புக்கான்" [8]

*(போந்த - பிறந்த; புண்ணியன் - நல்வினைகளை யுடையவனான (வீடணன்); கண் - இடம்; அகல் - அகன்ற)*

*அவனை நெருங்கிச் சென்று - 'தருமம் அன்னான்தனை உற்று' - சிந்திக்கின்றான். தனது நுண் உணர்வினால்,*

"குற்றம் இல்லதோர் குணத்தினன்
இவன்எனக் கொண்டான்" [9]

*இவன் திறத்து மாருதிக்குக் கோபம் தலைகாட்ட வில்லை.*

**இந்திரசித்தன்** : *அடுத்துப் பல்வேறு இடங்களைக் கடந்து, தன் மன வேகத்திற்கும் முன்னதாக,*

"இந்தி ரன்சிறை இருந்தவா
யிலின்கடை எதிர்ந்தான்" [10]

*என்று இந்திரசித்தன் வீட்டினது கடைவாயிலை அடைகின்றான். முருகப்பெருமானை ஒத்திருக்கும் இந்திரசித்துவைக் காண்கின்றான்.[11] அவனைப்பற்றி,*

"வளையும் வாள்எயிற்று அரக்கனோ
கணிச்சியான் மகனோ?
அளையில் வாள்அரி அனையவன்
மகனோ அறியேன்." [12]

---

*8. சுந்தர. ஊர்தேடு - 135*

*9. சுந்தர. ஊர்தேடு - 137*

*10. சுந்தர. ஊர்தேடு - 138. இராவணன் திக்கு விசயம் செய்தபோது, இந்திரனை எதிர்த்துப் போர் செய்கின்றான். இந்திரனை வெல்ல முடியாது போகவே, இராவணன் மகனான மேகநாதன் மாயையால் மறைந்து பொருது, இந்திரனைக் கலங்கச்செய்து அவனை மாய பாசத்தால் கட்டிக்கொண்டு போய் இலங்கையில் தன் வீட்டுவாசலில் சிறைவைக்கிறான். பின்னர், சிறை மீட்க வந்த நான்முகனால் 'இந்திரசித்து' எனச் சிறப்புப்பெயர் இடப் பெறுகின்றான். இவ்வரலாறு உத்தர காண்டத்தில் உள்ளது.*

*11. சுந்தர. ஊர்தேடு - 140*

*12. சுந்தர. ஊர்தேடு - 141*

(வளையும் வாள்எயிறு - வளைந்திருக்கும் பிரகாச முள்ள கோரப்பல்; கணிச்சியான் - சிவபெருமான்; அளை - குகை; அரி - சிங்கம்)

என்று கூறுவான். ஆனால், அவனது சிந்தனையில் இராம லக்குவனர்க்கும் இவனுக்கும் பல நாள் போர் நடைபெறும் என்பதைச் சிந்தித்து உணர்கின்றான்.

**"இளைய வீரனும் ஏந்தலும்**
**இருவரும் பலநாள்**
**உளைய உள்ளபோர் இவனொடும்**
**உளதென உணர்ந்தான்."** [13]

(இளைய வீரன் - இலக்குவன், ஏந்தல் - இராமன்; உளைய - சிரமமுண்டாம்படி)

இத்தகைய ஒரு பெருவீரனைத் துணையாகக் கொண்டிருக்கும்போது இராவணன் மூன்றுலகத்தாரையும் வென்றது ஒரு பெருஞ்செயலாகப் பாராட்டத் தக்கதன்று என்று கருதுகின்றான்.[14]

**மண்டோதரி :** அடுத்து 'இராகவன் கழல்' (சிறிய திருவடி) எனப் புகழ் பெற்ற அநுமன் அட்சயன், அதிகாயன் மாளிகைகள், அகன்ற அகழி முதலியவற்றைக் கடந்து, வித்தியாதர மாதர்கள் வதியும் வீதிகளையும் தாண்டி வருபவன் 'மயன்மகள் உறைகின்ற மாடத்தைப்' பார்க்கின்றான்.[15] அவளுக்குக் 'கரும்பையும் சுவை கைப்பித்த சொல்லியர்' செய்யும் பலவேறு பணிவிடைகளைக் கண்டு, அவளைச் சீதை என்று மயங்கி வருந்துகின்றான்.[16] பிறகு சிந்திக்கின்றான்.

**"எற்பு வான்தொடர் யாக்கையால்**
**பெரும்பயன் இகந்தனென் இதுநிற்க**
**அற்பு வான்தனை இற்பிறப்பு**
**அதனொடும் இகந்துதன் அருந்தெய்வக்**

13. சுந்தர. ஊர்தேடு - 141
14. சுந்தர. ஊர்தேடு - 142
15. சுந்தர. ஊர்தேடு - 195
16. சுந்தர. ஊர்தேடு - 197, 199

கற்பு நீங்கிய கனங்குழை
இவள்எனில் காகுத்தன் புகழொடும்
பொற்பும் யானும்இவ் இலங்கையும்
அரக்கரும் பொன்றுதும் இன்றென்றான்."[17]

*(எற்பு - எலும்பு; யாக்கை - உடம்பு; இகந்தனென் - அடையாதொழிந்துவிட்டேன்; வான்தளை - பெரிய பாசபந்தம்; இகந்து - பொன்றாது விட்டு; நீங்கிய - ஒழிந்த; கனங்குழை - பிராட்டி; பொற்பு - பொலிவு; பொன்றுதும் - அழிவோம்; என்றான் - என்று தனக்குள் சொல்லிக்கொண்டான்.)*

*'இதனைத் தெளிவாக்க முயல்வேன். இவ்வுலகிற் பிறக்கும் ஒவ்வொருவரும் ஏதேனும் ஒருவகையில் எம் பெருமானுக்குப் பணிவிடையை இனிது செய்து நிறைவேற்றி அவனது திருவுளத்திற்கு உகப்பை விளைவித்து அவனருளுக்குத் தாம் இலக்காவதேயாகும். அங்ஙனம் திருமாலாகிய இராமபிரானுக்குச் சீதாப்பிராட்டியைத் தேடிக் கொடுத்தலாகிய தெய்வப்பணியை நிறைவுபெறச் செய்து எனது பிறவியைப் பயனுள்ளதாக்கிக்கொள்ளத் தலைப்பட்ட யான் மேற்கொண்ட தொண்டு இனிது நிறைவேறாமைபற்றி எனது பிறப்பு வீணேயாயிற்று' என்று கருதுகின்றான்.*

*'அது கிடக்கட்டும்' என்று கூறித் தன் ஆருயிர் நாயகனான இராமபிரானிடத்துப் பிராட்டி வைத்திருந்த அன்பு மனப்பூர்வமான மெய்யன்பாய் இருக்குமாயின், அப் பெருமாட்டியின் கற்புநிலை கலங்கியிராது என்பதுபற்றி 'அற்புவான் தலையிகந்து தன் கற்பு நீங்கிய கனங்குழை' என்றும், எக்காரணத்தாலும் எவ்வகை நிலையிலும் ஒரு சிறிதும் ஒழுக்கந்தவறாமை உயர்குடிப் பிறந்தார்க்கு இயல்பாயிருக்க, அதற்கு மாறாகச் சனக குலத்தவளான இவள் கற்பொழுக்கம் இழந்தனள் என்று கொண்டு 'இப்பிறப்பினொடும் இகந்து தன் கற்பு நீங்கிய கனங்குழை' என்றும் கூறினன். 'தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழு*

17. சுந்தர. ஊர்தேடு - 200

தெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை' (குறள்-55) என்று வள்ளுவர் பெருமான் கூறியிருத்தற்கொப்ப கடவுள் ஆணையால் நிகழக்கூடிய செயல்களையும் தான் நிகழ்த்த வல்ல ஆற்றல் கற்பு நிலைக்கு இருத்தலால் 'தெய்வக் கற்பு'என்றும், கற்பு நலத்தின் சிறப்பைக் கருதி 'அருங்கற்பு' என்றும் கூறினன் என்னும் அநுமனது சிந்தனை யோட்டத்தைக் கருதலாம்.

'புகழ் புரிந்த இல்லிலோர்க்கு இல்லை இகழ்வார்முன் ஏறுபோல் பீடு நடை' (குறள்-59) என்ற பொய்யாமொழிப்படி மனைவி கற்பு நிலை கலங்கினால் கணவனது புகழும் பெருமிதமும் ஒழிதல்பற்றிக் 'காகுத்தன் புகழொடும் பொற்பும் இன்று பொன்றும்' என்றும், பிராட்டியை இங்ஙனம் நிலைகுன்றக் கண்ட பின்பு தான் உயிர் வைத்திருப்பதில் பயன் இல்லை என்பதுபற்றி 'யான் இன்று பொன்றுவென்' என்றும், இங்ஙனம் அவள் கற்பழிவதற்குக் காரணமான இராவணன் அந்தத் தீவினைப் பயனால் பந்துமித்திரருடனும் ஊரோடும் தவறாமல் விரைவில் ஒழிவன் என்பதுபற்றி 'இவ் இலங்கையும் அரக்கரும் இன்று பொன்றுவர்' என்றும் கருதினன், காற்றின் மைந்தன். தான் கண்ணுற்றது இன்றைக்கே யாதலாலும் முன்னமே அவள் நிலை கலங்கியிருப்பின் அக்கொடிய வினையால் அரக்கர்கட்கும் அவர் ஊர்க்கும் அழிவு உண்டாயிருத்தல் கூடுமாதலால், இதுவரை அங்ஙனம் ஆகாமையால் இந்த ஒழுக்கக்கேடு அன்றுதான் நிகழ்ந்திருக்கு மென்றும் கருதி 'இன்று' என்றனன். 'காகுத்தன் அருந்தேவி கற்பழிந்திருப்பின், அங்ஙனம் ஆதற்குக் காரணமான இராவணனை அரக்கருடனும் இலங்கையுடனும் ஒழித்து யானும் என் உயிரை மாய்த்துக்கொள்வேன்' என்று அநுமன் கூறியதாகப் பின் இரண்டடிகட்குக் கருத்து காணலாம். 'இவள் பிராட்டியல்லள்' என்று கருதி இராவணனது மாளிகையுள் புகுகின்றான்.

**இராவணன் :** தான் இனி மண்டோதரி மாளிகையில் இருப்பதால் பயன் இல்லை என்று அவ்விடத்தை விட்டு,

'பெருமேரு
குன்று குன்றிய தகைவுற
ஓங்கிய கொற்றமா ளிகைதன்னில்
சென்று புக்கனன் இராவணற்கு
எடுப்பருங் கிரியெனத் திரள்தோளான்' [18]

*(குன்றிய - குறுகி உள்ளது என்று சொல்லும்படி; புக்கனன் - புகுந்தனன்; கிரி - கைலாய மலை; திரள் தோளான் - திரண்ட தோளையுடையவன் (அநுமன்))*

*அந்த மாளிகையில் புகுந்தவன், வாமன வடிவத்திலும் சிறிய வடிவம் கொண்டு நிற்கின்றான், 'அணுவின் மேருவின் ஆழியான் எனச் செலும் அநுமன்'. அங்ஙனம் நின்றவன்,*

'திண்தலை பத்தும் தோள்கள்
இருபதும் தெரிய நோக்கிக்
கண்டனன்.' [19]

*'இவன்தான் இராவணன்' என்பதைத் தெளிவாக அறிந்துகொள்ளுகின்றான்; கோபம் தலைக்கேறுகின்றது. "கண்கள் காலச் செந்தீ விண்டன; கீழும் மேலும் கீண்டு வெடித்தன" - கண்கள் காலாக்கினியை உமிழ்ந்தன; கீழுலகமும் மேலுலகமும் பிளந்து வெடிக்கலாயின.*

*அநுமன் சிந்திக்கின்றான்; "பிராட்டியை வஞ்சித்துக் கவர்ந்து வந்தவனாகிய இராவணனுடைய மணிமுடிகளை என் கால்களால் உதைத்துத் தள்ளி, பத்துத் தலைகளையும் உடைத்து எனது ஆண்மைத் தன்மையைக் காட்டேனாயின், என் அடிமைத் திறன் நிறைவு பெறாது (219). அடியவன் போலப் பாவனை காட்டிப் பாசாங்கு செய்து திரிவது உண்மையான அடிமைத் திறம் ஆகாது. பிராட்டியைக் கவர்ந்து வந்த கொடிய அரக்கன் நான் பார்த்த பின்னரும் தப்பிப் பிழைக்கக்கடவனோ? அவனது திரண்ட தோள்களைத் தடித்தெறிந்து பத்துத் தலைகளையும் உருண்டோடும்படி செய்து, அவனைக் கொன்று இலங்காபுரியையும் அழித்துவிட்டால்தான் என் அடிமைத்*

*18. சுந்தர. ஊர்தேடு - 203*
*19. சுந்தர. ஊர்தேடு - 218*

திறன் நிறைவு பெறும் (220). இங்ஙனம் சினத்தினால் பேசும் அநுமன் சிந்தித்துத் தனக்குள் சொல்லிக்கொள்ளுகின்றான்.

"நான் இராவணனையும் இலங்கையையும் அழிப்பது காகுத்தனின் கட்டளையன்று. அன்றியும் ஒரு காரியத்தைச் செய்ய முயன்று வேறொரு காரியத்தைச் செய்தல் அறிவுடைமை ஆகாது. சாலவும் ஆலோசித்தால் இது பெரும்பிழையுமாகும்."

"ஆலம் உண்ட நீலகண்டனைப்போல் ஆற்றல் உடையவராயினும் பெரியோர்கள் ஆலோசியாமல் ஒரு காரியத்தைச் செய்யார். அதற்கேற்ற காலத்தை எதிர்நோக்கி அமைந்திருப்பர்."

"இராவணனோடு போர் உடற்றுமாறு உண்டான பெருஞ்சீற்றம் என் மனத்தில் அடங்கிவிடக் கடவது; 'கற்றைப் பூங்குழலாளைச் சிறைவைத்த கண்டகனை ஒரு குரங்கு போர் செய்து முடித்தது என்ற பேச்சு எழுந்தால், முனை வீரன் கொற்றப் போர்ச் சிலைத் தொழிற்கு ஒரு குறை உண்டாகிவிடும்." [20]

இங்ஙனம் சிந்தித்துச் சினம் அடங்கிய அநுமன் "மகளிர் எவரும் இராவணனுடன் படுத்து உறங்கவில்லை; இவன் நிலையும் புல் நிலைய காமத்தால் தவிக்கின்ற நிலையாக உள்ளது. பிராட்டியும் இவனுக்கு இணங்காமல் நல்ல நிலையில் உள்ளாள் என்ற நற்செய்தியும் எனக்குச் சொல்வதாக உள்ளது" [21] என்று ஊகத்தால் உணர்ந்து கொள்ளுகின்றான்.

ஈண்டும் கவிநாயகனின் சிந்தனை அவனை அல்வழியில் செல்லாது தடுத்தலைக் காணமுடிகின்றது.

**சிந்தனை - 3 :** இன்னும் பல்வேறு வகையாகச் சிந்தித்துக் கொண்டு[22] அசோக வனத்தைக் காண்கின்றான்; சிந்திக் கின்றான் : "இந்த மலர்வனத்தில் பிராட்டியைக்

---

20. சுந்தர. ஊர்தேடு - 221, 222, 223

21. சுந்தர. ஊர்தேடு - 224

22. சுந்தர. ஊர்தேடு - 226 - 233 : இந்தக் கவிதைகள் படித்து அநுபவிக்கத் தக்கவை.

*காண்பேனாயின் என் துன்பம் தீரும்; இங்கும் கண்டிலேன் எனின், செய்யத் தக்கது ஒன்றும் இல்லை; இலங்காபுரியைப் பெயர்த்தெடுத்து, இத்திரிகூட மலையிலே வீசி எறிந்து நாசப்படுத்தி யானும் உயிர் விடுவேன்'' என்று எண்ணுகின்றான்.*

*இங்குப் பிராட்டியைக் காண்கின்றான்.*

**"விரிமழைக் குலங்கிழித்து**
**ஒளிரும் மின்எனக்**
**கருநிறத்து அரக்கியர்**
**குழுவிற் கண்டனன்**
**குருநிறத்து ஒருதனிக்**
**கொண்டல் ஆம்எனாக்**
**கருநிறத்து அழகனுக்கு**
**அமைந்த காந்தையை"** [23]

*(மழைக்குலம் - மேகக்கூட்டம்; கிழித்து - பிளந்து; மின் - மின்னல்; குருநிறம் - சிறந்த நிறம்; அமைந்த - ஏற்ற; காந்தை - பிராட்டி)*

*கண்ட மகிழ்ச்சியினால்,*

**"ஆடினன் பாடினன்**
**ஆண்டு மீண்டும் பாய்ந்து**
**ஓடினன் உலாவினன்**
**உவகைத் தேன்உண்டான்."** [24]

*(உவகை - ஆனந்தம்)*

*சூழ்நிலையால் பிராட்டி கற்பு கெடாத நிலையில் உள்ளாள் என்பதை உணர்ந்து மகிழ்கின்றான்.*

*மகிழ்ச்சிப் பெருக்கில்,*

**"மாணநோற்று ஈண்டுஇவள்**
**இருந்த வாறுஎலாம்**
**காணநோற்று இலன்அவன்**
**கமலக் கண்களால்"** [25]

---

*23. சுந்தர. காட்சி - 63*
*24. சுந்தர. காட்சி - 65*
*25. சுந்தர. காட்சி - 73*

*(மாண - மாட்சிமைப்பட; நோற்று - தவம்செய்து; கமலம் - செந்தாமரை)*

*என்று கூறிக் களிக்கின்றான்; காகுத்தன் கமலக் கண்களால் கண்டு மகிழத் தவம் செய்யவில்லையே என்று கவல்கின்றான்.*

**"தருமமே காத்ததோ?**
**சனகன் நல்வினைக்**
**கருமமே காத்ததோ?**
**கற்பின் காவலோ?**
**அருமையே! அருமையே!**
**யார்இது ஆற்றுவார்?**
**ஒருமையே எம்மனோர்க்கு**
**உரைக்கற் பாலதோ?"[26]**

*என்று அவளது தூய்மையை எண்ணி எண்ணி - சிந்தித்து சிந்தித்து - வியப்பெய்துகின்றான்.*

**சிந்தனை - 4 :** *இச்சிந்தனை பல்வேறு திசையில் செல்லுகின்றது.[27] பிராட்டியைக் கண்டு பேசிய இச்சிறு செயலோடு திரும்புதல் தனது ஆண்மைக்கு இழுக்காகும்; தனது ஆண்மையைப் பகைவர் மதிக்குமாறு பெருங் காரியத்தைச் செய்து போதலே தகுதி என எண்ணு கின்றான். (1)*

*தலைவனது விருப்பத்தை நிறைவேற்றுதலே அடியவனுக்கு ஏற்ற செயல். இராமபிரான் விஷயத்தில் தீங்கு புரிந்த அரக்கர்களையெல்லாம் அவர்கள் வாழும் இடத்தோடு அழித்துப் பிராட்டியைப் பெருமானிடம் கொண்டு சேர்த்தால்தான் தன் அடிமை நிலை நிற்கும் எனக் கருதுகின்றான். (2)*

*வஞ்சனையால் கவர்ந்துகொண்டு வந்து சிறைவைத்த பிராட்டியைச் சிறை மீட்டுக் கொடுத்தால் அது மாவீரனான இராமனது பெருமைக்கு இழுக்காகும், அது பிராட்டியாலும் விலக்கப்படும். அது கிடக்கட்டும் என்று கருதுபவன் இராமபிரானது துணைவியைக் கவர்ந்த இராவணனைச்*

*26. சுந்தர. காட்சி - 75*
*27. சுந்தர. பொழிலிறுத்த 1-7*

சிறை வைத்தலோ, போர் செய்து வெல்லுதலோ இவ்விரண்டனுள் ஏதேனும் ஒன்றைச் செய்தலே தகுதி; ஒன்றுமே செய்யாது வாளா திரும்பிச் செல்வது தகுதியுடையதாகாது என்று கருதுகின்றான். (3)

'பழிக்குப் பழி வாங்குமாறு இராவணனைச் சிறை வைத்தல் அல்லது வெல்லுதலைத் தான் செய்வதும் மாவீரனான இராமபிரானது பெருமைக்குக் குறைவு தருவதேயாகும்; அதுவும் கிடக்கட்டும்' என்று அச் செயலையும் கைவிட்ட அநுமன், இராவணனைச் சேர்ந்தவர்களாகிய அரக்கரை முரியடித்து, அவன் பார்த்துக் கொண்டிருக்கையில் அவனது அரசமாதேவியான மண்டோதரியின் கூந்தலைப் பிடித்து இழுத்துக்கொண்டு போய்ச் சிறை வைத்துப் பழிக்குப் பழி வாங்கினால் மாத்திரம் தனது செய்கை சிறந்ததாகும் என்று கருதுகின்றான். (4)

பிராட்டியைக் கவர்ந்து சிறைவைத்தது பெருங்குற்றம் எனக் கூறுகின்ற நாம், அவ்விராவணனது துணைவியைத் தூக்கிக்கொண்டு வந்து சிறைவைத்தல்தான் நியாயமாகுமா என்ற சிந்தனை கொண்ட அநுமன், 'நாம் இப்போது இவ்வரக்கர்களையெல்லாம் வலியப் போருக்கு அழைத்து வருத்தித் துரத்துவதன் மூலமாகக் காகுத்தனின் வலிமைச் சிறப்பைக் காட்டுவதே செய்தொழில்; வேறு வகையாக ஆலோசிப்பதில் பயன் இல்லை' என உறுதிசெய்து, 'இவ்வரக்கர்களைப் போருக்கு இழுப்பதற்கு வழி யாது?' என்று சிந்திப்பவனாகின்றான் (5).

"அசோக வனமாகிய இச்சோலையை அழித்தால் அக்காரணம்பற்றித் தன் மேல் சினம் கொண்டு போருக்கு வருகின்ற அரக்கர்களைக் கொன்று குவித்துக்கொண்டே வந்தால், இராவணனே என் கண்ணுக்கு எதிர் காண நேர்வான்; அச்சமயத்தில் அவன் பத்துத் தலைகளையும் பனங்காய்போல் உருட்டினால் தன் மனத்துயர் தணியும்; அதன் பிறகு மீண்டு செல்வதே மனத்திற்கு மகிழ்ச்சியைத் தரும் என்று அநுமன் உறுதிசெய்து சோலையை அழிக்கத்

தொடங்குகின்றான். அவன் கருதியபடியே அவன் இந்திரசித்தால் பாசத்தால் கட்டப்பெற்று, இராவணன் முன் நிறுத்தப்பெறுகின்றான் என்பதை நாம் அறிவோம். இங்கு நாம் அநுமனைச் 'சிந்தனைச் செம்மலாகக்' காண முடிகின்றது. எப்போதும் முதல் சிந்தனை சரியாக இராது என்பதையும் அறிகின்றோம்.

**சிந்தனை 5 :** இந்திரசித்தன் நான்முகன் கணையை ஏவி அநுமனைப் பாசத்தால் பிணித்துக் கம்பீரமாக வீற்றிருக்கும் இராவணன் முன்[28] கொண்டுவந்து நிறுத்துகின்றான். தொலைவிலிருக்கும் போதே,

> **"இருந்த எண்திசைக் கிழவனை**
> **மாருதி எதிர்ந்தான்"** [29]

*(எதிர்ந்தான் - கண்டான்)*

*கண்டவுடன் சீற்றம் தலைக்கேறுகின்றது.*

> **"கருந்திண் நாகத்தை நோக்கிய**
> **கலுழனின் கனன்றான்**
> **திருந்து தோளிடை வீக்கிய**
> **பாசத்தைச் சிந்தி**
> **உருந்து நஞ்சுபோல் பவன்வயின்**
> **பாய்வென்என்று உடன்றான்"** [30]

*(கருந்திண் நாகம் - கரிய வலிய பாம்பு; கலுழன் - கருடன்; வீக்கிய - கட்டியுள்ள; சிந்தி - சிதற அடித்து; உருந்து - கோபித்து; உடன்றான் - உக்கிரம் கொண்டான்)*

**கோபத்தால் செய்யும் சிந்தனை :** "இவன் உறங்குகின்ற போது இவனைக் கொல்லுதல் பழியெனக் கருதிக் கொல்லாது விட்டேன். இப்போது சிம்மாதனத்தில் வீற்றிருப்பதைக் காண நேர்ந்தேன். இனிப் பலவகையாக யோசிக்க வேண்டியதில்லை. இப்பொழுதே இவனது

---

*28. சுந்தர - பிணிவீட்டு. 28-54. இராவணன் பெருமிதத்துடன் வீற்றிருப்பதை வருணிக்கும் பாடல்கள். பன்முறை படித்து அநுபவிக்கத் தக்கவை.*

*29. சுந்தர - பிணிவீட்டு - 55.*

*30. சுந்தர - பிணிவீட்டு - 55*

தலைகளைச் சிதற அடித்துப் பூங்கொடி போன்ற பிராட்டியைச் சிறைமீட்டு விரைவில் மீண்டு செல்வேன்" என எண்ணுகின்றான்.

"சக்கரவர்த்தித் திருமகனுடைய மனைவியாகிய பிராட்டியைச் சிறை வைத்திருப்பதைப் பார்த்துக்கொண்டே யாதொரு பரிகாரமும் செய்யமாட்டாமல் வாளா இருக்கும் தேவர்கள்[31] முதலானவர்கள் கண்காணும்படி, இவ்விராவண னுடைய கிரீடமணிந்த தலைகளைக் கொய்திலேனாயின் இனிமேல் செய்யக்கூடிய அடிமைத் தொழில் வேறு யாது உளது?

"பிராட்டியைத் தேடிக்கொண்டு வந்த ஒரு குரங்கு இவ்விராவணன் மருங்கு இருக்கும் ஆசை மகளிர் திகைத்து உள்ளே இரிந்து ஓடும்படி, இவனது கிரீடமணிந்த தலைகள் பல திசைகளிலும் உருண்டு ஓடச்செய்து வெற்றி கொண்டு ஆரவாரம் செய்கின்றது; 'அம்மம்மா! அது கொடிது! கொடிது!!' என்று உலகோர் உதிர்க்கும் புகழ்மொழி சிறிதோ? அதனைப் பெற முயல்வேன்.

"நீண்ட வாள் எயிற்று அரக்கனைக் (இராவணனை) கண்களால் நேரே காண்டற்காகவே உடம்பில் உயிர் வைத்துக்கொண்டிருந்து, இவனைக் கண்டு சில சொற்கள் கழறி மீளும்போது பழியாகிய பயனே எனக்கு வாய்க்கும்; அங்ஙனமன்றி இவனை எதிர்த்துப் போர் செய்வேனாயின் பெரும்பாலும் வெல்வேன்; அல்லது ஒருகால் தோற்றாலும் மரித்தாலும் புகழ் விளையுமேயன்றிப் பழி விளையாது.[32]

---

31. தேவர்களுள் சிலர் அடிமை செய்வோராவர். அவர்களைத் தவிர இராமன் கை ஓங்கும்போது பூமாரி பொழிவதற்கும் இராவணன் கை ஓங்கும்போது ஓடி மறைவதற்கும் தேவர்கள் உளர். இந்நிலையினை எதிர்பார்த்தோ கண்டோ 'தேவர் அனையர் கயவர்' (குறள் 1073) என்று கயவர்க்குத் தேவர்களை உவமையாக்கினார் போலும் வள்ளுவப் பெருந்தகை!

32. சுந்தர. பிணிவீட்டு - 55 - 59

*இங்ஙனம் துணிந்த அநுமன் சினந்தணிந்து அத்துணிவு தகுதியன்று எனக் கருதுகின்றான். வேறு விதமாகச் சிந்திக்கின்றான். "காரியம் அன்று என நீதியின் நினைந்தான்."* [33]

**மாறாகச் செய்யும் சிந்தனை :** *சிந்திக்கும் மாருதி, இந்த இராவணன்,*

**" கொல்லலாம் வலத்தனும்**
**அல்லன்; கொற்றமும்**
**வெல்லலாம் தரத்தனும்**
**அல்லன்."** [34]

*என்று கருதுகின்றான்; இனி, வருங்காலத்தில் இவன் வலிமையைக் காகுத்தன் ஒருவனாலேயே வெல்லுதல் கூடும்; மற்றையோர் எவரும் இவனை வெல்லமுடியாது.*[35] *மேலும்,*

**" என்னையும் வெலற்குஅரிது**
**இவனுக்கு ஈண்டு;இவன்**
**தன்னையும் வெலற்குஅரிது**
**எனக்கு"** [36]

*இவனுடன் எதிர்த்துப் போர் புரிந்தால் போரிலேயே பல நாள்கள் கழிந்துவிடும். ஆகவே, நெருங்குதற்கரிய போர்த்தொழிலைத் தொடங்குவது நல்லது அன்று.*[37]

*"ஏழு பேருலகங்களும் இன்புறும்படி இராவணனது தோள்களையும் தலைகளையும் துணித்துத் தள்ளுவேன் யான்" என்று ஊழியான் தண்டகாரணிய முனிவர்க்கு அபயமளித்து வாக்குறுதி தந்துள்ளான் அன்றோ? இப்போது யான் இவனை எதிர்த்துக் கொல்லுவேன் ஆயின், அந்த வாக்குறுதி நிறைவேறாமல் போகுமன்றோ? ஆதலாலும், யான் இப்பொழுது போர் தொடங்குதல் தகுதியன்று.*[38]

*மற்றும், "பொங்கு வெம் செருவிடையே பொழுது போக்கினால், இங்கு ஒரு திங்கள் இருப்பல் யான்' என்று*

*33. சுந்தர. பிணிவீட்டு - 60*
*34. சுந்தர. பிணிவீட்டு - 61*
*35. சுந்தர. பிணிவீட்டு - 61*
*36. சுந்தர. பிணிவீட்டு - 62*
*37. சுந்தர. பிணிவீட்டு - 62*
*38. சுந்தர. பிணிவீட்டு - 63*

*தம் நாயகன்மீது ஆணையிட்டுக் கூறிய பிராட்டியும் இராமன் வரக் காணாது உயிரை விட்டிடுதல் உறுதி.*

> **"ஆதலால் அமர்த்தொழில்**
> **அழகிற்று அன்றுஅரும்**
> **தூதனாம் தன்மையே**
> **தூய்தென்று உன்னினான்."** [39]

*என்று கருதியவன் இராவணனின் இருப்பிடத்தைச் சார்ந்தான். ஈண்டும் அநுமனின் சிந்தனை அவனைத் தவறான வழியில் செயற்படாமல் தவிர்ப்பதைக் காணமுடிகின்றது.*

*இங்ஙனம் மேற்காட்டப்பெற்ற ஐந்து சிந்தனைகளாலும் அநுமன் முறையல்லா முறையில் செயற்படாது தவிர்க்கப்பெறுகின்றான். இவை 'எண்ணித் துணிக கருமம்' என்ற வள்ளுவனின் அறிவொளியையும் காட்டுகின்றன. இவற்றால் காற்றின் மைந்தனை நாம் 'சிந்தனைச் செம்மல்' என்று கருதலாமல்லவா?*

***39. சுந்தர. பிணிவீட்டு - 64***

## 4. விழையும் உருவினன்

அநுமன் 'அஞ்சனக் கிரியனைய' இராமனை ஓர் அந்தண மாணி வடிவங்கொண்டு அணுக எண்ணுகின்றான். சற்று மறைவாக இருந்து இராமலக்குமணர்களை ஆராய்கின்றான்; எண்ணுகின்றான். இவர்களைக் கண்டமாத்திரத்தில்,

"என்பெனக்கு உருகு கின்றது
இவர்கின்றது அளவில் காதல்
அன்பினுக்கு அவதி இல்லை
அடைவென்கொல் அறிதல் தேற்றேன்"[1]

(என்பு - எலும்பு; அவதி - எல்லை; தேற்றேன் - அறிய மாட்டாதவனாயுள்ளேன்)

என்று கருதுகின்றான். ஒருசமயம், காற்றின் வேந்தன் தன் மகன் அநுமனை நோக்கி "நீ திருமாலுக்கு அடிமைசெய்" என்றான். அப்பொழுது மாருதி "யான் திருமாலை எங்ஙனம் அறிவது?" என்று வினவ, வாயுதேவன் "எவரைக் கண்ட மாத்திரத்தில் காரணமின்றி உனக்கு அளவற்ற பேரன்பு உண்டாகின்றதோ அவரையே திருமால் என்பதாக அறிக" என்று சொல்லியிருந்தான். அதனைச் சிந்திக்கின்றான்; மாணியாக உருமாற்றிக்கொண்டது, **முதல் உருவ மாற்றம்.**

(2) இலக்குவன், தம்மை யார் என்ற விளக்கம் தந்த பிறகு அநுமன் இராமன் திருவடிகளில் விழுந்து தண்டன் இடுகின்றான்.

"நின்றஅக் காலின் மைந்தன்
நெடிதுவந்து அடியில் தாழ்ந்தான்"[2]

(கால் - காற்று)

---

1. கிட்கிந்தை - அநுமப். 15
2. கிட்கிந்தை - அநுமப். 32

என்னும் பாடற்பகுதியால் இதனை அறிகின்றோம். வணங்கிய அளவில்,

'தாழ்தலும் தகாத செய்தது
என்னைநீ தருமம் அன்றால்
கேள்விநூல் மறைவ லாள
என்றனன்" [3]

என்பதில் 'சத்திரியனைப் பார்ப்பனன் வணங்குவது முறையல்லவே' என்று அருளிச்செய்கின்றான். இதனைச் செவியுற்ற மாருதி,

"பாழியந் தடந்தோள் வென்றி
மாருதி பதுமச் செங்கண்
ஆழியாய்! அடியேன் தானும்
அரிக்குலத்து ஒருவன் என்றான்" [4]

(அரி - குரங்கு)

என்கின்றான். 'அடியேன் அரிக்குலத்து ஒருவன்' என்று விளக்குவான்.

உடனே, 'தருமத்தின் தனிமை தீர்ப்பான்' போன்ற மாருதி பேருருவம் கொண்டு தனது உண்மையான வானர உருவைக் காட்டி நிற்கின்றான், இராமலக்குமணர்கள் அதிசயமடையும்படி. நான்மறைகளாலும் நல்ல சாத்திரங்களாலும் பெரிய உருவத்தைக்கொண்டதென்று சொல்லப்பெறுகின்ற பெரும் பொருள்களும் தனது உருவத்திற்குமுன் சிறுமையுற்றுத் தோன்றும்படியாகவும், பொன்மயமான மகாமேரு பர்வதம் தனது தோள்கட்கு ஒப்பாகமாட்டாதபடியும் பேருருக் கொண்டான் என்பது கவிஞரின் குறிப்பு. இராவணன் முதலிய அரக்கர்களால் நாசம் செய்யப்பெற்று அழிந்துபோன நிலையிலிருந்ததான தருமத்தை அநுமன் இராமனுக்குத் துணையாக இருந்து அவர்களைச் சங்கரித்து நிலை நிறுத்துவதனால் 'தருமத்தின் தனிமை தீர்ப்பான்' என்ற விருதை அப்பெருந்தகைக்கு வழங்குகின்றான், கவிப்பெருந்தகை.

3. கிட்கிந்தை அநுமப். - 33 (முற்பகுதி)
4. கிட்கிந்தை அநுமப். - 33 (பிற்பகுதி)

5

*அநுமன் கொண்ட பேருருவத்தின் சிறப்பை,*

**"கண்டிலன் உலக மூன்றும்**
**காலினால் கடந்து கொண்ட**
**புண்டரி கக்கண் ஆழிப்**
**புரவலன் பொலங்கொள் சோதிக்**
**குண்டல வதனம் ஒன்றால்**
**கூறலாம் தகைமைத் தொன்றோ?"** [5]

*(கடந்து - அளந்து; புண்டரிகம் - செந்தாமரை; ஆழி - சக்கரப்படை)*

*என்று மேலும் கூறுவான். திரிவிக்கிரமாவதாரம் செய்த திருமாலான இராமனாலே பேருருவம் கொண்ட மாருதியின் திருமுகத்தைக் காணமுடியவில்லை என்றால், அவ்வுருவத்தின் சிறப்பை நம்மால் எவ்வாறு எடுத்துச் சொல்ல முடியும் என்கின்றான், கவிஞன். இஃது அநுமனின்* **இரண்டாவது பேருருவம்.**

*(3) சுக்கிரீவன் கட்டளைப்படி தென்திசை சென்ற வானரர்கள் ஒரு பாலைவனத்தைக் காண நேரிடுகின்றது; வெப்பந்தாங்க முடியாமல் அங்குக் காணப்பெற்ற ஒரு பிலத்தினுட் புகுகின்றனர். அஃது இருள் செறிந்திருந்தமையால் அநுமனது வாலைப் பற்றிக்கொண்டு நடக்கின்றனர்; ஒரு பட்டணத்தை அடைகின்றனர். அங்குத் தவமே உருவெடுத்தாற் போன்ற சுயம்பிரபை என்ற ஒரு பெண்ணைக் காண்கின்றனர்.*[6] *வானர வீரர்கள் அவள் தவ வடிவைக் கண்டு வணங்குகின்றனர். இவள் பிராட்டியாக இருக்கக்கூடுமோ எனவும் ஐயுறுகின்றனர். அநுமன் இராமன் கூறிய அடையாளங்களைக் கருத்திற்கொண்டு அவள் பிராட்டி அல்லள் என்று அவர்கட்குத் தெளிவிக்கின்றான்.*

*சுயம்பிரபை அவர்களை இராம தூதர்கள் என அறிந்து தனது சாபம்*[7] *நீங்கும் காலம் நெருங்கிற்றென்ற காரணத்தால்*

---

5. கிட்கிந்தை - அநுமப். - 35
6. கிட்கிந்தை - பிலம்புக்கு - 48
7. இந்திரனால் ஏற்பட்ட சாபம். பிலம் என்ற நகரம் மயனது தவத்தை மெச்சி நான்முகனால் அவனுக்கு அளிக்கப்பெற்றிருந்தது.

அவர்கள்மீது அன்பு பாராட்டி அவர்களை உபசரிக்கின்றாள். அவள் இருந்த பிலம் நூறு யோசனை பரந்த வடிவுள்ளது. அவள் தனக்கு மேலுலகம் எய்தும் வழியைக் கூறுமாறு வேண்ட, அநுமன் அதற்கு வாக்குறுதி தருகின்றான். மற்றைய வானர வீரர்களும் அந்த இருட்குகையினின்று வெளியேற வழி காண வேண்டுகின்றனர். அவன் புன்சிரிப்புடன் 'அஞ்சற்க' என்று கூறி,

"மடங்கலின் எழுந்துமழை
ஏறரிய வானத்து
ஒடுங்கலில் பிலந்தலை
திறந்துஉல கொடுஒன்ற
நெடுங்கை கள்பெயர்த்து
நெடுவா னுறநிமிர்ந்தான்."[8]

ஆண் சிங்கம் போன்ற அநுமன் மற்றையோர்க்கு அபயமளித்து அலட்சியமாகச் சிரித்துக்கொண்டே பிலம் முதல் ஆகாயம் வரையில் ஒரே வழியாகத் திறக்குமாறு தனது கைகளைத் தூக்கிக்கொண்டு பேருருவம் கொண்டு நிமிர்ந்தனன். இது மூன்றாவது பேருருவம். இதனைக் கவிஞன், பாதலத்தில் அழுந்திக் கிடந்த பூமியைத் தனது கோரத் தந்தத்தினால் குத்தி எடுத்துக்கொண்டு வெளிவந்த திருமாலின் ஆதிவராகத்தைப் போன்றனன் என்பன்.[9] இன்னும் திரிவிக்கிரமனின் அழகிய ஒப்புற்ற சிவந்த திருவடியையும் ஒத்தனன் என்றும் சிறப்பிப்பன்.[10]

---

மயன் அதனைத் தன் காதலி ஹேமை (ஏமை) என்பவளுக்கு அளித்தான். அவ்விருவரும் சிற்றின்பத்தில் மூழ்கியிருந்தனர். சுயம்பிரபை (ஏமையின் தோழி - உயிர்த்தோழி) அவளுடன் இருந்தாள். ஏமையைத் தேடிவந்த இந்திரன் நிலையை அறிந்து, சீற்றம் கொண்டு மயனைக் கொன்றுவிடுகின்றான். நடந்த செயலை அறிந்த இந்திரன் அதற்குச் சுயம்பிரபைதான் முதற்காரணம் என்பதை அறிந்து, தெளிந்து, ஒருவரும் இல்லாத இந்நகரத்தைப் பாதுகாத்துக்கொண்டு தனியே இருக்குமாறு சாபம் இடுகின்றான்; இராமதூதர்கள் வருங்காலத்தில் சாபம் நீங்கும் என்று சாப விமோசனமும் தருகின்றான்.

8. கிட்கிந்தை - பிலம்புக்கு - 68.

9. கிட்கிந்தை - பிலம்புக்கு - 69.

10. கிட்கிந்தை - பிலம்புக்கு - 70. அநுமனுக்குத் திருவடி என்றே ஒரு பெயர் இருத்தலால் வேறு வகையாகக் காரணப் பொருள்

*(4) பிராட்டியைத் தேடுவதற்காகத் தென்திசை வந்த வானரர் கூட்டம் மகேந்திரமலை அடிவாரத்தில் தங்குகின்றது. அநுமன்தான் கடலைக் கடந்து இலங்கைக்குச் செல்லவேண்டும் என்ற முடிவு ஏற்படுகின்றது. அநுமன் வானர வீரரிடம் விடைபெற்று மகேந்திரமலையின் உச்சிக்கு ஏகுகின்றான்; பெருவடிவு கொள்ளுகின்றான். இதனைக் கம்பன்,*

**"பொருவரு வேலை தாவும்**
**புந்தியான் புவனம் தாய**
**பெருவடிவு உயர்ந்த மாயோன்**
**மேக்குறப் பெயர்ந்த தாள்போல்**
**உருவறி வடிவின் உம்பர்**
**ஓங்கினன்."** [11]

*(பொருவுரு - ஒப்பற்ற; வேலை - கடல்; புவனம் - உலகம்; தாள் - திருவடி)*

*என்று கூறுவான். ஆகாயத்தை அளத்தற்காக உயர எடுத்த திரிவிக்கிரமனது திருவடி போல அநுமன் வானத்தை அளாவுமாறு பெருவடிவம் கொண்டனன் என்பதாக விளக்குவான். இராமாவதாரத்தில் திருமாலுக்கு வாகனமாக இருந்து உதவியதுபற்றி அநுமனுக்குத் திருவடி என்ற பெயர் ஏற்பட்டது. கவிஞன், 'திருவடி' என்ற பெயர் யாவர்க்கும் தெரியுமாறு உயர்ந்து நின்றான் என்றான்.*

*அநுமன் இங்ஙனம் நின்ற நிலையைக் கவிஞன் மேலும் விளக்குவது அற்புதம். பெருவடிவம் கொண்ட அநுமனது பாரம் அழுத்துதலால் மலை கீழே அழுந்தியது; அதன் சிகரங்கள் நொறுங்கின. அநுமனது வால் அவன் உடம்பைச் சுற்றிக்கொண்டு நின்றது. மகேந்திரமலை மகாகூர்மத் திற்கும், மகேந்திரமலைமேல் நின்ற அநுமன் மந்தர மலைக்கும், அநுமனது உடலைச் சுற்றிய அவனது வால் மந்தர மலையைச் சுற்றிய வாசுகி என்ற நாகத்திற்கும் ஒப்பாகின்றன என்று கவிஞன் விளக்குவது, கேட்போர்*

---

***உரைப்பார் போன்று இவ்வாறு வருணித்தனன் போலும் என்று கருதி மகிழலாம்.***

*11. கிட்கிந்தை. மயேந்திரப் - 26*

மனத்தைக் கவரவல்லதாக அமைகின்றது. இது நான்காவது பேருருவம்.

(5) சுரசை[12] நிகழ்ச்சி : அநுமன் இலங்கையை நோக்கி அதிவேகத்துடன் சென்றுகொண்டிருக்கும்பொழுது சுரசை என்பவள் அரக்கி வடிவு கொண்டு அநுமன்முன் தோன்றுகின்றாள். அவனை அதட்டிக் "கொழுப்புப் பொருந்திய குரங்குக் குலத்தில் பிறந்தவனே! கொடிய யமனும் அஞ்சும்படி வாழ்பவனே! எனக்கு ஏற்ற உணவுப் பொருள் நீ" என்று சொல்லிக்கொண்டு, அகன்ற வாயைத் திறந்த நிலையில் தனது தலை ஆகாயத்தை முட்டுமாறு நிற்கின்றாள்; மேலும் பேசுகின்றாள், "என் யானைப் பசியைத் தீர்க்க நீ என்னை நெருங்கிவிட்டாய். என் வாயினுள் புகுவாயாக. நீ தப்பிச் செல்லும் வழி ஆகாயத்தில் வேறு இல்லை" என்று.

அநுமன், "பெண்ணாகிய நீ பசிப்பிணியால் வருந்துகின்றாய். தேவர்கட்குத் தலைவனாகிய இராமனது கட்டளையை நிறைவேற்றிவிட்டு மீண்டு வந்தால், அப்போது என் உடம்பை உண்பாய்" என்று நட்பு முறையில் சொல்ல, அவள் சிரித்து, "நின்னைத் தின்பேன்" என்று கூறலும், மாருதி, "வல்லவளாயின் அதனைச் செய்" என்று கூறினன். அவள் அநுமனை விழுங்குமாறு வாயைத் திறக்க, அநுமன் மிக்க பேருருவம் கொள்ளுகின்றான். "திக்கு ஆர் அவள் வாய் சிறிதாம் வகை சேணில் நீண்டான்" (70). அநுமன் உடனே சிறிய வடிவம் கொண்டு அவள் வாயினுட் புகுந்து அவள் வாய் மூடுவதற்குள் மீண்டு வந்திடுகின்றான். இங்குக் கொண்டது ஐந்தாவது பேருருவம். இங்கு மிகச்சிறிய வடிவம் கொள்ளுகின்றதையும் காண்கின்றோம்.[13] "புகை புகா வாயிலும் புகுவான்"[14] என்று கவிஞர் பின்னர்க் கூறியதையும் நினைவுகூர்கின்றோம்.

---

12. சுரசை : அநுமனது ஆற்றலைச் சோதிக்கத் தேவர்களால் அனுப்பப்பெற்ற நாகமாதா. மனத்தூய்மை மிக்கவள்.

13. சுந்தர. கடல்தாவு - 65 - 71.

14. சுந்தர. ஊர்தேடு - 140

*(6) பிராட்டியைத் தேடிவந்த அநுமன் பிராட்டியைக் கண்டு ஆற்றவேண்டிய அனைத்தையும் நிறைவேற்றிய பிறகு இராவணனைக் கண்டு இராமனுடைய பலத்தை அவனுக்குப் புலப்படுத்த விழைகின்றான். அதற்கு உத்தியாக அசோக வனத்தை அழிக்கத் தொடங்குகின்றான். அழித்தால் தடுக்க இராக்கதர் பலர் வருவர்; அவர்களைக் கொன்று குவித்தால் இறுதியில் இராவணனைக் காண வாய்ப்பு ஏற்படும் என்பது அவனது திட்டம். சீதாப்பிராட்டி இருந்த மரத்தைத் தவிர அநேகமாக அனைத்து மரங்களையும் அழித்துவிட்டுத் தனியாக நிற்கின்றான்.*

**"ஏழினொடு ஏழு நாடும்**
**அளந்தவன் எனலும் ஆனான்,**
**ஆழியின் நடுவண் நின்ற**
**அருவரைக்கு அரசும் ஒத்தான்**
**ஊழியின் இறுதிக் காலத்து**
**உருத்திர மூர்த்தி ஒத்தான்."** [15]

*(அளந்தவன் - திரிவிக்கிரமன்; அருவரை மந்தரமலை; ஊழி - கற்பாந்த காலம்)*

*இப்போது தனியே நின்ற அநுமனுக்கு, மிக்க பேருருவம் கொண்டதனால் திரிவிக்கிரம மூர்த்தியும், கடலைக் கலக்கியதால் மந்தரமலையும், எல்லாவற்றையும் அழித்து நிற்றலால் உருத்திரமூர்த்தியும் உவமையாயினர். இங்குப் பேருருவம் கொண்டது* **ஆறாவது பேருருவம்** *ஆகும்.*

*(7) கிங்கரர், சம்புமாலி ஆகியவர்களையெல்லாம் வதைத்துவிட்டு அநுமன் சிறிய வடிவத்துடன் அசோக வனிகையின் தோரண வாயிலில் அமர்ந்திருக்கையில் பஞ்சசேனாபதிகள் படையைத் திரட்டி அணிவகுத்துக் கொண்டு வருவதைக் காண்கின்றான். வந்தவர்களுள் சில படைவீரர்கள் "புன்றலைக் குரங்கு போலும் மால் அமர்; வென்றது விண்ணவர் புகழை வேரொடும், தின்றவல் அரக்கரைத் திருகித் தின்றதால்" [16] என்று அயிர்க்கின்றனர். அரக்கர்கள் அயிர்த்ததைக் குறிப்பினால் உணர்ந்த 'கற்றுணர் மாருதி' உடனே பேருருவம் கொள்ளுகின்றான். "மீயுயர்*

15. சுந்தர. பொழிலிறுத்த - 46.
16. சுந்தர. பஞ்சசேனாபதிகள் வதை - 28

*விசும்பையும் கடக்க வீங்கினான்."* [17] இந்த வடிவத்துடன் ஓர் இரும்புத் தூணை கையில் ஏந்திக்கொண்டு போரிடுகின்றான், அநுமன். இறுதியில் அனைவரும் அழிந்துபடுகின்றனர். இதனைக் கவிஞன்,

**"வெஞ்சின அரக்கர் ஐவர்**
**ஒருவனே வெல்லப் பட்டார்**
**அஞ்செனும் புலன்கள் ஒத்தார்**
**அவனும்நல் அறிவை யொத்தான்."** [18]

*என்று ஓர் அற்புத உவமையால் விளக்குவான். ஐம்பொறிகள் பஞ்ச சேனாபதிகட்கும், தத்துவ உணர்வு அநுமனுக்கும் உவமைகளாக நின்று கருத்தைப் படிப்போர் நெஞ்சில் ஆணித்தரமாகப் பதியவைக்கின்றன. ஈண்டு கொண்டது* **ஏழாவது பேருருவம்.**

*(8) பஞ்ச சேனாபதிகட்கு அடுத்து வந்த அட்சய குமரனை 'அரைத்துத் தேய்த்த' பிறகு* [19] *இந்திரசித்தன் வருகின்றான். "எம்பியோ தேய்ந்தான் எந்தை புகழன்றோ தேய்ந்தது''* [20] *என்று பொருமிக்கொள்ளுகின்றான், இராவணனிடம்.*

**"ஆயினும் ஐய நொய்தின்**
**ஆண்டொழிற் குரங்கை யானே**
**ஏயெனும் அளவிற் பற்றித்**
**தருகுவென் இடர்என்று ஒன்றும்**
**நீஇனி யுழக்கற் பாலை**
**அல்லைநீடு இருத்தி"** [21]

*(ஏஎனும் அளவில் - சுருங்கிய காலத்தில்; நொய்தின் - எளிதில்; உழக்கற்பாலை அல்லை - வருந்தத் தக்கவன் அல்லை)*

*என்று சொல்லிப் போர்க்களத்திற்கு வருகின்றான். அநுமன் மீது அம்புகளைப் பொழிகின்றான். நெடுஞ்சினங் கொண்ட அநுமன்* **பேருருவம்** *கொள்ளுகின்றான்.*

---

*17. சுந்தர. பஞ்சசேனாபதிகள் வதை - 29*
*18. சுந்தர. பஞ்சசேனாபதிகள் வதை - 64*
*19. அட்சயகுமரன் வதை - 38*
*20. பாசப்படலம் - 5*
*21. சுந்தர. பாசப். 12*

"மறியும் வெண்திரை மாகடல்
உலகெலாம் வழங்கிச்
சிறிய தாய்சொன்ன திருமொழி
சென்னியிற் சூடி
நெறியின் நின்றதன் நாயகன்
புகழெனா நிமிர்ந்தான்" [22]

*(திருமொழி - திருவார்த்தை; சென்னி - தலை; நெறி - நன்னெறி; நாயகன் - இராமன்)*

*என்று காட்டுவான், கம்பன். இங்கு அநுமன் யோகபலத்தால் பேருருவம் கொண்டதாகக் கூறுவான், கம்பன். இந்த உருவத்தின் ஒருபகுதியைமட்டிலுந்தான் இந்திரசித்து பார்க்க முடிந்தது.[23] ஒரு நிலையில் அநுமனது போரின் கொடுமையைத் தாங்கமுடியாமல் நான்முகன் கணையைத் தொடுக்கின்றான். அது அரவு வடிவங்கொண்டு அநுமனைப் பிணிக்கின்றது. இவண் கூறப்பெற்றது எட்டாவது பேருருவம்.*

*(9) இராவணன் முதற்போர் புரியுங்கால், இலக்குவன் அவனுடன் மோதுகின்றான். ஒருநிலையில் இராவணன் இலக்குவனின் அம்பறாத்தூணீரத்தைத் துணித்து விடுகின்றான். அப்போது இளைப்பாறிய நிலையிலிருந்த அநுமான் இராவணனின் தேர் எதிரே நடந்து நெருப்புப் புறப்பட விழித்து "இம்மாயப் போரைத் தவிர்; பின் போர்கள் உள்ளன" என்று கூறியவண்ணம் பேருருவம் கொள்ளுகின்றான்.*

"நின்றான் அவன் எதிரேஉலகு
அளந்தான்என நிமிர்ந்தான்" [24]

*என்பது கவிஞனின் வாக்கு. அடுத்து வரும் கவிதையில் மேலும் விளக்குவான் :*

"எடுத்தான்வலத் தடக்கையினை
அதுபோய்உல கெல்லாம்
அடுத்தாங்குற வளர்ந்தான்திரு
வடியின்வரவு அன்னான்

*22. சுந்தர. பாசப் - 41*
*23. சுந்தர. பாசப் - 42*
*24. யுத்த. முதற்போர். 161*

மடுத்தாங்குற வளர்ந்தான்என
வளர்கின்றவன் உருவம்
கடுத்தான்எனக் கடியாற்கெதிர்
காண்பாய்எனக் காட்டா" [25]

அநுமன், திரிவிக்கிரம அவதாரத்தை யொத்தான் என்று யாவரும் கூறும்படி மிகவும் வளர்ந்து தன் பெரிய வலக் கையைத் தூக்கினான்; அது சென்று உலகமெல்லாம் அடுத்து நிற்க, இராவணன் எதிரே நின்று 'இதனைக் காண்பாயாக' என்று கூறி வீரவாதம் செய்கின்றான். பிறகு, இராவணன், அநுமன் ஆகிய இருவரிடையேயும் குத்துச் சண்டைபற்றிய சவால்கள் நடைபெறுகின்றன.[26] இங்கு நடைபெற்றது ஒன்பதாவது பேருருவம்.

(10) இந்திரசித்து, நான்முகன் கணையை விடுத்து, இலக்குவனையும் வானரர்களையும் உயிர் ஒடுங்கச் செய்கின்றான். சாம்பவான் 'சஞ்சீவி' கொணர முயல வேண்டும் என்று கூறி, அதனைக் கொணரத் தக்கவன் அநுமன் ஒருவனே என உணர்த்துகின்றான்; அஃது இருக்கும் இடம், செல்லும் வழி முதலியவற்றை விவரமாகக் கூறுகின்றான். அநுமன் அம்மருந்தைக் கொணர ஒருப்பட்டு ஆயத்தனாகிப் பேருருவம் கொள்ளுகின்றான்.

"ஓங்கினன்வான் நெடுமுகட்டை யுற்றனன்பொற்
றோளிரண்டும் திசையோ டொக்க
வீங்கினவா காசத்தை விழுங்கினனே
எனவளர்ந்தான் வேதம் போல்வான்" [27]

என்பது கம்பன் காட்டும் பேருருவச் சொல்லோவியம். உயரமாக வளர்ந்து தலை வான்முகட்டைத் தொட்டது. அவனுடைய தோள்கள் இரண்டும் திசையோடொப்ப வளர்ந்தன. ஆகாயத்தை முழுவதும் விழுங்கினான் போலப் பேருருவம் கொண்டான்.

இந்தப் பேருருவத்தின் நிலையை மேலும் விளக்குவான், கவிஞன். கோள்களும் நட்சத்திரங்களும் அநுமனுக்குக் கோத்து அமைத்த முத்து மணிகளாலியன்ற வடங்களை

25. யுத்த. முதற்போர் - 162
26. யுத்த. முதற்போர் - 164 - 186
27. யுத்த. மருத்துமலை - 30

*ஒத்தன; தோளோடு தோளுக்கு உள்ள அகலம் ஆயிரம் யோசனை எனவும் சொல்லமுடியாது. வைத்துள்ள அடியோடு பெயர்த்து வேறோர் அடிவைக்க இலங்கையில் இடம் இல்லாமல் போயிற்று. பெரிய கையை வீசுவதற்கு நீளமாக ஓடுகின்ற திசையே போதாது. மருந்து கொணர விரைந்து எழுபவனான மாருதியின் உருவ நிலை இதுவாகும்.*[28]

*அநுமன் விரைந்து எழுந்த நிலையை,*

**"வால்வளைத்துக் கைந்நிமிர்த்து வாயினையும்**
**சிறிதகல மடித்து மாளக்**
**கால்நிலத்தின் இடையூன்றி உரம்விரித்துக்**
**கழுத்தினையும் சுருக்கிக் காட்டித்**
**தோள்மயிர்க்குந் தளஞ்சிலிர்ப்ப விசைத்தெழுந்தான்**
**அவ்விலங்கை துளங்கிச் சூழ்ந்த**
**வேலையிற்புக்கு அழுந்தியதோர் மரக்கலம்போல்**
**திரிந்துஅயர விசயத் தோளான்"** [29]

*(உரம் - மார்பு; விசைத்து - வேகமாக; துளங்கி - நிலை கலங்கி; வேலை - கடல்)*

*என்ற பாடலில் காட்டுவான். பாடலை மீட்டும் மீட்டும் பன்முறைப் படித்து அநுபவித்து அந்த உருவத்தை மனத்தில் நிலைநிறுத்த முயல்வோம்.*[30] இங்கு எடுத்தது **பத்தாவது பேருருவம்.**

*(11) நிகும்பலை யாகம் கலைந்த பிறகு போர் நடைபெறுகின்றது. இலக்குவனும் இந்திரசித்தும் மோதுகின்றனர். இந்திரசித்து தேர்மேல் இருந்துகொண்டு போர்செய்ய இலக்குவன் தரையில் நின்றுகொண்டு போர் செய்யும் நிலை. இதனைப் பார்த்துப் பொறுக்காத மாருதி இலக்குவனைத் தன் தோளின்மீது ஏறிப் போர் செய்யுமாறு வேண்ட அவனும் இசைந்து அவ்வாறே செய்கின்றான்.*

**"சிந்தாகுலம் களைந்தான்என**
**நெடுஞ்சாரிகை திரிந்தான்."** [31]

---

***28. யுத்த. மருத்துமலை - 32***
***29. யுத்த. மருத்துமலை - 32***
***30. கடல் தாவு படலத்தில் அவன் கொண்ட உருவத்துடனும் வேகத்துடனும் ஒப்பிட்டு மகிழலாம்.***
***31. யுத்த. நிகும்பலையாகம் - 102***

*'தேவர்களின் சிந்தாகுலத்தை இவன் போக்கிவிட்டான்' என்று கண்டோர் கருதும்படி நெடுஞ்சாரிகை திரியலானான். இங்ஙனம் சாரிகை திரிவதால் இந்திரசித்தை இலக்குவன் எளிதில் வெல்லலாம் என்ற எண்ணமுண்டாக அவ்வழியால் தேவர்களின் கவலையைக் களைந்தவனாகின்றான். இருவரிடையே நடைபெறும் போரை வருணிக்கப்புகும் கம்பநாடன்,*

**"கார்ஆயிரம் உடனாகிய**
**தெனலாகிய கரியோன்**
**ஓராயிரம் பரிபூண்டதொ**
**ருயர்தேர்மிசை உயர்ந்தான்**
**நேராயினர் இருவோர்களும்**
**நெடுமாருதி நிமிரும்**
**பேராயிரம் உடையான்எனத்**
**திசைஎங்கணும் பெயர்ந்தான்."** [32]

*என்ற பாட்டைத் தொடங்குகின்றான். ஆயிரம் பரிகள் பூண்டதோர் தேரில் இந்திரசித்து உயரத் தோன்றுகின்றான். இலக்குவனும் திரிவிக்கிரமனாகிய ஓங்கிய ஆயிரம் பேர் படைத்த திருமால் போல நெடிய மாருதிமீது திரியலானான். இதனால் இருவரும் நேருக்கு நேராகின்றனர். 'நெடுமாருதி' என்ற தொடர் அநுமனும் இந்திரசித்தனின் தேர் அளவிற்கு ஓங்கி வளர்ந்தமையைக் குறிப்பாற் புலப்படுத்துகின்றது. இங்கு அநுமன் மேற்கொண்டது* **பதினொன்றாவது பேருருவம்** *என்பதாகக் கொள்ள ஏதுவாகின்றது.*

*(12) இராமன் கானகம் செல்வதற்கு முன், தேவர்கள் கருத்துப்படி அரசை மேற்கொள்ளுமாறு இராமன் பரதனை வேண்ட அவனும் ஒரு சூளுரையுடன் அதற்கு ஒருப்படுகின்றான்.*

**"ஆமெனில் ஏழிரண் டாண்டில் ஐய!நீ**
**நாமநீர் நெடுநகர் நண்ணி நானிலம்**
**கோமுறை புரிகிலை என்னில் கூர்எரி**
**சாம்இது சரதநின் ஆணை சாற்றிலேன்"** [33]

---

*32. யுத்த. நிகும்பலை யாகம் - 103*
*33. அயோத்தி. திருவடி - 133*

என்பது சூளுரை. இதில் "அண்ணா, நீ பதினான்கு ஆண்டுகள் கழிந்ததும், ஒருநாள்கூடத் தாமதிக்கலாகாது. அங்ஙனம் வாராமல் ஒருநாள் தாமதித்தாலும் எரிதழலின் மூழ்கி என் உயிரை மாய்ப்பேன். உன்மேல் ஆணை" என்று சூளுரைக்கின்றான். இராம காதையைக் கற்போர் அனைவரும் இதனை நன்கு அறிவர்.

இராமன் இந்த வாக்குறுதியைக் கடைப்பிடித்தானா? இல்லை என்பதே மக்கள் தீர்ப்பு. இராமன் முதலியோர் புட்பக விமானத்தில் அயோத்திக்குத் திரும்புகின்றனர். அதனை அறிந்த பரத்துவாசமுனிவர் இருடிகள் சூழ இராமனை எதிர்கொள்ளச் செல்லுகின்றனர். அதனைக் கண்ணுற்ற இராமன் புட்பக விமானத்தை இறங்கச் செய்கின்றான். இராமன் விரைவாக முனிவன் முன் சென்று வணங்க, இருவரும் ஒருவரையொருவர் தழுவிக்கொண்டு மகிழ்கின்றனர்.

பரத்துவாசர் 'இன்று எம் விருந்தாளியாக இருக்க' என்று இராமனை வேண்ட, அவனும் அவ்வாறே ஒருப்படுகின்றான். "பரதன் உயிர் பெரிதா, முனிவர் அளிக்கும் விருந்து பெரிதா?" என்பதை ஓராது விருந்திற்கு இணங்குகின்றான். இது பெருங்குற்றம். கணையாழியுடன் அநுமனைச் செய்தி கூறி அனுப்பியது சரிதான் என்றாலும் விருந்திற்குத் தங்கியது சரியன்று. அதனால்தான் இராமன் **'சாப்பாட்டு இராமன்'** ஆகின்றான். இது மக்கள் தீர்ப்பு. எத்தொழிலும் செய்யாது உண்டு ஊர் சுற்றுபவனுக்குச் 'சாப்பாட்டு இராமன்' என்று வழங்கப்பெறும் சாட்டுப் பெயர். 'நடையில் நின்றுயர் நாயகனுக்கு' வழங்கப்பெறுகின்றது, பொதுமக்களால்.

இராமனுக்குப் பரதன் நினைவும் வருகின்றது. இதனைக் கவிஞன்,

> **"இன்று நாம்பதி வருதுமுன்**
> **மாருதி ஈண்டச்**
> **சென்று தீதின்மை செப்பியத்**
> **தீயவித்து இளையோன்**

நின்ற நீர்மையும் நினைவுநீ
தேர்ந்தெம்மி னோர்நல்
நன்றெ னாவவன் மோதிரம்
கைக்கொடு நடந்தான்." [34]

என்று காட்டுவான். "அநுமனே, நாம் அயோத்திக்கு ஏகுவதற்கு முன்பே, இப்போது விரைவாகச் செல்க. நந்தியம் பதியிலுள்ள எம்பி பரதனுக்கு எம் நலத்தைக் கூறுக. அவனது ஒழுக்கத்தையும் எண்ணத்தையும் ஆராய்ந்து அறிந்து எம்மிடம் வந்து சேர்க" என்று கூறி அடையாளமாகத் தன் மோதிரத்தைக் கொடுக்க, அதனைப் பெற்றுக்கொண்டு செல்கின்றான் அநுமன், அந்தண வடிவத்துடன்.

குறிப்பிட்ட நாளில் இராமன் திரும்பாததால் சத்துருக்கனால் தீ மூட்டப்பெறுகின்றது. கோசலை, பரதனைத் தீயில் விழாது தடுத்துக்கொண்டிருக்கின்றாள். இந்நிலையில் அநுமன் வருகின்றான். "ஐயன் வந்தனன், ஆரியன் வந்தனன்" என்று கூறிக்கொண்டு வருபவன் "கையி னால்எரி யைக்கரி யாக்கினான்" [35] அடையாளமாக இராமனுடைய கணையாழியையும் தருகின்றான். மகிழ்ச்சி யால் பல நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

பரதன் அநுமனைக் கொண்டாடி "நீ யார்?" என்று அவனை வினவ, அவனும் தன் வரலாறு கூறுகின்றான்.

"காற்றினுக்கு அரசன்பால் கவிக்கு லத்தினுள்
நோற்றனள் உயிற்றின்வந்து உதித்து நும்முனாற்கு
ஏற்றிலா வடித்தொழில் ஏவ லாளனேன்
மாற்றினென் உருவொரு குரங்கு மன்னயான்" [36]

என்று கூறியவன்,

"அடித்தொழில் நாயினேன் அற்ப யாக்கையைக்
கடித்தடந் தாமரைக் கண்ணின் நோக்கெனா
பிடித்தபொய் உருவினைப் பெயர்த்து நீக்கினான்
முடித்தலம் வானவர் நோக்கின் முன்னுவான்" [37]

34. யுத்த. மீட்சி. 202
35. யுத்த. மீட்சி. 240
36. யுத்த. மீட்சி. 256
37. யுத்த. மீட்சி. 257

*என்ற கவிதையில் கூறியுள்ளவாறு பேருருவம் கொள்ளலானான். மானிட உருவத்தை நீக்கித் தனது முடித்தலம் வானத்திலுள்ளவர்களின் கண்களில் எதிர்ப்பட வளர்பவனானான். அதனைக் கண்டவர் அதிசயமும் அச்சமும் கொள்ளலாயினர். பின்னர், பரதனது வேண்டுகோட்கிணங்கப் பெருவடிவத்தைச் சுருக்கிக் கொள்ளுகின்றான். இஃது அநுமன் கொண்ட* **பன்னிரண்டாவது பேருருவம்.**

*இங்ஙனம் இராம காதையில் சந்தர்ப்பத்திற்கு ஏற்ப, தேவைக்கு ஏற்ப, பன்னிரண்டு ஆழ்வார்களின் எண்ணிக்கை போல், துவாதச திருமண் காப்பு எண்ணிக்கை போல் பன்னிரு முறை பேருருவங்கள் கொண்டு அநுமன் இராம கைங்கரியத்தில் ஈடுபட்டுத் திறமையாகச் செயலாற்றுவதைக் காண்கின்றோம். இவனது வடிவத்தை மாற்றிக்கொள்ளும் திறமையைக் கம்பநாடன்,*

"அணுவின் மேருவின் ஆழியான்
எனச்செலும் அநுமன்" [38]

*என்றும், 'புகைபுகா வாயிலும் புகுவான்'* [39] *என்றும் பாராட்டி மகிழ்வான். அவன் வடிவம் எடுக்கும் பெருமையைப் படிக்கும் நாமும் கவிஞனின் பாராட்டில் கலந்துகொண்டு மகிழ்ச்சியில் திளைக்கின்றோம்.*

---

*38. சுந்தர. ஊர்தேடு - 134*
*39. சுந்தர. ஊர்தேடு - 140*

## 5. அஞ்சா நெஞ்சன்

"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்." (774)[1]

வீரன் ஒருவன் தான் கையில் ஏந்திய வேலைத் தன்னை எதிர்த்து வந்த யானையின்மீது எறிந்து அதன் உயிரைப் போக்கிவிடுகின்றான். அவன் வேறு வேலைத் தேடுகின்ற நிலையில் தன் மார்பில் தைத்திருந்த பகைவரின் வேலைக் கண்டு, அதனைப் பறித்து மகிழ்கின்றான். அஞ்சா நெஞ்சுடைய வீரன் ஒருவனைக் காட்டும் வள்ளுவரின் சொல்லோவியம் இது. இத்தகைய அஞ்சா நெஞ்சத்தைத் தன்னகத்தே கொண்டு திகழ்வதற்கு இராமகாதையில் வரும் அஞ்சனை வயிற்றில் வந்துதித்த ஆஞ்சநேயனை எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். கிட்கிந்தா காண்டத்தில் இவன் வீரத்தைப் புலப்படுத்துவனவாகச் சிறப்பு நிகழ்ச்சி ஒன்றையும் காணமுடியவில்லை. இதற்கு இரு காரணங்களைக் கூறலாம்.

(1) வாலிக்கு அஞ்சி, அவன் மதங்க முனிவரின் சாபத்தால் ஏகுதற்கு முடியாத ருசியமுக பர்வதத்தில் வாழும் வானரக் கூட்டத்தில் முக்கியமானவனாக விளங்குபவன், இவன். முனிவரின் சாபத்தால் தன் பலம் தெரியாத நிலையில் சுக்கிரீவனுக்காக வாலியுடன் போரிடுவதற்கு வாய்ப்பில்லை என்று கருதலாம்.

(2) 'உன்னை எதிர்த்துப் போரிடுபவனின் பலத்தில் பாதி உன்னுடன் சேர்ந்துவிடும்' என்று வாலி வரம் பெற்றுள்ளபடியால் மதிநலம் வாய்த்த மாருதி வாலியுடன் மோதக் கனவிலும் கருதவில்லை என்றும் கொள்ளலாம்.

---

1. திருக்குறள் - படைச்செருக்கு - 7

*பிராட்டியைத் தேடுவதற்குத் தென்திசைக்கு அனுப்பப் பெற்ற வானரக் கூட்டம் மகேந்திர மலையின் அடிவாரத்தில் இருக்கும்போது, சாம்பவான் அநுமனைப் புகழ்ந்து பேசுவதால் சாபவிமோசனப்படி அநுமன் தன் பலத்தை அறிந்துகொள்ளுகின்றான்; கடல் தாண்டிச் செல்ல ஒருப்படுகின்றான். இதுமுதல் அவனது வீரதீரச் செயல்களைக் காணமுடிகின்றது. சுந்தர காண்டம் தொடங்கி யுத்த காண்டம் இறுதிவரையில் அவனது வீரச்செயல் களைக் காண்கின்றோம்.*

**1. கடல்தாவும்போது** : *நடைபெறும் மூன்று நிகழ்ச்சி களினால் அநுமனது வீரப் பண்பு வெளிப்படுகின்றது.*

*(1) அநுமன் காற்றுப் போல விரைந்து தாவிச் செல்லும்போது 'மைந்நாகம்'* [2] *என்னும் மலை கடலினின்று எழுந்து, ஆகாயம் பொருந்த எழுந்து வந்தது.*

> **"கைந்நாகம் அந்நாள் கடல்வந்ததொர்**
> **காட்சி தோன்ற**
> **மைந்நாகம் என்னும் மலைவானுற**
> **வந்த தன்றே."** [3]

*அம்மலை மேலும் கீழும் வியாபித்து நின்றதைக் கண்ட அநுமன் சிறிதும் அஞ்சாது, முதலில் அதனை இன்னதென்று உணராது ஐயுற்றனன். ஐயுற்றவன் தலைகீழாக விழும்படி அதனைத் தன் மார்பினால் தள்ளிவிட்டு மிக உயரத்தில் செல்லலானான்.*[4] *பிறகு மைந்நாகம் மானிட வடிவம் கொண்டு வந்து விருந்துண்ணும்படி வேண்ட, அதற்கு அநுமன் தக்க சமாதானம் கூறி விடைபெற்றுச் சென்றான்.*[5]

---

*2. மைந்நாகம் : இந்திரன் மலைகளின் சிறகுகளை அரிந்த காலத்தில் இம்மலை வாயு தேவனின் உதவியினால் கடலில் சேர்க்கப்பெற்றது. வருணன் அதனைக் காத்து வந்தான். இராம தூதனும் காற்றின் மைந்தனுமாகிய அநுமனுக்கு ஏதேனும் உதவி புரியுமாறு வருணனால் அனுப்பப்பெற்றது, இம்மலை.*

*3. சுந்தர. கடல்தாவு - 39*

*4. சுந்தர. கடல்தாவு - 52*

*5. சுந்தர. கடல்தாவு - 61*

*(2) தேவர்களின் வேண்டுகோளின்படி சுரசை என்பாள் அநுமனது பலத்தை ஆராய அரக்கி உருக்கொண்டு வந்தாள்.*

**"ஆன்றுற்ற வானோர் குறைநேர**
**அரக்கி யாகித்**
**தோன்றுற்று நின்றாள் சுரசைப்பெயர்ச்**
**சிந்தை தூயாள்."[6]**

*வந்தவள், அநுமனை நோக்கி, "நீ இங்கு வந்தது தீயே எனலாய எனது பசிப்பிணியைத் தணிப்பதற்காகவே போலும்" என்றாள்.*

**"நீயே இனிவந்துஎன் நிணங்கொள்**
**பிணங்கு எயிற்றின்**
**வாயே புகுவாய் வழிமற்றிலை**
**வானின் என்றாள்."[7]**

*(நிணம் - மாமிசம்; பிணங்கு - வளைந்த; எயிறு - கோரப்பல்; வானின் - ஆகாயத்தில்)*

*அதற்கு மாருதி மறுமொழியாக, "பெண்ணாகிய நீ பசிப்பிணியால் நொந்தாய்; இராமனது கட்டளையை நிறைவேற்றிவிட்டுத் திரும்பி வந்தால் என் யாக்கையை உண்பாய்; யானும் உதவற்கு உடன்படுவேன்" என்று நட்பால் சொல்லினன்.*

*அநுமன் சொன்னதைக் கேளாமல் அவ்வரக்கி "உன்மேல் ஆணை; நான் உன்னை இப்போதே விழுங்கியே தீர்வேன்" என்று கூற, அதற்கு அநுமன் சவாலாக, "நான் உன் வாயிற் புகுந்து செல்லுகின்றேன்; உனக்கு ஆற்றல் இருந்தால் என்னை விழுங்குவாய்" என அலட்சியமாகக் கூறினன்.[8]*

**"அக்காலை அரக்கியும் அண்டம்**
**அனந்த மாகப்**
**புக்கால் நிறையாத புழைப்பெரு**
**வாய்தி றந்து**
**விக்காது விழுங்க நின்றாள்."[9]**

*6. சுந்தர. கடல்தாவு - 65*
*7. சுந்தர. கடல்தாவு - 67*
*8. சுந்தர. கடல்தாவு - 69*
*9. சுந்தர. கடல்தாவு - 70*

*(புழை - துவாரம்; விக்காது - விக்கல் எடுக்காமல்)*

*அநுமனும் எல்லாத் திசைகளிலும் பரவிய அவளது வாய் சிறிதாகுமாறு ஆகாயத்தில் நீண்டு வளர்ந்தான். நீண்டு வளர்ந்தவன் உடனே தனது உடலைச் சுருக்கிக்கொண்டு, அவளது அகன்ற வாயினுட்புகுந்து, அவள் ஒருமுறை மூச்சு விடுவதற்கு முன்னமே அதிவிரைவாக வெளிவந்து விட்டான்.*[10] *அதுகண்டு தேவர்கள் வியந்தனர். "இராவண வதம் இவன் உதவியால் இனிதே முடிந்துவிடும்" என உறுதிகொண்டு அவனை வாழ்த்தினர். சுரசையும் உண்மை வடிவத்துடன் அநுமனை வாழ்த்திச் செல்ல, அவனும் அவளைப் புகழ்ந்து சென்றான்.*[11]

*(3) அங்காரதாரை*[12] *என்ற அரக்கி ஒருத்தி குறுக்கிடுகின்றாள். அநுமனது பெரிய நிழலைக் கடலிலே கண்டு, நெடுநாளாகவுள்ள தன் பசியைத் தீர்க்கப் போதுமானதாகவுள்ள இரை கிடைத்ததென்று மகிழ்ந்து, அந்நிழலைப் பிடித்துக்கொண்டு அநுமனது செலவைத் தவிர்த்தாள்.*

**'இங்கார் கடத்திர்'எனை**
**என்னா எழுந்தாள்**
**அங்கார தாரைபெரிது**
**ஆலாலம் அன்னாள்"** [13]

*(ஆலாலம் - ஆலகாலவிடம்)*

*உலக உருண்டைக்கு ஏற்படுத்திய உறை போன்ற பெருந்துவாரமான வாயையுடைய இவள், கடல் நீர் தன் காலைக் கழுவவும், முடி, வான் முகட்டை முட்டவும் நிமிர்ந்து நின்றபோது 'அறத்தையும் அருளையும் அடியோடு*

---

***10. சுந்தர. கடல்தாவு - 71***

***11. சுந்தர. கடல்தாவு - 72***

***12. அங்காரதாரை : தனக்கு நேரே வானத்தில் செல்லுகின்ற பிராணியின் நிழலைத் தான் பிடித்த மாத்திரத்தில் அப்பிராணி பிடிக்கப்பட்டுவிடும்படியான பேராற்றல் உடையவள். அதனால் சாயாக்கிரகிணி என்ற பெயரையும் கொண்டவள். ஸிம்ஹிகை என்ற மற்றொரு பெயரும் இவளுக்கு உண்டு. அங்காரதாரை - தணலின் கொழுந்து போலக் கொடியவள் என்று பொருள்படும் வடசொற்றொடர்.***

***13. சுந்தர. கடல்தாவு. 75***

விழுங்கிவிட்ட ஒருத்தி' என்று தெரிந்துகொண்டான், அநுமன்.

அவளது வாய் வழியாகச் சென்றாலன்றி ஆகாயத்தில் அநுமன் செல்ல வேறு வழி இல்லை. அவளது வாய் வழியாகப் புகுந்து, அவளது ஆழ்ந்த குகை போன்றுள்ள வயிற்றைப் பிளக்குமாறு கருதி, அவளை நெருங்கி, "நீ யார், இங்கு எதற்காக நிற்கின்றாய்?" என்று வினவினான். அதற்கு அவள் "நீ என்னைப் பெண் என்று அவமதிக்க வேண்டா; என்னை எதிர்ப்பவர்கள் தேவர்களேயானாலும் இறந்தே விடுவர்; யமனாலும் என் கைப்பட்ட உயிரை விடுவிக்க இயலாது" என்று மறுமொழி கூற, அநுமன் அவள் திறந்த வாயினுட் புகுந்து, அவள் கதறும்படியாக ஒருநொடிப் பொழுதில் அவளது குடலைப் பிடுங்கிக்கொண்டு வெளியேறினான். தேவர்கள் மகிழ்ந்தனர்; அசுரர்கள் வருந்தினர்.

இந்த மூன்று நிகழ்ச்சிகளினாலும் அநுமனது அஞ்சாநெஞ்சம் - வீர உணர்வு - தெளிவாகின்றது.

**2. தூதனாய்ச் சென்றபோது** : இலங்கையில் தூதனாய்ச் சென்றபோது நிகழ்ந்த நிகழ்ச்சிகள் யாவும் இவனது வீரத்தைப் பிரகடனப்படுத்துகின்றன.

(1) இலங்காதேவி : காவல் மிகுந்த வாயில் வழியாகச் சென்றால் காலம் நீட்டிக்கும் என்று கருதி மதிலைக் கடந்து செல்லும்போது இலங்காதேவி[14] வழி மறிக்க இருவரிடையே யும் மோதல் நிகழ்கின்றது. இலங்கிணி எட்டுத்தோள்களும், நான்குமுகமும் கொண்டவள்; பிரகாசமுள்ள மேனியை யுடையவள்; சுழலும் கண்களையுடையவள். பகைத்து மோதி வந்தால் மூவுலகத்தையும் அடியோடு கட்டிவிடுபவள். யமனுடைய வலிமை இவளுக்கு உண்டு. நகரத்தை விழிப்புடன் பாதுகாத்து வருபவள். இவள் அநுமனை

---

***14. இலங்காதேவி : இலங்கிணி என்ற பெயருடைய இவள் இலங்கையைப் பாதுகாத்து வரும் நகர தேவதை. நான்முகன் கட்டளைப்படி இந்நகரைக் காத்துவருபவள். இவள் வலி அழிந்தால் இந்நகரம் அழியும் என்பது நான்முகன் கட்டளை.***

*அதட்டிப் பேச, மாருதி பணிவாய்ப் பேசுகின்றான். இவள் அநுமன்மீது சூலத்தை எறிய, அதை அவன் ஒடித்து எறிந்து விடுகிறான்; மற்ற ஆயுதங்களையும் அவ்வாறே செய்கின்றான். அவள் மாருதியை அடிக்க நெருங்க, அவன் அவளை அடித்து வீழ்த்த, அவள் எழுந்து சில சொல்லித் தன்னை இன்னாள் எனத் தெரிவித்து, "இந்நகர் விரைவில் அழியும்" என்று கூறி விடை பெற்று ஏகுகின்றாள்.*

*(2) அசோக வனத்தை அழித்துத் தனியாக நின்ற அநுமன், அருகிலிருந்த செய்குன்றத்தைப் பெயர்த்தெடுத்து இலங்கைமீது விட்டெறிந்து அழிக்கின்றான்.*

**"விட்டனன் இலங்கை தன்மேல்**
**விண்ணுற விரிந்த மாடம்**
**பட்டன பொடிக ளான**
**பகுத்தன பாங்கு நின்ற**
**சுட்டன பொறிகள் வீழத்**
**துளங்கினர் அரக்கர் தாமும்**
**கெட்டனர் வீரர் அம்மா**
**பிழைப்பரோ கேடு சூழ்ந்தார் !"[15]**

*அநுமன் எறிந்த செய்குன்றினால் இலங்கையிலுள்ள மாட மாளிகைகள் தகர்ந்து பொடிகளாகின்றன. அப்போது தோன்றிய நெருப்புப்பொறிகளால் அண்மையிலுள்ள பொருள்கள் யாவும் சுடப்பெற்று ஒழிகின்றன; அரக்க வீரர்கள் அஞ்சி நடுங்கிக் கெட்டொழிகின்றனர். பருவத் தேவர்கள் இராவணனிடம் செய்தி அறிவிக்கின்றனர்.*

**(3) கிங்கரர் வதையின்போது :** *இராவணன் ஏவலால் கிங்கரர் வருகின்றனர். பல்வேறு ஆயுதங்கள் தாங்கிய வண்ணம் அநுமனை அவர்கள் எதிர்க்க, அவன் ஒரு மரத்தைக்கொண்டு அவர்கள் ஆயுதங்கள் அனைத்தையும் அவர்களையும் பலபடியாக அழித்தொழிக்கின்றான். இதனைப் பல பாடல்கள் தெரிவிக்கின்றன. ஒரு பாடல் :*

**"ஓடிக் கொன்றனன் சிலவரை;**
**உடல்உடல் தோறும்**

*15. சுந்தர. பொழிலிறுத்த - 54.*

கூடிக் கொன்றனன் சிலவரை;
கொடிநெடு மரத்தால்
சாடிக் கொன்றனன் சிலவரை;
பிணந்தொறும் தடவித்
தேடிக் கொன்றனன் சிலவரை;
கறங்குஎனத் திரிவான்" [16]

*(கறங்கு - காற்றாடி)*

*சிலரைப் பம்பரம் போல் சுழலும்படி விட்டெறிகின்றான். மேலும் பலரைப் பாழ்படுத்தியதை,*

"கரத லத்தினும் காலினும்
வாலினும் கதுவ
நிரைம ணித்தலை நெரிந்துஉகச்
சாய்ந்துஉயிர் நீப்பார்
சுரர்ந டுக்குற அமுதுகொண்டு
எழுந்தநாள் தொடரும்
உரகர் ஒத்தனர் அநுமனும்
கலுழனே ஒத்தான்." [17]

*(கரதலம் - கை; கதுவ - பற்ற; சுரர் - தேவர்கள்; உரகர் - சர்ப்பசாதியார்; கலுழன் - கருடன்.)*

*என்ற பாடலால் அறியலாம். நந்தவனத்து நாயகர்கள் இச்செய்தியை இராவணனிடம் தெரிவிக்கின்றனர். அநுமனது பராக்கிரமத்தை ஈண்டும் காண முடிகின்றது.*

---

*16. சுந்தர. கிங்கரர் வதை - 36*

*17. கிங்கரர் வதை - 48. கருடன் தனது தாயான விந்தையின் அடிமைத்தன்மையை ஒழிக்கக் கருதித் தேவர்களுடன் பொருது வென்று, அந்தத் தேவலோகத்திலிருந்த அமிருதத்தை எடுத்து வர முயலுகையில் அதற்குக் காவலாய் உள்ளவரும் திருட்டிவிட முள்ளவரும், நெருப்புப்பொறி பறக்கின்ற கண்களையுடையவரும், பெருவலிமை படைத்தவரும், மிகக் கொடியவரும், கண்களினாலேயே சுட்டு எரிக்க வல்லவருமான இரு உரகர் கண் கொட்டாமல் எதிர்த்து நிற்பது கண்டு, 'இவர்களை நாம் எவ்வாறு வெல்வது?' என்று ஆலோசித்து, தனது இறகுகளினால் அவர்கள் கண்களைப் புழுதி நிரம்பும்படி செய்து, அவர்கள் கண் பார்வை தெரியாத சமயத்தில் அவர்களைக் கண்டதுண்டமாக்கிய பிறகு அமிர்தத்தைக் கவர்ந்தான். - இந்தச் செய்தி பாரதம் - ஆதிபர்வத்தில் உள்ளது.*

இந்தப் போரில் அரக்கரது அம்பு முதலியவற்றால் அநுமனது புயங்களில் தோன்றிய புண்களைக் கணக்கிடுதல் அரிது. தனியனாய் நின்று 'கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும் ஆற்றலது படை' என்ற பண்பை இவனிடம் காண்கின்றோம்.

**"விழுப்புண் படாதநா**
**ளெல்லாம் வழுக்கினுள்**
**வைக்கும்தன் னாளை**
**எடுத்து" (776)**

என்ற வள்ளுவர் பெருமான் வாக்கின்படி அநுமன் பட்ட விழுப்புண்கள் அவனுக்குச் சிறப்பாக அமைகின்றன.

**(4) சம்புமாலி வதை :** இராவணன் கட்டளைப்படி அநுமனை உயிரோடு பிடித்துவரச் சம்புமாலி சதுரங்க சேனையுடன் புறப்பட்டு வருகின்றான். அந்த வனத்தின் வாயிலில்,

**"இந்திர தனுவின் தோன்றும்**
**தோரணம் இவர்ந்து நின்றான்[18]**

அவன் நிற்கும் நிலையை,

**சூழிரும் கதிர்கள் எல்லாம்**
**தோற்றிடச் சுடரும் சோதி**
**ஆழியின் நடுவில் தோன்றும்**
**அருக்கனே அனையன் ஆனான்" [19]**

(கதிர்கள் - கிரணங்கள்; ஆழி - கடல்; சோதி - பேரொளி; அருக்கன் - சூரியன்.)

இங்ஙனம் அவன் வருகையைக் காண்கின்றோம். அவன் தோள் கொட்டி ஆர்த்தலை,

**"கொல்லியல் அரக்கர் நெஞ்சில்**
**குடிபுக அச்சம் வீரன்**
**வில்லென இடிக்க விண்ணோர்**
**நடுக்குற வீரன் ஆர்த்தான்" [20]**

---

*18. சுந்தர. சம்புமாலி - 15.*
*19. சுந்தர. சம்புமாலி - 16*
*20. சுந்தர. சம்புமாலி - 17*

(இடிக்க - பேரொலி உண்டாக)

என்றும், தோள் கொட்டுதலை,

"பூவும்
குன்றமும் பிளக்க வேலை
துளக்குறக் கொட்டி னான்தோள்" [21]

(பூ - பூமி; குன்றம் - மலை; துளக்குற - நிலை கலங்க)

என்றும் கவிஞன் நமக்குக் காட்டுவான். அரக்கர்களிடையேயும் அநுமனிடமும் கடும்போர் நிகழ்கின்றது. சேனைகள் அனைத்தையும் அந்தந்தச் சேனைகளையே தன் போர்க் கருவிகளாகக்கொண்டு அழித்தொழிக்கின்றான்.[22] காலன் தன்மையனான சம்புமாலி தனிப்பட்டு நிற்கின்றான்[23]; அந்நிலையிலும் போர்க்கு விரைகின்றான். அவனை நோக்கி, 'பூத்த மரம் போல் புண்ணால் பொலிகின்ற' மாருதி, "நீ தனிப்பட்டாய்; என்னுடன் போர் செய்தால் நீ மாள்வது உறுதி; வலி குறைந்து எளிமைப்பட்டு நிற்கும் நின் உயிரை வாங்குதல் நீதி அன்று; உன்னை விடுகின்றேன்; திரும்பிப் போ" [24] என்று இரக்கம் தோன்றக் கூறுகின்றான்.

அநுமன் உரையைப் பொருட்படுத்தாது சம்புமாலி சினந்து அம்புமாரி பொழிகின்றான்; அனைத்தையும் தன் கையிலுள்ள எழுவால் விலக்குகின்றான், அநுமன். சம்புமாலி அந்த எழுவை விலக்கிவிடுகின்றான்; சற்று மனம் சலித்துப் பின்னர் தன் கைகளினாலேயே அம்புகளை மோதித் தள்ளுகின்றான், மாருதி.

"ஒலித்தார் அமரர் கண்டார்
ஆர்ப்பத் தேரின் உட்புக்குக்
கலித்தான் சிலையைக் கையால்
வாங்கிக் கழுத்தின் இடையிட்டு
வலித்தான் பகுவாய் மடித்து
மலைபோல் தலைமண் இடைவீழ" [25]

21. சுந்தர. சம்புமாலி - 18
22. சுந்தர. சம்புமாலி - 30
23. சுந்தர. சம்புமாலி - 41
24. சுந்தர. சம்புமாலி - 43
25. சுந்தர. சம்புமாலி - 47

*(ஒலித்தார் - தழைத்தலையுடைய மாலை; அமரர் - தேவர்; கலித்தான் - வீர ஒலி செய்பவன்; சிலை - வில்; வலித்தான் - மாட்டி இழுத்தான்; பகுவாய் - பிளவுபட்ட வாய்)*

*பழங்காலத்தில் திண்ணைப்பள்ளி ஆசிரியர், வளைந்த பிரம்பைக்கொண்டு சிறுவன் கழுத்திட்டுத் தன் பக்கம் வரும்படி இழுப்பதுபோல், அநுமன் வில்லின் நாணை சம்புமாலியின் கழுத்திலிட்டு அதனைச் சுழற்றித் திருகி இழுத்துக் கொன்று, அவன் உடலை மண்ணிடை வீழ்த்தினான். ஈண்டு மாருதியின் செருச் செய்யும் திறலைக் கண்டு வியக்கின்றோம்.*

**(5) பஞ்சசேனாபதிகள்[26] வதை :** *சம்புமாலி மாண்ட செய்தியை அறிந்த இராவணன் பெருஞ்சினம் கொண்டு தானே புறப்பட, சேனாபதிகள் அவனை விலக்கி, இசைவு பெற்றுப் பெருஞ்சேனையுடன் புறப்படுகின்றனர். அநுமன் பேருருவம் கொண்டு, சதுரங்க சேனை அடங்கிய அப்பெருஞ்சேனையைக் கடலில் வீழ்த்தி அழிக்கின்றான்.[27] சேனைகள் அழிந்ததும் சேனாபதிகள் மாருதியை நெருங்கு கின்றனர். அவர்கட்கும் இவனுக்கும் நடைபெறும் கடும் போரில் ஐவரும் ஒருவர்பின் ஒருவராக மாளுகின்றனர்.[28] ஐவரும் அநுமனால் இறந்தமைபற்றிக் கவிஞன்,*

**"வெஞ்சின அரக்கர் ஐவர்**
**ஒருவனே வெல்லப் பட்டான்**
**அஞ்செனும் புலன்கள் ஒத்தார்**
**அவனும்நல் அறிவை ஒத்தான்." [29]**

***26. பஞ்சசேனாபதிகள் - விருபாட்சன், யூபாட்சன், துர்த்தரன், பிரகனன், பாசகர்ணன் என்ற பெயரினர்.***

***27. பஞ்சசேனாபதி வதை - 39.***

***28. பஞ்சசேனாபதி வதை - 50, 54 57, 63.***

***29. பஞ்சசேனாபதி வதை - 64.***

***★ அக்க குமாரன் - அட்சகுமாரன். இவன் இராவணனுக்கு மகன். இவனைப்பற்றிக் கம்பனில் குறிப்பு இல்லை; அபிதான சிந்தாமணி யிலும் இராவணகுமாரன் என மட்டுமே உள்ளது. அதிகாயன் இறந்தபோது தானியமாலி (தாய், இராவணன் மனைவி) புலம்புவதைப் போலவும், மேகநாதன் மரித்த போது மண்டோதரி புலம்புவது போலவும் எந்த மகளிரும் புலம்பவில்லை. தேய்ப்புண்ட***

பெருவீரனாய்த் தனிப்பட்டவனான அநுமன், மிகக் கொடியவராய் வெல்வதற்கு அரிய பஞ்ச சேனாபதிகளை வென்றதற்குத் தீய வழிகளில் செல்லும் தன்மையனவாய் அடக்கமுடியாத ஐம்புலன்களை எளிதில் வெல்லும் தத்துவ உணர்ச்சியை (அறிவை) உவமை கூறியது அற்புதம். சேனாபதிகள் அழிந்த செய்தி இராவணனை அடைகின்றது.

**(6) அக்ககுமாரன் ★வதை :** பஞ்ச சேனாபதிகள் பரலோகம் அடைந்த செய்தியைக் கேட்ட இராவணன் கொதித்தெழுகின்றான்; தானே நேரில் போருக்கெழுவதாகப் புறப்பட, அக்ககுமாரன் பணிந்து இரு பாதங்களிலும் விழுந்து தொழுது தன்னை அனுப்புமாறு வேண்டுகின்றான். இராவணனும் அதற்கு ஒருப்பட்டு அவனைச் செல்ல விடுக்கின்றான். "சிவபெருமான், நரசிங்கம், ஆதிவராகம் ஆகிய இவர்களே குரங்கு வடிவமாக வந்திருந்த போதிலும் அதனை நின்னிடம் கொணர்ந்து நிற்க வைக்கின்றேன்" என்று தந்தையிடம் சூளுரைத்துச் செல்லுகின்றான், தனயன். அவனுக்குத் துணையாகப் பல அரக்க குமாரர்கள் ஏகுகின்றனர்.

**"ஆறிரண்டு அடுத்த எண்ணின்**
**ஆயிரம் குமரர் ஆவி**
**வேறிலாத் தோழர் வென்றி**
**அரக்கர்தம் வேந்தர் மைந்தர்**
**ஏறிய தேரர் சூழ்ந்தார்**
**இறுதியில் யாவும் உண்பான்**
**சீறிய காலத் தீயின்**
**செறிசுடர்ச் சிகைகள் அன்னார்"** [30]

(ஆறிரண்டு அடுத்த எண் ஆயிரம் = பன்னீராயிரம்; காலத்தீ - யுகாந்த காலாக்கினி; சிகைகள் - சுவாலைகள்; அன்னார் - ஒத்தவர்கள்)

---

**தம்பியின் உடலைப் பிணங்களுக்கிடையே கண்ட இந்திர சித்தன் (பாசப்-20) சோகமும் கோபமும் கொள்ளுகின்றான்; "ஒப்படை இல்லாரெல்லாம் உலந்தனர் குரங்கும் ஒன்றே, எப்படை கொண்டு வெல்வது இராமன் வந்து எதிர்க்கின்" என்று விம்மலுறுகின்றான். (பாசப். 17) இராவணன் வருந்தியதாகப் பாடல் இல்லை. இராவண குடும்பத்தில் அட்சயகுமாரன் வாசகர்கட்கு ஓர் அநாதைபோல் தோற்றம் அளிக்கின்றான் !**

*30. சுந்தர. அக்க குமாரன் வதை - 9*

பன்னீராயிரம் அரக்க குமாரர்கள் தேரின்மீது ஏறிக் கொண்டு அவனுக்குத் துணையாகச் சென்றனர். அந்நிலையை மாருதி காண்கின்றான். "காற்றின் சேய் வரவு கண்டான்" [31], அக்ககுமாரன்; "நம்முடைய ஊரில் போந்து, சோலையை முரித்து அழித்து, அம்மட்டோடு நில்லாமல் மிகப்பல அரக்கரையும் அழித்து, நமக்கும் பேரவமானத்தை யும் உண்டாக்கியதனால் இக்குரங்கைக் கொல்வதுடன் நில்லாமல், மூவுலகிலும் தேடித் தேடிச் சென்று குரங்குச் சாதியைக் கருவோடு அழித்து, இம்மூவுலகிலும் குரங்கு என்ற பேரே இல்லாமல் செய்துவிடுவேன்" [32] என்று தன் சாரதியிடம் சூளுரைக்கின்றான்.

கடுமையான போர் நிகழ்கின்றது. அரக்கர் சேனை அழிந்துபடுகின்றது. இறுதியில் அக்ககுமாரனுக்கும் அநுமனுக்கும் போர் நிகழ்கின்றது. தனியாக அக்ககுமாரன் தன் ஒற்றைத் தேரில் வந்து அநுமனை எதிர்க்கின்றான்.[33] அரக்கன் எய்த அம்புகளையெல்லாம் அநுமன் தன் கையிலுள்ள இரும்புத்தண்டினாலே விலக்கி அழிக் கின்றான்.[34]

பின்னர், அவன் தேரின்மீது பாய்ந்து சாரதியின் உயிரை ஒழிக்கின்றான். தேரையும் தன் கைகளால் நொறுக்கிச் சின்னபின்னப்படுத்துகிறான். நேராக அவனை அணுகி, அவன் வில்லைப் பிடித்துக்கொள்ளுகின்றான். இருவரும் மாறிமாறி வில்லை இழுக்க அது முரிந்து அழிகின்றது. பிறகு, அரக்கன் வாளினால் பொருகின்றான்; அநுமன் அதனையும் அழித்தொழிக்கிறான். பின் தன் வாலால் அரக்கனைச் சுற்றிப் பிணிக்கின்றான்; அவன்மீது ஏறிக்கொள்கின்றான்; தன் வாலினால் பற்றிக்கொண்ட நிலையில், அநுமன் பற்கள் உதிரும்படி அவன் கன்னத்தில் அறைகின்றான்; பின்னர், பேரொளியையுடைய மின்னற்கூட்டம் மேகத்தினின்று வெளிவந்து விழுவது போல் காதிலணிந்துள்ள

31. சுந்தர. அக்க குமாரன் வதை - 17
32. சுந்தர. அக்க குமாரன் வதை - 23
33. சுந்தர. அக்க குமாரன் வதை - 31
34. சுந்தர. அக்க குமாரன் வதை - 33

குண்டலங்கள் முதலிய இரத்தினாபரணங்களில் பொருந்திய மணிகள் முதலியன சிந்திவிடவும், வயிற்றிலுள்ள குடல்கள் சரிந்துவிடவும், அவனுடைய பிடரியை வலிமை பொருந்திய ஒற்றைக் கையினால் பிடித்துக்கொண்டு மற்றொரு கையினால் பல குத்துக் குத்தி, அவன் உடலினின்று பக்கத்தில் ஒரு குதி குதித்தான்.[35]

பின்னர், அவனை ஒழித்துக் கட்டியதைக் கம்பன்,

**"நீத்துஆய் ஓடின உதிரப் பெருநதி**
**நீர்ஆ கச்சிலை பார்ஆகப்**
**போய்த்தாழ் செறிதசை அரிசிந் தினபடி**
**பொங்கப் பொரும்உயிர் போகாமுன்**
**மீத்துஆம் நிமிர்சுடர் வயிரக் கைகொடு**
**பிடியா விண்ணொடு மண்காணத்**
**தேய்த்தான் ஊழியின் உலகுஏழ் தேயினும்**
**ஒருதன் புகழ்இறை தேயாதான்."** [36]

(நீத்து - வெள்ளம்; உதிரம் - இரத்தம்; பார் - பொருகளம்; சிலை - கல்(அம்மிக்கல்); அரிசி - ஊறலரிசி; பொரும்உயிர் - போர் செய்யும் அரக்கனது உயிர்; மீத்து ஆ - மேற்பக்கமாக; வயிரக் கை - உறுதியான கை; விண் - மேல் உலகம்; மண் - இவ்வுலகம்; தேய்த்தான் - அரைத்தான்; இறை - சிறிதளவு)

என்ற பாடலால் அழகாகக் காட்டுவான். 'தேய்த்தான் - தேயாதான்' என்ற முரண் தொடை, முத்தாய்ப்பு வைத்த மாதிரி நிகழ்ச்சிக்குப் பொலிவு ஊட்டுகின்றது. ஏழுலகங்கள் அழிகின்ற ஊழிக்காலத்திலும் அழியாத புகழுடைய அநுமன், பெருவெள்ளமாகப் பெருகி ஓடுகின்ற குருதியே நீராகவும் போர்க்களமே அம்மிக்கல்லாகவும், அக்ககுமாரனுடைய மாமிசம் முதலியவையே அரைக்க வேண்டிய அரிசியாகவும், அவனுடைய தசை நீக்கிய உடற்பகுதியே குழவிக்கல்லாகவும் கொண்டு விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் காணும்படி தனது கைகளினாலே தேய்த்து ஒழித்தான்.

35. சுந்தர. அக்க குமாரன் வதை - 34 - 37
36. சுந்தர. அக்க குமாரன் வதை - 38

போர்க்களம், அம்மிக்கல்; அக்ககுமாரன் உடல், குழவி. இவற்றை நோக்கும்போது அக்ககுமாரனின் பேருடல் நம் மனக் கண்முன் காட்சி அளித்து வியக்க வைக்கின்றது.

**(7) இந்திரசித்தன்[37] பிரவேசம் :** தம்பி கொல்லப்பெற்ற செய்தியைக் கேட்டதும் இந்திரசித்து கடுங்கோபம் கொண்டு பெருஞ்சேனையுடன் போர்க்களத்துக்குக் கிளம்புகின்றான். நடைபெற்ற நிகழ்ச்சிகளையெல்லாம் நினைந்து பார்த்துத் தன்னையே வெறுத்துக்கொள்ளுகின்றான்.

**"கானிடை அத்தைக்கு உற்ற**
**குற்றமும் கரனார் பாடும்**
**யானுடை எம்பி வீய்ந்த**
**இடுக்கணும் பிறவும் எல்லாம்**
**மானிடர் இருவ ரானும்**
**வானரம் ஒன்றி னானும்**
**ஆனிடத்து உளஎன் வீரம்**
**அழகிற்றே அம்ம என்றான்."** [38]

*(கான் - காடு; அத்தை - சூர்ப்பணகை; கரனார் பாடு - கரன் இறந்தது; யான் உடை - யான் உடைமையாகப் பாராட்டி வந்த; வீய்ந்த - இறந்த; இடுக்கண் - துன்பம்; ஆனிடத்து - உண்டாயின என்றால்; அம்ம - ஆச்சரியம்)*

என்ற பாடல் இந்திரசித்தனின் புழுக்கத்தையும் வெறுப்பையும் காட்டுகின்றது; துயரத்திற்குமேல் சினம் மிகுதலைப் பார்க்க முடிகின்றது.

---

*37. இராவணன் திக்கு விசயம் செய்தபோது இந்திரனை எதிர்த்துப் போர் செய்ய முடியாத நிலையில் அவன் மகனான மேகநாதன் மாயையால் மறைந்து பொருது, இந்திரனைக் கலங்கச் செய்து, அவனை மாயபாசத்தால் கட்டிக்கொண்டு போய் இலங்கையில் சிறை வைத்திட்டான். இதனை உணர்ந்த நான்முகன் தேவர்கள் சூழ அங்கு வந்து, இராவணனைக் கண்டு, "இந்திரனைச் சயித்ததனால் உன் மகனுக்கு 'இந்திரசித்து' என இனிப் பெயர் வழங்குக" என உபசார வார்த்தை கூறி, அம்மகனுக்கு வரமும் அளித்து, இந்திரனைச் சிறை மீட்டுச் சென்றனன் என்ற வரலாறு ஈண்டு அறியப்படும்.*

*38. சுந்தர. பாசப். - 19*

இந்திரசித்தன் பெருஞ்சேனையுடன் தேரின் மேல் வருவதை அநுமன் அஞ்சா நெஞ்சத்துடன் எதிர்நோக்கு கின்றான்.

"மூண்டுமுப் புரஞ்சுட முடுகும் ஈசனின்
ஆண்டகை வனைகழல் அநுமன் நோக்கினான்" [39]

(வனைகழல் - கட்டிய வீரக்கழல்)

தொலைவில் வரும்போதே அவனை இந்திரசித்தன் என அநுமன் ஊகித்து அறிகின்றான்; தனக்குள் 'இவனை வென்றுவிட்டால் அந்த இராவணன் தானும் அழிந்து விடுவதாக எண்ணுவன்; பிராட்டியையும் கொணர்ந்து விட்டுச் செல்வான்; அரக்கர்களும் செருக்கடங்கிக் கொடுமை ஒழிவர். இதனால் வரும் ஊதியம் (1) இந்திரனின் துன்பம் ஒழியும், (2) இலங்காபுரியும் இன்றே காவல் ஒழிந்ததாகிவிடும், (3) தானே அந்த இராவணனைக் கொன்றவனாகக் கருதப்படும் நிலை ஏற்படும்'[40] என்று எண்ணுகின்றான்.

இந்திரசித்தனின் சதுரங்க சேனையும் அநுமனால் அழிந்துபடுகின்றது[41]. அரக்கர்கள் ஏவிய ஆயுதங்கள் யாவற் றாலும் அநுமனின் திருமேனியை ஊறுபடுத்த முடியவில்லை. இந்திரசித்தன் எய்த அம்புகள் யாவும் பழுதுபட்டொழி கின்றன. "வாரும் வாரும்" என்று அழைக்கின்ற அநுமன்மேல் 'முறுவலும் வெகுளியும் வீங்க' வருகின்றான், இந்திரசித்தன்.

வந்தவன் தன் கைவிரலால் வில்லின் நாணியைத் தெறித்துப் பேரொலியை எழுப்பினான். அநுமனும் அதற்கு மேலாக அந்த வில்லின் நாணியும் அற்றுப் போகும்படி தன் வீரத்தோள்களைத் தட்டி ஒலி எழுப்பினான்.[42] இந்திரசித்து அநுமனை நோக்கி, "நீ மிகவும் சமர்த்தன். நினக்கு நிகரான சமர்த்தர்கள் இவ்வுலகில் இலர்; நீ எல்லோருடனும் மாறுபடுவதற்கு மிகவும் வல்லவன்; ஆயினும் இன்று நின் ஆயுள் எல்லைக்கு முடிவு எல்லையாகும்" என்று வீரவாதம் புரிகின்றான். அநுமன் அதற்கு இளைத்தவனா? எதிர்த்து

39. சுந்தர. பாசப். 24
40. சுந்தர. பாசப். 26, 27
41. சுந்தர. பாசப். 29, 30, 31, 32
42. சுந்தர. பாசப். 26, 27

இந்திரசித்தனை நோக்கி, "கொடியவர்களே, உங்கள் வாழ்நாளுக்கு முடிவும். அரக்கர்களாய் உலகினை நலிகின்ற உங்கள் கொள்கைக்கு முடிவும், உங்கள் கொடிய தொழிலுக்கு முடிவும், உங்கள் ஆயுதங்கட்கு முடிவும் இப்பொழுது வந்துவிட்டன; அதற்கு உரிய திறமையைக் கொண்டே இங்கு வந்துள்ள என் தோளுக்கு முடிவு சிறிதும் உண்டாகாது"என்று அநுமனும் பதிலுக்கு வீரவாதம் புரிகின்றான்.[43]

மேகநாதன் அநுமன்மீது 'சரமாரியாக' அம்புகளை எய்ய, அவன் யோக பலத்தால்,

> **"சிறிய தாய்சொன்ன திருமொழி**
> **சென்னியில் சூடி**
> **நெறியின் நின்றதன் நாயகன்**
> **புகழெனா நிமிர்ந்தான்."**

(சிறிய தாய் - கைகேயி; சென்னி - தலை; நெறி - நல் ஒழுக்கம்; நிமிர்தல் - உயர்ந்து வளர்தல்)

என்றவாறு பேருருவம் கொள்ளலானான். அதனைக் கண்ட மேகநாதன்,

> **'பாக மல்லது கண்டிலன்**
> **அநுமனைப் பார்த்தான்**
> . . . . . . . . . . . . . . . . . . . . . .
> **மேக நாதனும் மயங்கினன்**
> **ஆம்என வியந்தான்'[44]**

என்றவாறு வியப்பும் திகைப்பும் உள்ளவன் ஆனான்.

அநுமன் இந்திரசித்தனின் தேர்க்குதிரைகளையும் அழிக்க, அவன் வேறொரு தேர் ஏறி அநுமன்மீது அம்புகளைப் பொழிகின்றான். அநுமன் பாய்ந்து இந்திர சித்தனின் வில்லை முரிக்கின்றான். உடனே அவன் வேறொரு சிறந்த வில்லை எடுத்துக்கொண்டு அம்புமாரி பொழிய, அநுமன் அவற்றின் தாக்குதலால் சிறிது தளர்வு எய்துகின்றான். உடனே அயர்ச்சி தீர்ந்து ஒரு மரத்தினால் இந்திரசித்தனின் தலையில் அடிக்கின்றான். அவன்

43. சுந்தர. பாசப். 38, 39
44. சுந்தர. பாசப். 41, 42

அடிபட்டதனால் சிறிது தளர்கின்றான். அயர்ச்சி நீங்கியபின் மீண்டும் அவன் அம்புமாரி பொழிகின்றான்[45]. அந்த அம்புகள் அநுமனது மார்பிலும் கைகளிலும் அழுந்த,

> "கைத்த சிந்தையன் மாருதி
> நனிதவக் கனன்றான்;
> வித்த கன்சிலை விடுகணை
> விசையினும் கடுகி
> அத்த டம்பெருந் தேரொடும்
> எடுத்தெறிந்து ஆர்த்தான்."[46]

(கைத்த - வெறுத்த; நனிதவ - மிகமிக; கனன்றான் - வெகுண்டான்; வித்தகன் - இராமன்; விசை - வேகம்; கடுகி - வேகமாகப் பாய்ந்து; தடப்பெரும் - மிகப்பெரிய'; எடுத்து - தூக்கி; எறிந்து - வீசி)

இதனால் இந்திரசித்தன் தேருடன் வானத்தில் நெடுந்தூரம் சென்று கீழே விழுகின்றான். விழுந்தவன் எழ முயற்சி செய்ய, அநுமன் அவனது சேமத் தேர்களை யெல்லாம் அழித்தொழிக்கின்றான்.[47]

பின்னர், இந்திரசித்து நான்முகன் கணையை ஏவக் கருதி, அதனைப் பூசித்து எடுத்து, அதனை அநுமன்மீது பிரயோகிக்கின்றான். அந்தக் கணை நாகவடிவாய் அநுமனது தடந்தோள்களைப் பிணித்துவிடுகின்றது. அவனும் தளர்ந்து சாய்கின்றான்.[48] அதன் பின்னர் நடைபெற்ற வரலாற்றினை அறிவோம். அப்பொழுது அரசு வீற்றிருந்த இராவணன் நிலைமையின் சிறப்பைக் கூறும் பாடல்கள் பன்முறை படித்து அநுபவிக்கத் தக்கவை.[49]

**(8) வாலில் தீக்கொளுவப்பட்டபோது :** இராவணன் கட்டளைப்படி அநுமனின் வாலில் தீக் கொளுவப்பெற்று அவனை இலங்காபுரி முழுவதும் சுற்றிக் காட்டுகின்றனர், அரக்கர்கள் - ஓர் இலட்சம் அரக்கர்கள் - அவனைப் பற்றிய வண்ணம் (124). ஊரின் இறுதியில் வந்ததும் இதுவே தப்பி

45. சுந்தர. பாசப். 43 - 50
46. சுந்தர. பாசப். 51
47. சுந்தர. பாசப். 52, 53
48. சுந்தர. பாசப். 54 - 58
49. சுந்தர. பிணிவீட்டு - 38 - 55 (17 கவிகள்)

உய்ய தகுந்த காலம் என்று கருதித் திடீரென்று வானத்தில் எழுகின்றான், அநுமன்.

“வழுவுறு காலம் ஈதென்று
எண்ணினன்; வலிதிற் பற்றித்
தழுவினன்; இரண்டு நூறா
யிரம்புயம் தடக்கை தாம்பொடு
எழுஎன நால விண்மேல்
எழுந்தனன் விழுந்த எல்லாம்.”[50]

என்ற பாடற்பகுதியில் அதன் விளைவைக் காண்கின்றோம்.

அநுமன் திடீரென்று மேலெழுந்தபோது அவனது பாசத்தை இருபுறத்தும் இருகூறாகப் பிரிந்து பற்றியிருந்த ஓர் இலட்சம் அரக்கர்களுடைய இரண்டு இலட்சம் கைகள் தனிப்பட்டுக் கயிற்றுடனே தொங்க, அவர்கள் தோளற்ற வர்களாய்க் கீழே விழுகின்றனர். இதில் அநுமனின் அற்புதமான நுண்ணுணர்வுள்ள வீரப்பண்பைக் கண்டு மகிழ்கின்றோம். இந்நிலையில் தோள்களோடு உடம்பையும் அழுந்தக் கயிற்றுடனே வானத்தில் காணப்பெறுகின்ற அநுமன்[51] சர்ப்பங்களால் பிடித்துச் சூழப்பெற்ற பெரிய திருவடிபோல் பொலிகின்றான்.

**‘போர்வாலின் பொன்றாத செயல்’** : பகைவர்களை வளைத்தற்கும், எடுத்து வீசுவதற்கும் அடித்தற்கும் பலவாறு அநுமனது வால் உதவுவதால் அது ‘போர்வால்’ என்று வழங்கப்பெறுகின்றது. அநுமன் தீயினால் பற்றி எரியும் வாலை இலங்கையின்மீது செலுத்துகின்றான். துணை வலியாகப் பலவற்றை உடன்கொண்டு சிவபெருமான் திரிபுரத்தை எரித்தனன். அப்பொருள்கள் யாவும் நாணமடையும்படி இப்பொழுது இராமபிரானைத் துதித்து இலங்கையை எரிப்பதாகச் சங்கல்பங்கொண்டு தன் வாலைச்

50. சுந்தர. பிணிவீட்டு - 133

51. அநுமனைச் சிறிய திருவடி என்றும் கருடனைப் பெரிய திருவடி என்றும் கொள்வது வைணவ மரபு. ஆதியஞ்சோதியாயுள்ள திருமாலுக்கு வாகனமாக இருப்பவன் பெரிய திருவடி (கருடன்) அவதாரத்தில் அவனுக்கு வாகனமாக இருப்பவன் சிறிய திருவடி (அநுமன்)

செலுத்துகின்றான். வீடுதோறும் தாவிச் சென்றதால் நகரம் முழுவது தீயினால் அழிந்தொழிந்தது.[52]

இராவணனின் அரண்மனையும் எரிந்து நாசமா கின்றது. இராவணன் சினந்து குரங்கைப் பிடித்து வரும்படி கட்டளையிட, இராக்கத வீரர்கள் இலங்கை முழுதும் தேடிச் சென்று அநுமனைக் காண்கின்றனர். அவர்கள் அனைவரையும் தன் வாலினால் வளைத்துப் பம்பரம் விடுவதுபோலச் சுழற்றி வீசி அழிக்கின்றான். முன்னர் பஞ்ச பூதங்களுள் ஒன்றான நீர் (வருணன்) அணை கட்ட உதவியது; இப்போது மற்றொரு பூதமாகிய தீ (அக்கினி பகவான்) இலங்கையை அழித்தது. இராகவன் துணை இருக்க, அநுமனை இராவணனால் என்ன செய்யமுடியும்?

**(9) இராம - இராவணப்போர் நிகழ்ந்தபோது :** இந்தப் போர் நிகழ்ந்தபோது பல்வேறு நிலைகளில் அநுமன் மேற்கொண்ட பங்கினால் அவனது வீரப்பண்பையும் அஞ்சா நெஞ்சினையும் காண முடிகின்றது.

(1) முதற்போரில் ஒருநிலையில் சுக்கிரீவன் இராவண னுடன் போருடற்றும்போது சலிப்பெய்துகின்றான். அப்பொழுது அதனைக் கூட இருந்து அறிந்தவன் போல் மேலை வாயிலிலிருந்து அநுமன் வந்து இராவணனுடன் போர் புரிகின்றான். முதலில் ஒரு மலையைப் பெயர்த் தெடுத்துக் காலின் தோன்றல் இலங்கை நாதன்மீது வீசி எறிகின்றான். இராவணன் ஒரு கணையை ஏவி அதனை ஆயிரம் துண்டுகளாகுமாறு செய்துவிடுகின்றான். மாருதி மீண்டும் ஒரு மலையைப் பறித்து வீச அஃது இராவணன் தோளிலணிந்த வாகுவலயத்தைத் தாக்கி, அதனைப் பொடி யாக்கித் தானும் பொடியாகிவிடுகின்றது. 'பொற்றோள், பூட்டிய வலயத் தோடும் பூழியாய்ப் போயிற்றன்றே'[53] மீண்டும் ஒரு மலையைப் பறிக்க அநுமன் முயலும்போது இலங்கை நாதன் அவன் கையிலும் தோளிலும் பத்து அம்புகளை அழுத்துகின்றான். அவற்றை அநுமன் சலியாமல் தாங்கி நிற்கின்றான். அதனைக் கண்ட தேவர்கள் அநுமன்

52. சுந்தர. பிணிவீட்டு - 136, 137.
53. யுத்த. முதற்போர் - 135

திறத்தை வியந்து கொண்டாடும் நிலையில், அநுமன் அருகிலிருந்த ஒரு மராமரத்தைப் பறித்துக் கையால் சுழற்றி எறிய, அது சாரதியை வீழ்த்திப் பல அரக்கர்களையும் கொன்றொழிக்கின்றது. வேறொரு சாரதி அந்த இடத்தைப் பெற்ற நிலையில், இராவணன் நூறு அம்புகளை அநுமன் உடலில் பாய்ச்சி அவனைத் தளர்வுறச் செய்துவிடுகின்றான்.[54]

(2) **குத்துப் பரிமாற்றம்** : முதற்போரில் இலக்குவனும் இராவணனும் மோதுகின்றனர். அதனைத் தவிர்க்க நினைக்கின்றான், அநுமன். வீரவாதத்துடன் ஓங்கி நிற்கின்றான்; இராவணனை நோக்கிப் பேசுகின்றான் : "மலையை யொத்த தோள் வலிமையுடையவனே, என் தோள் வலிமையினால் என் ஒற்றைக் கையைத் தூக்கி யான் குத்துவேன்; நீ இறவாமல் இருப்பாயேயானால், நீ பின்பு என்னை உன்னுடைய கைத்தல வரிசைகளினால் வலிமையோடு குத்துவாய்; அதனால் நான் இறவாவிட்டாலும் உன்னோடு எதிர்த்துப் பொரேன்"[55] இராவணன் அநுமன் விடுத்த சவாலை ஏற்றுக்கொள்ளுகின்றான்.

முதலில் அநுமன் குத்துகின்றான். அநுமன் மிக ஆரவாரித்து, இராவணன் தேரிலே விரைந்து ஏறி, கண்முழுதும் தீப்பொறி சிந்த, ஆரத்தோடு பொருந்திய கவசத்துடனே உடல் பொடிபட்டுச் சிந்தும்படி அவ்விராவணனின் பெரிய மார்பில் தன் கையினால் விசையாகத் தன் முழு வலிமையையும் பயன்படுத்தி எதிர் நின்று குத்துகின்றான். விளைவு : இராவணன் கண்களினின்று நெருப்புப் பொறிகள் சிந்தின; முழு மூளைகள் தயிர் போலச் சிந்தின; அவன் மார்பில் ஒடிந்து பதிந்திருந்த திசை யானைகளின் தந்தங்கள் முதுகின் வழியாகச் சிந்தின; கவசத்தில் திகழ்ந்த இரத்தினங்கள் தெறித்துப்போய் வீழ்ந்தன. நெஞ்சில் பிராணவாயு வீசுவதனின்றும் ஒடுங்க அவன் தள்ளாடிச் சலித்திடுகின்றான். பிறகு, விரைவில் தெளிகின்றான்; பிறகு, அநுமனைப் புகழ்ந்து பேசுகின்றான்;

*54. யுத்த. முதற்போர் - 133 - 138*
*55. முதற்போர். 166*

அவன் புய வலிமையைப் பாராட்டுகின்றான். தன்னை வென்றவனாகவே கருதுகின்றான்.

அடுத்து அநுமனை நோக்கி இராவணன் கூறுவது : "நான் இப்போது ஒரு கையால் குத்துவேன். உன் உயிர் நிலைத் திருக்குமேயானால், நீ இன்றுள்ளது போல் என்றும் இருப்பாய், உனக்கு வேறொரு பகை இல்லை."

உடனே அநுமன் இராவணன் எதிரே போய், "என் குத்தினால் உயிரொழிந்துவிடாமல் பேசினாயாதலால் நீ என்னை வென்றவனாவாய். உன் நிலை செவ்வனே நன்று" என்று கூறி, "உன் கடனைப் பெற்றுக்கொள்க" என்று தன் மார்பைக் காட்டுகின்றான். உடனே இராவணன் தன்னுடைய நீண்ட பல வாய்களை மடித்துப் பற்களை நன்றாகக் கடித்துக் கொண்டும் கண்கள்தோறும் அனற்பொறிகள் உக்கிரமாக மேலெழவும் கோபித்துத் தன் கைகளால் குத்துகின்றான். விளைவு : இராவணன் தன் கைகளினால் குத்தித் தள்ளினபோது வெள்ளிப் பெருமலையான கைலாசம் போலச் சலிக்கின்றான். இதனால் உம்பர் உலகமெல்லாம் சலித்தன; தருமமும் சலித்தது; உண்மை, நற்குணம், சுருதி, நீதி, கருணை, தவம் ஆகிய அனைத்தும் சலித்தன. சிறிது நேரத்தில் அநுமன் அயர்ச்சி நீங்குகின்றான்.

**(3) இலக்குவன் உடலைத் தூக்க முயல்தல் :** இலக்குவனுக்கும் இராவணனுக்கும் கடுமையான போர் நிகழ்கின்றது. அதில் இராவணன் தான் நான்முகனிடம் பெற்ற வேற்படையை இலக்குவன்மீது எறிய, அஃது அவன் மார்பிடைச் செல்ல, அவன் அயர்ந்த நிலையில் இருக்கும் போது அவனைத் தூக்க முயல்கின்றான்.

> **"வெள்ளி யங்கிரி எடுத்தனன்**
> **வெள்கினான் என்ன**
> **எள்ளில் பொன்மலை எடுக்கலுற்**
> **றானெனன எடுத்தான்."** [56]

அவனால் எடுக்க முடியவில்லை. எங்கிருந்தோ அநுமன் திடீரென்று ஓடிவந்து அவனைத் தூக்கிச் சென்றுவிடுகின்றான்.

---

*56. யுத்த. முதற்போர் - 209*

'மகவு கொண்டுபோய் மரம்புகு
மந்தியை நிகர்த்தான்'[57]

*விட்டுணுவின் அமிசமாதலால் இயற்கையில் பாரமாயிருக்கின்ற இளைய பெருமாள் தன்னிடத்து நண்பும் பக்தியும் உடையவனாதலால் அநுமனுக்கு இலேசாகின்றான். "இராவணன் ஸ்பரிகரனாய்க் கொண்டு எடுக்கப் புக்கவிடத்தில் நெஞ்சில் சாத்ரவத்தாலே (பகைமையாலே) எடுக்கமாட்டிற்றிலன்; திருவடி தனியனாக இருக்கச் செய்தேயும் நெஞ்சிற் செவ்வையாலே முகைமாலை போலே எடுத்தேறிட்டுக் கொண்டு போனான்; இங்ஙனன்றாகில் இராவணனுக்குக் கனக்க வேண்டும் என்றும், திருவடிக்கு நொய்தாக வேணுமென்றும் அன்று; வஸ்து ஸ்வபவம் இருக்கும்படியாயிற்று இது" என்று பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்திருத்தல் காணத்தக்கது.*

**(4) போரில் இராமன், இலக்குவன் ஆகியவர்கட்கு அநுமன் வாகனமாக அமைதல் :** *(அ) முதற்போரில் இராமனை நடந்து செல்லுவதைத் தவிர்த்துத் தன்னை வாகனமாக்கிக் கொள்ளுமாறு வேண்ட அதற்கு இராமனும் ஒருப்படுகின்றான்.*

**"நூறு பத்துடை நொறில்பரித்
தேரின்மேல் உன்முன்
மாறில் போர்அரக் கன்பொர
நிலத்துநீ மலைதல்
வேறு காட்டுமோர் வெறுமையை
மெல்லியன் எனினும்
ஏறு நீஐய! என்னுடைத்
தோளின்மேல் என்றான்.**[58]

*(நூறுபத்து - ஆயிரம்; மாறில் போர் - மாறில்லாத போர்; பொர - போர் செய்ய; மலைதல் - போரிடல்; ஓர் வெறுமை - ஒப்பற்ற எளிமை; மெல்லியன் - மெலியவன்)*

---

*57. யுத்த. முதற்போர் - 213*
*58. யுத்த. முதற்போர் - 218*

"நன்று நன்றுஎனா' நாயகன்
ஏறினன் நாமக்
குன்றின் மேல்இவர் கோளரி
யேறுஎனக் கூடி
அன்று வானவர் ஆசிகள்
இயம்பினர் ஈன்ற
கன்று தாங்கிய தாய்என
மாருதி களித்தான்." [59]

*(நாயகன் - இராமன்; குன்று - மலை; கோளரி - சிங்கம்; வானவர் - தேவர்; ஆசிகள் - வாழ்த்துகள்)*

*இதனைக் கண்ட தேவர்கள் "இப்போது மலையின்மீது ஏறிய சிங்கம்போல் உள்ளது" என்று வாழ்த்துகள் கூறுகின்றனர்; ஈன்ற கன்றைத் தாங்கிய தாயைப் போல் அநுமன் மனம் மகிழ்கின்றான்.*

*இந்தக் காட்சியைக் கம்பன் நன்கு அநுபவித்துப் பேசுவான் : வாமன மாணியாகி உலகளந்தபோது அத்திருமாலின் வடிவைச் சிறப்பாக அறிந்துள்ள அநுமன் அதிசயமடைகின்றான்; திருமாலின் வடிவைக் காணியாட்சியாக (தனக்கே ஒரு பொருளாக) பழைய நாள் தொட்டுக் கொண்டுள்ள ஒருதனிக் கருடன் (அத்தன்மை நீங்கியதுபற்றி) நாணம் கொள்கின்றான்.[60] மற்றொருவனாகிய அனந்தனும் (பாரம் தாங்கமாட்டாமல்) தலை நடுக்குறுகின்றான்.*

*மேலும் இக்காட்சியை அக்கவிஞன் வருணிப்பது :*

"ஓதம் ஒத்தனன் மாருதி;
அதன்அகத்து உறையும்
நாதன் ஒத்தனன் என்னிலோ
துயில்கிலன் நம்பன்;

---

*59. யுத்த. முதற்போர் - 219*

*60. இராமபிரானது திருவடி தன்மீது பட அப்பெருமானை இராமாவதாரத்தில் தாங்கியதனால் அநுமனுக்குச் சிறிய திருவடி என்றும், தானான தன்மையில் அப்பெருமானைத் தாங்கிச் செல்வதனால் கருடபகவானுக்குப் பெரிய திருவடி என்றும் பெயர் வழங்குவது வைணவ சம்பிரதாயம்.*

வேதம் ஒத்தனன் மாருதி;
வேதத்தின் சிரத்தின்
போதம் ஒத்தனன் இராமன்வேறு
இதன் இல்லை பொருவே"[61]

*(ஓதம் - கடல்; உறையும் - வாழும்; நாதன் - திருமால்; என்னிலோ - என்போமானால்; நம்பன் - இராமன்; துயில்கிலன் - உறங்குவான் அல்லன்; வேதம் - மறை; வேதத்தின் சிரம் - உபநிடதம்; போதம் - ஞான சொரூபியாகிய பரம்பொருள்; பொருவு - உவமை)*

*பாடலைப் பன்முறை படித்து அநுபவிக்க வேண்டும்.*

*இன்னும், இன்னொரு விதமாகவும் பன்னி உரைப்பான்; இது மெய்ப்பொருளைச் சார்ந்தது.*

"தகுதியாய் நின்ற வென்றி
மாருதி தனிமை சார்ந்த
மிகுதியை வேறு நோக்கின்
எவ்வண்ணம் விளம்பும் தன்மை?
புகுதிகூர்ந்து உள்ளார் வேதம்
பொதுவுறப் புலத்து நோக்கும்
பகுதியை ஒத்தான் வீரன்;
மேலைத்தன் பதமே ஒத்தான்."[62]

*(தகுதியாய் - பொருத்தமாக; மிகுதியை - மேன்மையை; பகுதி - பிரகிருதி; புகுதி கூர்ந்து உள்ளார் - அறிவு மிகுந்துள்ளாரான இருடியர்க்கு; பகுதி - மூலப் பிரகிருதி; தன் பதம் - பரமபதம்)*

*அநுமனுக்கு மேலிருக்கும் இராமன் மூலப் பிரகிருதிக்கு மேற்பட்ட இடத்திலிருக்கும் பரமபதத்தை ஒத்திருப்பன். மூலப் பிரகிருதி அநுமனுக்கு ஒப்புமை.*[63]

---

*61. முதற்போர் - 221*

*62. முதற்போர் - 222*

***63. மூலப் பிரகிருதி இருபத்து நான்கு தத்துவமாய்த் திருமாலுக்குச் சரீரமாக இருப்பது (சரீர - சரீரி பாவனை): இதுவே எல்லா உலகங்கட்கும் காரணமாவது. இந்த மூலப் பிரகிருதிக்கு மேற்பட்டிருக்கும் தானம், பரமபதம்: இது வைகுண்ட நாதன் வீற்றிருக்கும் இடம். இருபத்தைந்தாவது தத்துவம் புருஷன் (= ஆன்மா); இருபத்தாறாவது தத்துவம் பரமபுருஷன் (= புருஷோத்தமன் - பரமான்மா). இவையே வைணவ தத்துவம் என்பது.***

போர் கடுமையாக நடைபெறும்போது அநுமன் அற்புதமாகச் சாரி திரிவான்; இராமபிரானின் அம்பைக் காட்டிலும் விரைந்து செல்வான்; மனோவேகத்தைவிட வேகமாக இயங்குபவன். ஓர் இமைப்பொழுதில் இவ்வுலகத்தில் உள்ளான் என்று கருதினால் அடுத்த நொடியில் ஆகாயத்தில் இருப்பான்; தும்பை மாலை சூடி வந்து பொருகின்ற இராவணனின் முகந்தோறும் தோன்றுவான்; வஞ்சகர்களின் கண்கள்தோறும் திரிவான்.[64]

(ஆ) கும்பகருணனுக்கும் இலக்குவனுக்கும் கடும்போர் நிகழ்கின்றது. கும்பகர்ணன் இவர்ந்து வரும் தேர் விசாலமான தேர்த்தட்டினையுடையது; காற்றினும் மனத்தினும் கடிய வேகமுடையது; கொடிய சிங்கங்கள் இடைவிடாமல் முழங்கி நிற்பது. மேரு மலையைப் போன்ற பெருவடிவினது. அதனைக் கண்ட அநுமன் இலக்குவனைத் தன் தோளில் ஏறிக் கொள்ளுமாறு வேண்டுகின்றான். 'இளையவள்ளலே ஏறுதி தோள்மிசை' என்கின்றான்.[65] இளைய பெருமாளும் அங்ஙனமே ஏறிக்கொள்ளுகின்றான்.

"ஏறி னான்இளங் கோளரி
இமையவர் ஆசி
கூறி னார்;எடுத்து ஆர்த்தது
வானரக் குழுவும்
நூறு பத்துடைப் பத்தியின்
எறிபரி பூண்ட
ஆறு தேரினும் அகன்றதுஅவ்
அநுமன்றன் தடந்தோள்" [66]

(இளங்கோளரி - இலக்குவன்; இமையவர் - தேவர்; ஆசி - வாழ்த்து; நூறுபத்து -ஆயிரம்; ஆறு - வழி)

இலக்குவன் மாருதியின் தோளில் ஏறியதும் இமையவர் ஆசி கூறுகின்றனர். வானரக் கூட்டம் ஆரவாரம் செய்கிறது. வரிசையாக விரைவுள்ள ஆயிரம் பரி பூண்டு போர்க்கள வழி செல்லும் கும்பகருணனின் தேரினும் அவ்வநுமனின் தடந்தோள் அகன்றதாகின்றது.

64. யுத்த. முதற்போர் - 232
65. யுத்த. கும்பகருணன் வதை - 230
66. யுத்த. கும்பகருணன் வதை - 231

*இதனைக் கவிஞன், அநுமன் தோளின்மீது இளைய பெருமாளின் தோற்றம், பொன்மயமான பெரிய மேருமலை வெள்ளிமயமான கைலாய மலைமீது விளங்கிற்று என்று சொல்லும்படியாக இருந்தது என்று வருணிக்கின்றான்.*[67]

*(இ) அதிகாயன் வதைக்குப் பிறகு இந்திரசித்து போர்க்களம் புகுகின்றான். ஒருநிலையில் இந்திரசித்து இலக்குவனை நெருங்குகின்றான், தன் மனம் போல் விரைந்து செல்லுகின்ற தேரில். அந்நிலையில் அநுமன் அங்குப் போதருகின்றான். அவன் இளைய பெருமாளை நோக்கி,*

**"தோளின்மே லாதி ஐய!**
**என்றடி தொழுது நின்றான்."** [68]

*உடனே,*

**"ஆளிபோன் மொய்ம்பி னானும்**
**ஏறினன்; அமரர் ஆர்த்தார்."** [69]

*இலக்குவன் அங்ஙனமே ஏறியருளத் தேவர்கள் ஆரவாரம் செய்தனர். உடனே ஒரு மேகத்தின்மீது மற்றொரு மேகம் போர் செய்ய வந்தாற்போன்ற தன்மையுடையரான இலக்குவன், இந்திரசித்து என்ற அவ்விருவரும் ஒருவர்மீது ஒருவர் அம்புமாரிகளைப் பொழிந்துகொள்ளலாயினர்.*

*ஒருநிலையில் இலக்குவனின் வாகனமாகிய அநுமன் இந்திரசித்தின் தேர்க்குதிரையைக் கொன்று தேரை உருட்டி விடுகின்றான்.*

**'வதையின் மற்றொரு**
**கூற்றன மாருதி**
**உதையி னாலவன்**
**தேரை உருட்டினான்.'** [70]

*இன்னொரு நிலையில் அவன் தன் வாலினால் அரக்கர்களைச் சுற்றிக் கட்டித் தூவுவான்; கால்களால் மிதிப்பான்; நெட்டித் தள்ளிவிடுவான்; ஆகாயத்தில் தூக்கி*

---

*67. யுத்த. கும்பகர்ணன் வதை - 232*
*68. யுத்த. நாகபாசப் - 101*
*69. யுத்த. நாகபாசப் - 101*
*70. யுத்த. நாகபாசப் - 127*

எறிவான்; எதிர்சென்று அறைவான்; வெருட்டுவான் (140) எதிரிகள் அஞ்சும்படி விழித்துப் பார்ப்பான்; அதட்டுவான்; யானைகளை வீசி எறிந்து அவற்றால் கடல்களைத் தூர்ப்பான்; தோள்களைத் தட்டி ஆரவாரம் செய்வான்; கைகளால் ஆயிரம் தேர்களைப் பிடித்து இழுப்பான் (141); குதிரைகளைப் பூப்போலத் தூவுவான்; யானைகளை நீர்போல அள்ளுவான்; காலாட்சேனைகளைத் தளிர் போலப் பிசைந்து துகைப்பான் (142); பாம்புகள் பூட்டப்பெற்ற ஆயிரம் தேர்களை விரைவாகத் தூக்கித் தரையில் அடித்து அழியச்செய்வான் (143). இவற்றால் அஞ்சா நெஞ்சமும் வீரப்பண்பும் புலனாகின்றன.[71]

(ஈ) நிகும்பலை யாகத்தை அழிக்கச் சென்ற இலக்குவன் ஒரு நிலையில் அநுமன் வேண்டுகோட்கிணங்க அவன் தோளின்மீது ஏறுகின்றான். இந்திரசித்தினால் துன்புறுத்தப் பெற்ற அநுமன்[72] அயர்வு நீங்கி வந்து, முகம் மலர்ந்து,

> **"எந்தாய் கடிது ஏறாய்எனது**
> **இருதோ ளின்மிசை' என்றான்;**
> **அந்தாகஎன்று உவந்துஐயனும்**
> **அமைவா யினன்;இ மையோர்**
> **சிந்தா குலம்களைந் தான்என**
> **நெடுஞ்சா ரிகைதி ரிந்தான்" [73]**

(அந்து[74] ஆக - அப்படியே ஆகட்டும்; உவந்து - மகிழ்ந்து; இமையோர் - தேவர்கள்; சிந்தாகுலம் - வருத்தம்)

இதனால் இலக்குவன் மிகத் திறமையாகப் போர்செய்ய வாய்ப்பு ஏற்படுகின்றது.

**(5) அநுமன் பல நிலைகளில் போர் புரிதல் :** அநுமன் தன் பக்கமுள்ளவர் தோற்கையில், தோற்கும் நிலையில் இருக்கையில் அவர்கட்குச் 'சஞ்சீவி போல்' வந்து உதவுவான்;

---

*71. யுத்த. நாகபாசப் - 140 - 143*
*72. யுத்த. நிகும்பலை யாகம் - 95, 96*
*73. யுத்த. நிகும்பலை யாகம் - 102*
*74. அந்து - அப்படியே. கன்னடத்தினின்று தமிழில் வந்து வழங்கிய திசைச்சொல்.*

வாய்ப்பு வரும்போது தானாகவும் போரிடுவான். இவற்றைக் காண்போம்.

(1) கும்பகருணனுடன் அங்கதன் போரிடுகின்றான். அங்கதன் வயிரத்தண்டு ஒன்றைக் கும்பகருணன்மீது எறிய அது கும்பகருணன்மீது பட்டவுடன் பல துண்டங்களாகச் சிதறுகின்றன. உடனே அதன் பெரிய கைகளை உயரத் தூக்கிக் கும்பகருணனைப் பற்றிக்கொண்டு, 'இவனை இறப்புறச் செய்வேன்' என்று குனிந்தபோது கும்பகருணன் சினந்து தன் கையினாற் குத்த, அங்கதன் அதனைத் தாங்க மாட்டாது, அறிவு தப்பிக் கீழே விழுகின்றான். அச்சமயம் 'மாருதி இமைப்பின் வந்தான்[75]; அங்கதன்மீது சூலத்தை எறியத் தொடங்கியபொழுது, அநுமன் குன்றமொன்றை அவன் நெற்றிமீது "சுரிக்க வீசித் தீர்த்தனை வாழ்த்தி ஆர்த்தான்" [76]; கும்பகருணன் அந்த மலையை அநுமன்மீது திருப்பி "வீசித் தோள் கொட்டி யார்த்தான்"[77]; அடுத்து மாருதி வேறொரு மலையை எடுத்து 'இம்மலையைத் தாங்கு பார்க்கலாம்' என்ற சவாலுடன் வீசுகின்றான். அதனைக் கேட்ட அரக்கன் மறுமாற்றமாக "நீ வீசும் மலையை ஏற்கையில் சிறிதளவாவது சோர்வை அடைந்தேனானால் தோற்றவனாவேன்" என்று உரைக்கின்றான். கும்பகருணன் அம்மலையை ஏற்க அது பொடிப்பொடியாய் உதிர்ந்து போகின்றது.[78] அரக்கனின் வலிமை கண்டு அநுமன் அப்பால் ஏகலானான்.

(2) பிறிதொரு சமயம் கும்பகருணனுக்கும் சுக்கிரீவனுக்கும் நடைபெற்ற போரில் கும்பகருணன் சூலமொன்றனை அவன்மீது வீச, அநுமன் அதனை எட்டிப் பிடித்து முடித்தெறிகின்றான். அது முரிந்ததனால் ஏற்பட்ட ஓசை, இராமன் மிதிலையில் சிவதனுசை முரித்தபோது ஏற்பட்ட ஓசையை ஒத்திருக்கின்றது.[79] கும்பகருணன் அநுமன் திறமையை வியந்து அவனை அறைகூவ அவன் மறுத்து,

---

*75. யுத்த. கும்பகருணன் வதை - 196*
*76. யுத்த. கும்பகருணன் வதை - 197*
*77. யுத்த. கும்பகருணன் வதை - 198*
*78. யுத்த. கும்பகருணன் வதை - 200 - 202*
*79. யுத்த. கும்பகருணன் வதை - 260, 261*

"முன்னினி எதிர்க்கிலேன்
என்று முற்றின
பின்னிகல் பழுதெனப்
பெயர்ந்து போயினான்" [80]

(3) அதிகாயனுக்கும் இலக்குவனுக்கும் போர் நடைபெறுகின்றது. மும்முறை மதயானைப் படையைக் கொண்டு எதிர்க்கின்றான், அதிகாயன். இம்மூன்று முறைகளிலும் இலக்குவன் யானைப்படைகளை அழித் தொழிக்கின்றான்.[81] இந்நிலையில் அநுமனும் திடீரென்று பங்கு கொள்ளுகின்றான். மிகவும் வலிதாகிய ஒருமரத்தைப் பிடுங்கிக் கையில் வைத்துக்கொண்டு உருமேறுபோல் தோன்றிப் புடைக்க, பல மதயானைகள் திரள்திரளாகச் சென்று உயிர் மாய்கின்றன (158). தான் மிதித்த மிதியில் பலவற்றையும், விசையால் பலவற்றையும், வலிமையால் பலவற்றையும், இடறும் நடையினால் பலவற்றையும், காலினால் பலவற்றையும், வாலினால் பலவற்றையும், வாலின் நுனியால் பலவற்றையும், நுதலால் பலவற்றையும், கொடியால் பலவற்றையும், பழகிய குதிப்பினால் பலவற்றையும், குமைத்தலினால் பலவற்றையும் கொன்று குவிக்கின்றான்(159). சில யானைகளைப் பிடித்து இழுத்தும், சிலவற்றை இருகூறாகப் பிளந்தும், சிலவற்றை நகங்களால் கீறியும், சிலவற்றை மூங்கில்போல் முரித்தும், சிலவற்றைத் தோலுரித்தும், சிலவற்றைப் பல துண்டங்களாகப் பிளந்தும், சிலவற்றைப் பற்களால் கடித்தும், சிலவற்றைக் கையால் பிடித்தும், கூட்டமாக நின்ற சில யானைகளின் நெடிய கோடுகளை முரித்தும் கொன்றொழிக்கின்றான்(160). சில யானைகளைக் கடலில் எறிவான்; நெடிய மரத்தைக்கொண்டு சாரி திரிந்து அலைத்து உருட்டுவான்; நெடிய பூமியில் தள்ளி அரைப்பான்; பிடித்துப் பூமியில் அடிப்பான்; குடலைப் பறித்துவிடுவான்; பறித்த குடல்களை வானத்தில் வீசி எறிவான்; மிதித்துக் கலக்குவான்; முகத்தில் உதைப்பான் (161).

---

*80. யுத்த. கும்பகருணன் வதை - 263*
*81. யுத்த. அதிகாயன்வதை - 150 - 156*

பின்னும் அவன் தன் வாலினால் வெகுதூரம் மடங்க நெடிய மலைப்பாம்புபோல வளைப்பான்; வளைத்து அவ் யானைகளின்மீதுள்ள பாகனுடனே அவ்யானைகளை நெருங்கிய பெரிய மலைமீது செல்லும்படி மோதி உயிர் விலகச்செய்வான்; மற்றும் சில யானைகளைச் சிவனே என்னும்படியாக அகன்ற வாயிலிட்டு அதுக்குவான்; ஆயிரம் யானைகளை இமைப்பொழுதுக்குள்ளே உயிரொழிப்பான் (162). இங்ஙனமாக அநுமன் யானைகளை யொழித்த செய்திகளால் அவனது வீரப்பண்பும் அஞ்சா நெஞ்சுறுதியும் தெளிவாகின்றன.[82]

(4) இந்நிலையில் தேவாந்தகன்[83] என்ற அரக்க வீரன் தன்னந்தனியனாகப் புகுந்து, கோடிக்கணைகளை அநுமன் மீது செலுத்தி ஆரவாரம் செய்கின்றான் (166). அப்போது அநுமனும் ஒரு மரத்தை உயர எடுத்து நின்று ஆரவாரித்தவனாய், 'இப்போது இவன் உயிர் பறிபோகும்' என்று சொல்லி அவன்மீது எறிகின்றான். தேவாந்தகன் உடனே நெருப்பு உமிழும் கணையொன்றனால் அதனைப் பல துண்டங்களாகச் சிதைக்கின்றான் (167). அப்போது அநுமன் ஒரு மலையை வாங்க, அதனை எறிவதற்கு முன்னரே தேவாந்தகன் ஓர் அம்பெய்து அதனைப் பொடியாகும்படி சிதைக்கின்றான். உடனே மாருதி சினந்து, பருந்து புகுந்தாற்போல் தேவாந்தகன்மீது பாய்ந்து அவனுடைய நெடிய வில்லைப் பறித்திடுகின்றான் (168).

பறித்த வில்லை அநுமன் வானவர் மகிழப் பல துண்டுகளாகும்படி முரித்திடுகின்றான். அநுமனது வலிமையைக் கண்ட தேவாந்தகன் சினம் மிகுந்தவனாய், தோமரம் என்னும் படையை அநுமனது இடத்தோளின்மீது நெருக்குமாறு எறிகின்றான்; அதனைக் கண்ட தேவர்களும் திகைக்கின்றனர் (169). அதனைக் கண்ட அநுமன் கண்களில் நெருப்புப் பொறி பறக்க மிகச் சினந்தவனாய் அத்தோ மரத்தைப் பறித்து, இடியேறு போல ஆரவாரித்துப் பலமாகப்

82. பாரதத்தில் யானைப்படைகளைக் கலக்கும் இவன் இளைய சகோதரனான வீமனை நினைக்கின்றோம்.

83. இவன் அரக்க சேனாபதி.

புடைக்க, அதனால் தேவாந்தகனுடைய நெடுந்தேர் அழிந்து சாரதியும் மாள்கின்றான்; அதனால் வானவர், முகம் மலர்ச்சி பெறுகின்றனர் (170). தேவாந்தகன் ஒரு சூலப்படையை ஏந்துவதற்கு முயன்றபோது அவனைக் கண் இமைப்பதற்கு முன் தொடர்ந்து பொருகின்றான் மாருதி; தேவாந்தகனும் எதிர்த்துப் பொருகின்றான்; மாருதி தன் கையினால் தேவாந்தகனுடைய கதுப்பின் மூலப்பாகத்தில் புடைத்துச் சிரத்தை மடித்து உயிரைப் போக்குகின்றான்.

**(5) அதிகாயன் தலையீடு** : தேவாந்தகன் மரித்ததை நேரில் கண்ணால் கண்ட அதிகாயன் அநுமனுடன் நேரே பொர வருகின்றான்; அதனை அநுமனும் காண்கின்றான்.[84] வந்தவன், "ஏ குரங்கே, முன்பு என் தம்பி அட்சயகுமாரனை நிலத்தில் தேய்த்தாய்; ஒப்பற்ற வலிமையால் கடலைத் தாவிச் சென்று உயிர் பிழைத்தாய்; இப்போது அரக்கர் கடலில் புகுந்து வலிமை பொருந்திய தேவாந்தகனை மடித்தாய்; அதனைக் கண்டு உன் எதிரில் வந்துள்ளேன். இன்று உனக்கு முடிவு நெருங்கிவிட்டது (174). இன்று உன்னைக் கொன்றால் அல்லது உன்னை இனி வரும் நெடுநாளில் ஒருநாளிலும் உன்னை எதிர்க்கமாட்டேன்; நீ செய்த தீங்குகள் பல; ஆதலால், என்னுடைய கணைமாரியால் இலக்குவனையும் நின்னையும் கொன்றல்லது மீளேன். இதனை மனத்தில் உறுதியாகக் கொள்" என்று வீரவாதம் செய்கின்றான்.[85]

இதனைச் செவிமடுத்த மாருதி,

**"பிழையாதுஇது பிழையாதுஇது எனப்**
**பெருங்கைத்தலம் பிணையா**
**மழையாம்எனச் சிரித்தான்வட**
**மலையாம்எனும் நிலையான்"**

என்று கூறி,

84. யுத்த. அதிகாயன் வதை - 153
85. யுத்த. அதிகாயன் வதை - 174 - 175

**"முழைவாளரி யனையானையும்**
**எனையும்மிக முனிவாய்**
**அழையாய்திரி சிரத்தோனையும்**
**நிலத்தோடும் இட்டுஅரைப்பான்."[86]**

(*கைத்தலம் பிணையா - கைதட்டி; மழையாம் என - மேகம் போல; வடமலை - மேரு; முழைவாளரி யனையான் - இலக்குவன்; முனிவாய் - சினப்பாய்*)

*இதனைக் கேட்ட அநுமன், திரிசிரனையும் அழைத்து வந்தால் இருவரையும் கொல்லுவதற்கு வாய்ப்பு உண்டாகும் எனக் கூறுகின்றான்.*

*இதனைச் செவிமடுத்த திரிசிரன் வந்து சேர்கின்றான்.*

**"ஆமாம்எனத் தலைமூன்றுடை**
**யவன்ஆர்த்துவந்து அடர்த்தான்"[87]**

*அநுமனும் "எதிரே செருக் கொடுத்தான்"[88] அந்தத் திரிசிரனுடைய தேர்மேல் குதித்து, அந்தத் திரிசிரசை ஒப்பற்ற வல்லமையுள்ள தன் கையாற் பிடித்துப் பூமியின்மீது தள்ளி அரைத்து, அவ்வரக்கனுக்குப் பழிப்பு மிகும்படி கொன் றொழிக்கின்றான். அதன்பிறகு, மேற்றிசை வாயிலைச் சென்றடைகின்றான், மாருதி.[89]*

**(6) அநுமனும் இந்திரசித்தும் மோதுதல் :** *சுக்கிரீவனுக்கும் இந்திரசித்துவுக்கும் நடைபெற்ற போரில் சுக்கிரீவன் எறிந்த மராமரத்தை இந்திரசித்து துணித்துவிடுகின்றான்.[90] இந்நிலையில் அநுமன் மிகக் கோபங்கொண்டு தன் உயர்ந்த தோளைத் தட்டி, இடிபோலப் பெருமுழக்கம் செய்து, 'இனி இந்திரசித்து அழிந்தொழிவான்' என்று கண்டோர் சொல்லும்படி பெரியதொரு மலையை எடுத்து இந்திர சித்தின்மீது வீசி எறிகின்றான். அப்பொழுது அவ்வரக்கன் பொழிந்த சரமாரியால் அம்மலை மிக நுண்ணிய*

---

*86. யுத்த. அதிகாயன் வதை - 176*
*87. யுத்த. அதிகாயன் வதை - 177*
*88. யுத்த. அதிகாயன் வதை - 177*
*89. யுத்த. அதிகாயன் வதை - 178*
*90. யுத்த - நாகபாசப் - 71*

துகள்களாகச் சிதறியொழிகின்றது. "உக்கது அக்கிரி சொரிந்த வாளிகளின் ஊழிலாத சிறுபூழியாய்." [91]

பிறிதொரு நிலையில் இந்திரசித்தன் விடுத்த சரமாரிகளைத் தன் உடலில் தாங்கியவண்ணம் மலைபோல் நிற்கும் மாருதி, தனது பற்களைக் கடித்துக்கொண்டு அங்குள்ள ஒரு வலிய மலையைப் பெயர்த்தெடுத்துக் கொண்டு நின்ற நிலையில்,[92]

"உலகிலுள்ள யானைகள் அனைத்தும் ஒருங்கே திரண்டாலும் குதித்துப் பாயும் தன்மையுள்ள கால்களையும் கொதிக்கின்ற கொடிய சினத்தையுமுடைய ஒரு சிங்கத்தின் எதிரில் நின்று வெல்லமாட்டுமா? இராமபிரானது திருத் தம்பியும் எம் தலைவனுமாகிய இளையபெருமாள் வருமளவும் தாமசித்திருக்கப் பொறாமல் என்னை வருத்துவா யானால், உன் அம்பு நான் எறியும் மலையை அழிக்க வருவதற்கு முன்னர் இம்மலை உன் உயிரைப் போக்கிவிடும்; வில்லாண்மையுள்ள நீ உன் ஆற்றலால் இம்மலை உன் உயிரை அழிக்கவொட்டாமல் பாதுகாத்துக்கொள்வாயாக" [93] என்று கூறுகின்றான்.

இந்த வீரவாதத்துடன் ஒரு மலையை எறிய, அஃது இந்திரசித்தனின் வச்சிரமயமானதொரு மலைமீது பட்டதொரு மலைபோல விரைவில் பிளந்து, இடிபட்டுத் தூளாய்த் திக்குகளில் சிதறிப்போய்விடுகின்றது[94] மலை பொடியாக உதிர்ந்ததும் கடுஞ்சினங்கொண்ட இந்திரசித்து அநுமன்மீது ஆயிரக்கணக்கான அம்புகளைச் செலுத்து கின்றான். இந்நிலையில் அநுமனுக்குத் துணையாக நீலன் என்னும் வானரவீரன் வருகின்றான்.[95]

**(7) வச்சிர தம்ஷ்ட்ரன் :** இடபன் என்ற வானர வீரனுக்கும் இவனுக்கும் மோதல் நடைபெறுகின்றது. இடபன் அவனுடைய தேர்ப்பாகனை ஒரு மலையினால்

*91. யுத்த - நாகபாசப். - 72*
*92. யுத்த - நாகபாசப் - 78*
*93. யுத்த - நாகபாசப் - 79 (வீர வாதம்)*
*94. யுத்த - நாகபாசப் - 80*
*95. யுத்த - நாகப்பாசப் - 81, 82.*

கொன்றுவிடுகின்றான். உடனே அந்த அரக்கன் வில்லை எறிந்துவிட்டுத் தேரினின்றும் இழிந்து, ஒரு தண்டாயுதத்தால் இடபனைத் தாக்கி அவனை மரண வேதனையடையும்படி செய்துவிடுகின்றான். இந்நிலையில் ஒரு சஞ்சீவி போல் அவண் தோன்றுகின்றான், அநுமன். அரக்கன் அநுமனைத் தண்டாயுதத்தால் மார்பில் அடிக்கின்றான். அநுமன் அவனை இடக்கையினால் பற்றிக்கொண்டு, அவனது தண்டாயுதத்தைப் பறித்தெறிந்துவிட்டு, மற்றொரு கையால் பலமாகக் குத்தி அவனை முடித்துவிடுகின்றான்.[96]

(9) இந்திரசித்து நான்முகன் கணையை ஏவி, இலக்குவனையும் வானரர்களையும் உயிரொடுங்கச் செய்வதற்குமுன் அநுமன் தண்டாயுதம் கொண்டு போர் செய்கின்றான். தண்டாயுதத்தை எடுத்துக்கொண்டு எங்கும் திரியும்போது மேருமலையை யொக்கின்றான்; திக்கஜத்தை நிகர்க்கின்றான்; தன்னை வளைத்துக்கொண்டு வரும் இராக்கத வீரர்களையெல்லாம் கொன்றொழிக்கின்றான்.[97]

(10) இந்நிலையில் அகம்பன்[98] என்ற இராக்கத வீரன் எதிர்ப்படுகின்றான்; இந்திரன் முதல் எவராலும் இக்குரங்கை வெல்ல முடியாது என்று கருதுகின்றான்; பெருஞ்சேனை யுடன் வருகின்றான். அவனுடன் வந்த அரக்கர்கள் விடுத்த எல்லா வித ஆயுதங்களையும் தண்டாயுதத்துடன் சுற்றித் திரிந்த அநுமன் அழித்தொழிக்கிறான். அகம்பன் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே மேரு மலையை யொத்த அநுமன் பத்துக்கோடி யானைகளையும், அந்த எண்ணுடைய குதிரைகளையும் தேர்களையும் அழித்தொழிக்கின்றான்.[99]

அகம்பன் அம்பு தொடுத்து அநுமன்மீது செல்ல, அநுமனும் தண்டாயுதத்தைச் சுழற்றிக்கொண்டு எதிர்த்துச் செல்லுகின்றான். அகம்பன் அம்புமாரிகளை அநுமன்மீது

---

96. யுத்த. படைத்தலைவர் வதை - 89 - 92.

97. யுத்த. பிரம்மாத்திரப். - 113 - 120.

98. யுத்த. பிரம்மாத்திரப். - 122. இராவணனின் படைத் தலைவர்களுள் ஒருவன்.

99. யுத்த. பிரம்மாதிரப். - 126 - 128

சொரிய, அவை அக்குரங்கு வீரனின் மார்பிலும் தோள் களிலும் பாய்ந்து நிற்கின்றன. அநுமன் வாய் வழியாகக் குருதியும் பொங்குகின்றது. இந்நிலையிலேயே, அநுமன் அரக்கன் தேரில் பூண்டிருந்த கோவேறு கழுதைகளைக் கொன்றொழிக்கின்றான்; தேரின் அச்சுகளை முரித்துச் சாரதியையும் மாளச் செய்கின்றான். அகம்பன் அநுமனை வில்லினால் வெல்வது அருமை எனக் கருதித் தெய்வதச்சன் வழங்கிய தண்டாயுதத்தை எடுத்துக்கொண்டு நேருக்கு நேரான போருக்குத் தயாராகின்றான். இருவரும் மோதுகின்றனர். ஒருநிலையில் அகம்பனுடைய தண்டாயுதம் அழிய, அநுமனும் தண்டாயுதத்தை எறிந்துவிட்டு மற்போர் புரிகின்றான். இதில் அகம்பன் உயிரிழக்கின்றான்.[100]

இதுகாறும் கூறியவற்றால் அநுமனது போர்த்திறனும் அஞ்சா நெஞ்சமும் தெற்றெனப் புலனாவதைக் கண்டு தெளியலாம்.

---

100. யுத்த. பிரம்மாத்திரப். - 134 - 139

## 6. இராம தூதன்

'அநுமன்' என்ற பெயரைச் சொன்னாலே கற்றவர் கல்லாதவர் மனத்தில் 'இராம தூதன்' என்ற கருத்து எழும். ஆனால், கம்பன் படைத்த இராமகாதையில் எந்த ஓர் இடத்திலும் கம்பன் வாக்காகவோ, இராமன் வாக்காகவோ ஒரு செய்தியைச் சொல்லி, "இதனை இன்ன இடத்திற்குச் சென்று, இன்னாரிடம் சொல்லி வா" என்பதாக இடம் பெறவில்லை. பிராட்டியைத் தேடி வருவதற்காகச் சுக்கிரீவனால் தென்றிசையில் அனுப்பப்பெற்றவர்களுள்[1] அநுமன் ஒருவன் என்றும், அவர்களுள் அறிவிற்சிறந்த அநுமனை இராமன் தனியாக அழைத்து, அவனிடம் பிராட்டியின் அவயவங்களை வருணித்தும்[2], பிராட்டியிடம் சொல்லுமாறு சில அடையாளங்களைக் கூறியும்,[3] கணையாழியைத் தந்து அனுப்பியதுமான குறிப்புகள்தாம் காவியத்தில் உள்ளன.

இது தவிர, இந்திரசித்து நாகபாசத்தால் அநுமனைப் பிணித்துத் தந்தையிடம் சென்று 'அரிஉருஆன ஆண்டகை, சிவன் எனச் செங்கணான் என்ன சேவகன்' எனக் கூறி ஒப்படைக்கின்றான். அப்போது இராவணன் அநுமனை யார் என வினவும்போது அவன் மறுமொழியில் அவன் வாக்காக,

---

1. கிட்கிந்தை - நாடவிட்ட. 5 - 33

2. கிட்கிந்தை - நாடவிட்ட. 33 - 65

3. கிட்கிந்தை - 67 - 73. அநுமன் சீதைக்குக் கூறிய அடையாளங்களாகப் பெரியாழ்வார் திருமொழி (3.10)யில் ஒரு பதிகம் உள்ளது. அதுவே கம்பனுக்குத் தன் காவியத்தில் அமைத்துக் கொள்ளக் கைகொடுத்து உதவி இருக்கக்கூடும் என்று ஆய்வாளர்கள் சுட்டியுரைப்பர்.

"அல்லியங் கமலமே
அனைய செங்கண்ஓர்
வில்லிதன் தூதன்யான்"[4]

*என்று தன்னை 'இராமதூதன்' என்றும்,*

*பின்னர்,*

"அன்னவற்கு அடிமை செய்வேன்
நாமமும் அநுமன் என்பேன்;
நன்னுதல் தன்னைத் தேடி
நாற்பெரும் திசையில் போந்த
மன்னரில் தென்பால் வந்த
தானைக்கு மன்னன் வாலி
தன்மகன் அவன்தன் தூதன்
வந்தனென்"[5]

*என்றும் கூறுவதில் 'தூதனாக' அறிமுகம் செய்து கொள்வதாலும், ஒருநிலையில் இராவணன் அநுமனைக் கொல்லச் சொல்ல,[6] அவ்வமயம் அருகிலிருந்த வீடணன் 'தூதனைக் கொல்லலாகாது'[7] என்று கூறுவதாக வரும்,*

"இந்திரன் கருமம் ஆற்றும்
இறைவன்நீ இயம்பு தூது
வந்தனென் என்ற பின்னும்
கோறியோ மறைகள் வல்லோய்"[8]

*என்னும் பாடற்பகுதியிலும் 'அநுமன் தூதன்' என்ற நிலைமையை அடைகின்றான். நாமும் இவற்றை ஏற்று, அநுமனைத் தூதன் என்று ஒப்பி, அவன் தூதனாக ஆற்றிய கடமைகளை ஆராய்கின்றோம்.*

*(1) வள்ளுவர் பெருமான் ஒரு தூதனுக்கு, வேண்டிய தகுதிகளாக உள்ளவற்றை*

"அறிவுரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு"[9]

*4. சுந்தர. பிணிவீட்டு - 74*
*5. சுந்தர. பிணிவீட்டு - 82*
*6. சுந்தர. பிணிவீட்டு - 110*
*7. சுந்தர பிணிவீட்டு - 110*
*8. சுந்தர. பிணிவீட்டு - 112*
*9. குறள் - 684 (தூது)*

என்று காட்டுவார். இதுகாறும் நாம் அநுமனைப்பற்றி அறிந்தவற்றால் அவனுக்கு இயற்கை அறிவு நன்றாக அமைந்துள்ளது என்பதை அறிவோம். அவனது ஆளுமை (Personality) மிக நன்றாகவே - எடுப்பாகவே - அமைந்துள்ளது என்பதையும் அறிவோம். அன்றியும்,

"காதல்நான் முகனாலும் கணிப்பரிய
கலையனைத்தும் கதிரோன் முன்சென்று
ஓதினான் ஓதநீர் கடந்துபகை
கடிந்துஉலகை. உய்யச் செய்தான்" [10]

என்பதனால் அவன் சூரியனிடமிருந்து கல்வி கற்றது பெறப்படுவதால் அவன் சிறந்த கல்வி அறிஞன் என்பதும் தெளிவாகின்றது. இவை மூன்றும் அவனிடம் பொருந்தி இருத்தலால் அவன் சிறந்த தூதனாகின்றான்.

(2) சிறந்த தூதனிடம் அஞ்சாமையும்[11] துணிவுடைமையும்,[12] தனக்கு வரும் ஏதத்திற்கு அஞ்சாமையும்[13] இன்றியமையாதனவாக அமைந்திருக்கவேண்டும் என்பது பொய்யாமொழி. "தூதனாக வந்து இந்நகரத்தினுள் புகுந்தபின் நீ அரக்கர்களைக் கொன்றது என்ன காரணத்தால்?" [14] என்று வினவ, அதற்கு அநுமன் சிறிதும் அஞ்சாது,

"காட்டுவார் இன்மை யால்கடி காவி
வாட்டி னேன்என்னைக் கொல்லவந் தார்களை
வீட்டி னேன்பின்னை மென்மையி னால்உன்றன்
மாட்டு வந்தது காணும் மதியினால்" [15]

என்று மறுமாற்றம் உரைக்கின்றான்.

(3) சிறந்த தூதனிடம் இருக்க வேண்டியவற்றை

"அன்புஅறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு
இன்றி யமையாத மூன்று" [16]

---

*10. யுத்த - வீடணன் அடை. - 105*
*11. குறள் - 686 (6)*
*12. குறள் - 688 (8)*
*13. குறள் - 689 (9)*
*14. யுத்த. பிணிவீட்டு - 108*
*15. யுத்த பிணிவீட்டு - 109*
*16. குறள் - 682 (2)*

என்ற குறளால் வற்புறுத்துவார், வள்ளுவப் பெருந்தகை. இராவணன் விடுத்த வினாக்களுக்கு அநுமன் விடையிறுத்த பாங்கினால் இவற்றை அறியலாம். இராவணன் விடுத்த வினாக்கள் : என்இவண் வரவுநீ யாரை?[17] என்று வினவியபின்,

**"நேமியோ? குலிசியோ? நெடுங்க ணிச்சியோ?**
**தாமரைக் கிழவனோ? தறுகண் பஃறலைப்**
**பூமிதாங்கு ஒருவனோ? பொருது முற்றுற**
**நாமமும் உருவமும் கரந்து நண்ணினாய்"** [18]

*(நேமி - சக்கரப்படை (திருமாலோ?) குலிசி - வச்சிரப்படை (இந்திரனோ?) கணிச்சி - சூலாயுதம் (சிவபிரானோ?); தாமரைக்கிழவன் - நான்முகன்; பூமிதாங்கு ஒருவன் - ஆதிசேடன்; பொருது முற்றுற - போர் செய்து அழியுமாறு)*

**"நின்றுஇசைத்து உயிர்கவர் நீலக் காலனோ?**
**குன்றுஇசைத்து அயில்உற எறிந்த கொற்றனோ?**
**தென்திசைக் கிழவனோ? திசைநின்ற ஆட்சியர்**
**என்றுஇசைக் கின்றவர் யாருள் யாவன்நீ?"** [19]

*(காலன் - யமன்; குன்று - மலை; அயில் - வேல்; கொற்றவன் - முருகன்; தென்திசைக்கிழவன் - அகத்திய முனிவன்; திசைநின்று ஆட்சியர் - திக்குப் பாலகர்கள்)*

**"அந்தணர் வேள்வியின் ஆக்கி ஆணையின்**
**வந்துற விடுத்ததோர் வயவெம் பூதமோ?**
**முந்தொரு மலருளோன் இலங்கை முற்றுறச்**
**சிந்தெனத் திருத்திய தெறுகண் தெய்வமோ?"** [20]

*(அந்தணர் - முனிவர்கள்; ஆணை - கட்டளை; வந்து உற - வந்து சேரும்படி; 'சிந்து' என - அழித்துவிடு' என்று)*

**"ஆரைநீ?" என்னைஇங்கு எய்து காரணம்?**
**ஆருனை விடுத்தவர்? அறிய ஆணையால்**
**சோர்விலை சொல்லுதி"** [21]

---

*17. யுத்த. பிணிவீட்டு - 69*
*18. யுத்த. பிணிவீட்டு - 70*
*19. யுத்த. பிணிவீட்டு - 71*
*20. யுத்த. பிணிவீட்டு - 72*
*21. யுத்த. பிணிவீட்டு - 73*

*என்று சரமாரியாக வினாக்களைத் தொடுக்கின்றான்.*

*இவற்றிற்குச் சொல்வன்மை மிக்க அநுமன் கூறும் மறுமொழியைக் காண்போம் :*

**"சொல்லிய அனைவரும் அல்லன்; சொன்னஅப்**
**புல்லிய வலியினோர் ஏவல் பூண்டிலேன்;**
**அல்லிஅம் கமலமே அனைய செங்கண்ஓர்**
**வில்லிதன் தூதன்யான்"......[22]**

*என்று இரத்தினச் சுருக்கமாக ஒரு போடு போடுகின்றான், 'சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான்' ஆகிய அஞ்சனைச் சிங்கம் ![23]*

*சுருங்கச் சொன்னதை விரித்துப் பேசுகின்றான் - 'கோதில் சிந்தை அநுமன்.'*

**"அனையவன் யார்?என அறிதி ஆதியேல்**
**முனைவரும் அமரரும் மூவர் தேவரும்**
**எனையவர் எனையவர் யாவர் யாவையும்**
**நினைவரும் இருவினை முடிக்க நின்றுளோன்." [24]**

*(அறிதி ஆதியேல் - அறிய வேண்டுவையானால்; முனைவர் - முனிவர்; மூவர் - திரிமூர்த்திகள்; நின்றுளோன் - அவதரித்து நிலை பெற்றுள்ளவன்)*

*என்று கூறிய சொற்களால் கூறிய மாருதி கம்பீரமாகத் தொடங்குகின்றான் - 'வெல்லும் சொல் இன்மை அறிந்து' [25]*

*இவன் யார் தெரியுமா?*

**"ஈட்டிய வலியும் மேனாள்**
**இயற்றிய தவமும் யாணர்க்**
**கூட்டிய படையும் தேவர்**
**கொடுத்தநல் வரமும் கொட்பும்**
**தீட்டிய பிறவும் எய்தித்**
**திருத்திய வாழ்வும் எல்லாம்**
**நீட்டிய பகழி ஒன்றால்**
**முதலொடு நீக்க நின்றான்" [26]**

***22. சுந்தர. பிணிவீட்டு - 74***
***23. குறள் - 647 (சொல்வன்மை)***
***24. பிணிவீட்டு - கிட்கிந்தை - 75***
***25. குறள் - 645 (சொல்வன்மை)***
***26. சுந்தர. பிணிவீட்டுப் - 76***

*(வலி - தேகபலம்; யாணர் - புதிதாக; கொட்பு - மற்றுமுள்ள சிறப்புகள்; தீட்டிய - எழுதிய; வாழ்வு - அரச வாழ்வு; பகழி - அம்பு; முதலொடு - அடியோடு)*

*“இவன் தேவர் முதலியோர்களுள் ஒருவனும் அல்லன். ‘பூவலயத்தை ஆண்ட புரவலன் புதல்வன்தான்.’* [27]

**“வேதமும் அறனும் சொல்லும்**
**மெய்யற மூர்த்தி வில்லோன்”** [28]

*“இந்த முதற்கடவுள் தசரதன் மதலையாகத் தோன்றுவதற்குக் காரணம் என்ன? சொல்லுவேன் :*

**“போர்அணங்கு இடங்கர் கவ்வப்**
**பொதுநின்று முதலே என்ற**
**வாரணம் காக்க வந்தான்**
**அமரரைக் காக்க வந்தான்”** [29]

*(அணங்கு - வருத்தம் செய்யும்; இடங்கர் - முதலை; வாரணம் - யானை; அமரர் - தேவர்)*

*“ஆதிமூலமே! என்று பொதுப்படக் கூவியழைத்த கசேந்திரனைக் காக்கவந்த நாராயணனே தேவர்களைக் காக்கும்பொருட்டு இராமனாக அவதாரம் செய்துள்ளான். மேலும் கூறுவேன் :*

**“மூலமும் நடுவும் ஈறும்**
**இல்லதோர் மும்மைத்து ஆய**
**காலமும் கணக்கும் நீத்த**
**காரணன் கைவில் ஏந்திச்**
**சூலமும் திகிரி சங்கும்**
**கரகமும் துறந்து தொல்லை**
**ஆலமும் மலரும் வெள்ளிப்**
**பொருப்பும்விட்டு அயோத்தி வந்தான்”** [30]

*(மூலம் - முதல்; ஈறு - முடிவு; மும்மைத்து - இறப்பு, நிகழ்வு, எதிர்வு; காலம் - காலத்தின் எல்லை; கணக்கு - இடம், குணம் முதலியவற்றின் எல்லை; நீத்த*

---

*27. சுந்தர. பிணிவீட்டு - 77*
*28. சுந்தர. பிணிவீட்டு - 78*
*29. சுந்தர. பிணிவீட்டு - 79*
*30. சுந்தர. பிணிவீட்டு - 80*

*- கடந்து நின்ற; திகிரி - திருவாழி; கரகம் - கமண்டலம்; துறந்து - நீக்கி)*

*பாட்டைப் பல முறை படித்து, அதன் கம்பீரமான நடையையும் பொருளையும் அறிந்து மகிழ வேண்டும்; அநுமனின் சொல்திறனையும் பாராட்ட வேண்டும்.*

**'இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு**
**உறுதி பயப்பதாம் தூது'**[31]

*என்ற வாக்கைச் சிந்தித்து அநுமனின் அஞ்சா நெஞ்சத்தையும், தனக்கு அழிவைத் தருவதாக இருப்பதைப் பொருட்படுத்தாத துணிவையும் கண்டு வியப்பெய்த வேண்டும்.*

*(4) வாலி, அங்கதன் ஆகியவர்களைப் பற்றிய பேச்சு நடுவில் வந்ததால், இராவணன் வாலியின் நலத்தை விசாரிக்கும் போக்கில்,*

**"வாலிசேய் விடுத்த தூத !**
**வன்திறல் ஆய வாலி**
**வலியன்கொல்? அரசின் வாழ்க்கை**
**நன்றுகொல்? என்ன லோடும்"**[32]

*என்று வினவ, அநுமன் கூறலானான். எங்ஙனம்?*

**"அஞ்சலை அரக்க! பார்விட்டு**
**அந்தரம் அடைந்தான் அன்றே**
**வெஞ்சின வாலி மீளான்**
**வாலும்போய் விளிந்த தன்றே**
**அஞ்சன மேனி யான்தன்**
**அடுகணை ஒன்றால் மாழ்கித்**
**துஞ்சினன்; எங்கள் வேந்தன்**
**சூரியன் தோன்றல் என்றான்"**[33]

*(அந்தரம் - வானுலகம்; மீளான் - திரும்ப மாட்டான்; விளிந்தது - அழிந்து போயிற்று; அஞ்சனம் - மை; அடு - பகையை அழிக்கவல்ல; கணை - அம்பு; மாழ்கி - வருந்தி; சூரியன் தோன்றல் - சுக்கிரீவன்)*

***31. குறள் - 690 (தூது)***

***32. சுந்தர. பிணிவீட்டு - 83***

***33. சுந்தர. பிணிவீட்டு - 84. இங்ஙனம் ஒரு தூதன் பேசுவதற்கு, அதுவும் நீதியற்ற ஓர் அசுரக் கோமான் முன் பேசுவதற்கு எவ்வளவு துணிவு வேண்டும்! அநுமனது துணிவைக் கண்டு வியக்கின்றோம்.***

உடனே இராவணன், "என்ன காரணத்தால் இராமன் வாலியைக் கொன்றான்? இப்போது இராமன் எங்கு உள்ளான்? அந்த இராமனின் மனைவியை அங்கதன் தேடக் காரணம் என்ன?" என்று வினாக்களை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி விடுக்க, அதற்குச் சமீகரணன் தனயன் சொல்லும் மறுமாற்றம் இது :

"தேவியை நாடி வந்த
செங்கணாற்கு எங்கள் கோமான்
ஆவிஒன்று ஆக நட்டான்;
'அருந்துயர் துடைத்தி' என்ன,
ஓவியர்க்கு எழுத வொண்ணா
உருவத்தன் உருமை யோடும்
கோஇயல் செல்வம் முன்னே
கொடுத்துவா லியையும் கொன்றான்" [34]

(நாடி - தேடி; கோமான் - அரசன்; நட்டான் - நட்புக்கொண்டான்; என்ன - என்று வேண்ட; ஓவியர் - சித்திரம் வரைவோர்; உருமை - சுக்கிரீவன் மனைவி; கோஇயல் செல்வம் - அரசியற்செல்வம்.)

இதன்பின்னர் அன்றுவரை நடைபெற்ற வரலாற்றையும் கூறினான்.

இந்நிலையில் இராவணன் பரிகாசமாக, "ஒப்பில்லாத உங்கள் குலத்தலைவனைக் கொன்றிட்ட இராமனுக்கு அடிமைத்தொழிலை ஏற்றுக்கொண்டுள்ளீர்கள்! இஃது எவ்வளவு கேவலம்? இப்படிச் செய்த பின்னரும் உங்கள் புகழ் அழியாது உள்ளது. இஃது எதனைக் காட்டுகின்றது? உலகத்தாரின் பேதைமையை (மாதுமையை)[35]க் காட்டுகிறது" என்று பேசுகின்றான்.

தொடர்ந்து "அஃது இருக்கட்டும். தமையனைக் கொல்வித்த அன்புத் தம்பியான உங்கள் கூட்டத் தலைவன்

34. சுந்தர. பிணிவீட்டு - 86

35. மாதுமை - பேதைமை (=மாதின் தன்மை) "நுண்ணறிவோடு நூலோடு பழகினும் பெண்ணறிவு என்பது பெரும் பேதைமைத்தே" என்பது ஆன்றோர் வாக்காதலால் பேதைமை 'மாதுமை' என்று சுட்டப்பெற்றது என்பது அறியப்படும். இஃது ஆண் ஆதிக்கத்தால் எழுந்த வாக்கு !

சுக்கிரீவன் ஏவ நீ எனக்குச் சொல்லத்தக்கது யாது? தூது வந்த நீ போர் செய்ததற்குக் காரணம் என்ன?" என்று வினவுகின்றான், இலங்கை வேந்தன்.

(5) இராவணன் சொல்லிய சொற்களையெல்லாம் ஒன்றுசேர்த்துப் பார்த்து யாவர்க்கும் பொதுவான நீதியை எடுத்துரைத்தால் தக்கதாக அமையும் எனக் கருதுகின்றான், மாருதி[36]

"திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூஉங்கு இல்" [37]

என்ற வள்ளுவப்பெருந்தகையின் கருத்தை உன்னிப் பேசுகின்றான்; மறுமாற்றம் உரைக்கின்றான்.

"நான் நின்னிடம் தூதனாய் வந்தது எங்கள் தலைவன் சுக்கிரீவன் சொன்னவற்றை நின்னிடம் தெரிவிப்பதற்கே யாகும்; அவை இச்சமயத்திற்கு ஏற்றவை; நீதி பொருந்தியவை; குற்றமற்றவை; அவற்றை நல்லன என்று செவிமடுத்து உணர்வாயாயின் தகுதியை விளைவிப்பவை. அவற்றையே நின்னிடம் சொல்லுகின்றேன்." [38]

(அ) "நினது வாழ்க்கையை நீ வீணே போக்கிக் கொண்டாய்; அரச அறத்தைச் சிறிதும் நோக்கினாய் இல்லை; பிறன் மனைவியை விரும்பிக் கவர்வதைச் செய்துவிட்டாய்; அதனால் உனக்கு அழிவு நெருங்கியுள்ள தானாலும், இனிமேலாயினும் ஓர் உறுதிச் சொல்லைக் கேட்டு அதன்படி நடக்கக் கடவாய்; அப்படி நடப்பாயானால் நினது உயிரை நெடுங்காலம் ஓம்புவானாவாய்;[39]

(ஆ) "பிறர் வருத்தினாலும் கற்புநிலை கெடாதவளும் நெருப்பினும் தூய்மையுடையவளுமான பிராட்டியைத் துன்பப்படுத்தியதால் பாவத்தால் ஐம்புலன்களை வென்று பேணியதும் நீங்குதற்கு அரியதுமான மாபெரும் தவத்தின் பயன் உங்களைவிட்டு நீங்கப்பெற்றீர்கள்." [40]

36. சுந்தர. பிணிவீட்டு - 90
37. குறள் - 644 (சொல்வன்மை)
38. சுந்தர. பிணிவீட்டு - 91
39. சுந்தர. பிணிவீட்டு - 92
40. சுந்தர. பிணிவீட்டு - 93

(இ) "நல்லறிவையுடைய தேவர்களை வென்று, அதனால் எழுந்த பூரிப்பு(செருக்கு) உங்களிடத்து வரம்பு கடந்ததனால், ஒப்பற்றதாகிய பெருமை உங்களை விட்டு முன்னரே நீங்கிப்போயிற்று; எஞ்சியுள்ள பெருமை இன்றைய தினமே அழிந்துவிட்டது; மற்றைச் சிறுபான்மையுள்ளதும் இன்றைக்கு நின்று நாளைக்கு அழிந்து நிற்குமேயல்லாமல் அழிவின்றி நிலைத்து நிற்குமோ?[41]

(ஈ) "பாவமானது புண்ணியத்தை வெல்லமாட்டாது" என்ற உண்மையினை, மூத்தோர் மொழியை மனங் கொள்ளாது கைவிட்டாய்; ஒன்றையும் ஆலோசியாமல் மாதவத்தால் வந்த தூய்மையைத் தூய்மையுடைய பிராட்டியின் திறத்து உண்டான ஆசை நோயினால் போக்கிக் கொள்பவனாகின்றாய்." [42]

(உ) "நேர்மைக்கு மாறான காமச் செருக்கினால் நேரிய வழியை மறந்துவிட்டுத் தங்கள்தங்கள் அறிவில் மயங்கியவர்கள் இழிந்து இறந்து கீழ்மையுற்று அத்தாழ்வில் மேம்படுவரேயன்றி அறந்திறம்பி நடந்தவர்களுள் அழியா வாழ்வுடையரானவர் எவர்?" [43]

(ஊ) "உலகத்தை ஆண்ட அரசர்களுள் காமத்தால் கெட்டொழிந்தவர்களின் தொகையைக் கணக்கிடத் தொடங்கினால் அஃது அளவிறந்ததாகவே முடியும்.[44]

(எ) "அறிவொழுக்கங்களில் சிறந்தவர்கள் பொருளாசையும் சிற்றின்ப ஆசையும் தவிர வேறு இருள் உண்டு என்று நினையார்; வறியோர்க்குக் கொடுத்தலும் எல்லா உயிர்களிடத்துக் கொள்ளும் கருணையும், பொருளாசை சிற்றின்ப ஆசை ஆகியவற்றினின்று நீங்குதலும் ஆகிய இவையேயன்றி வேறு ஒரு தெளிவு உள்ளதென்றும் நினையார்." [45]

(ஏ) "ஆசையை அடக்குதலின்றி அது செல்கிற வழியே அறிவைப் போகவிட்டு அயலார் மனைவியை விரும்பி

41. சுந்தர. பிணிவீட்டு - 94
42. சுந்தர. பிணிவீட்டு - 95
43. சுந்தர. பிணிவீட்டு - 96
44. சுந்தர. பிணிவீட்டு - 97
45. சுந்தர. பிணிவீட்டு - 98

எந்நாளும் பிறர் தன்னை இகழ்ந்து சிரிக்கும் ஏளனச் சிரிப்பு தோன்ற, நாண் இல்லாதவனாய், உடம்பு காமதாபத்தால் உலரப்பெற்றுப் பழிப்பை அடைகின்ற இழிவான ஆண் தன்மையும் சிறந்த குணங்களுள் ஒன்றாகச் சேருமோ?"[46]

(ஐ) "இந்நிலவுலகத்தை ஆண்டு காலம் சென்ற அரசர்களுள் உன்னளவு நீதியறியும் திறமுடையவர் யாவருளர்? வேதங்களில் விதிக்கப்பெற்றுள முறைமை வழியில் செல்லுகின்ற விருப்பத்தையுடையவனாக இருக்கின்ற நீ, அறநெறியின் வரம்பு கடந்து ஒழுகக் கடவையோ?"[47]

(ஒ) "தன்னை விரும்பாத ஒரு மாதை விரும்பி அவளால் வெறுத்து ஒதுக்கப்பெற்ற பின்னர், அந்த இழிவினால் உடனே இறந்து போகாமல் உயிரோடு வாழ்கின்ற வாழ்வைக் காட்டிலும், முகத்தில் உயர்ந்திருக்கின்ற மூக்கு ஒருவரால் அறுக்கப்பெற்றால் அந்நிலை அழகு எனல் ஆகுமோ?"[48]

(ஓ) "மிக்க வலிவுடைய இருபது கைகளும் பத்துத் தலைகளும் உனக்கு உள என்றும், அதனால் ஒரு தலையும் இரு கைகளையுமேயுடைய இராமனுக்கு அஞ்ச வேண்டியதில்லை எனக் கருதிச் செருக்கடைய வேண்டா. ஆயிரம் தலைகளும் இரண்டாயிரம் கைகளும் உண்டானாலும் அவை உன்னைப் பாதுகாக்க மாட்டா; அவை யாவும் பெருநெருப்பில் பட்ட ஆடைப் பொதிபோல் இராமனது பராக்கிரமத் தீயில் எளிதில் அழிந்து போகும்."[49]

(ஔ) "சிவபெருமான், நரம்பு இழைத்த நின் பாடல் களுக்காக மனமுவந்து நல்கிய வரம் நீ முறை தவறியதனால் தவறிப்போனாலும் போகும்; மறை பிறழாத இராமனது சரம் பிழைக்கும் என்று கருதுதல் தகுமோ?"[50]

---

46. சுந்தர. பிணிவீட்டு - 99
47. சுந்தர. பிணிவீட்டு - 100
48. சுந்தர. பிணிவீட்டு - 101. மூக்கறுபடல் அழகுடையதன்று என்பது வெளிப்படை. தன்னை விரும்பாத ஒருத்தியைக் காதலித்து, அணுகித் தன் கருத்தை அவள் பக்கல் கூறி அவளால் 'சீசீ போ' என்று மறுக்கப்பெற்ற பின்பு உயிர் வாழ்தல் அதனினும் அழகற்றது என்பது கருத்து.
49. சுந்தர. பிணிவீட்டு - 102
50. சுந்தர. பிணிவீட்டு - 103

(க) "அழிவின்றி இருக்க வேண்டியதான நாணம் கெடக் குறைதல் இல்லாத நல்ல நினது அரசச் செல்வத்தையும் அழித்துக்கொண்டு, சிறுமைக்குணம் உடையவனாய் நீதிக்குப் புறம்பான பிறன் மனை நயத்தலான சிறுநெறியில் செல்வையோ?" [51]

(ங) "பெருந்தவசியர்களும், பெருந்தேவர்களும் உன்னை யொழிந்த மற்றையோர் அனைவரும் இராமனை மறந்தவர்களாய் இலர் என்பது உண்மை." [52]

"ஆதலால், பெறுதற்கரிய செல்வங்களையும், பலவகைச் சுற்றத்தினரையும் உயிர்களையும் அழியாதிருக்கப் பெறுமாறு பிராட்டியை இராவணன் இராமனிடம் ஒப்படைத்து விடுவானாக என்று சூரியனது குமாரன் நினக்குச் சொல்லியனுப்பினான்" என்று இலங்கை வேந்தனை நோக்கி இயம்பினன், அநுமன்.

இவையெல்லாம் செவிடன் காதில் ஊதப்பெற்ற சங்கொலியாயிற்று. இராமனது சரம் தாடகை மார்பில் ஊடுருவிச் சென்றதைக் கம்பன் 'கல்லாத புல்லர்க்கு நல்லோர் உரைத்த பொருள் எனப் போயிற்று' என்று கூறினான். இங்கு அநுமன் உரைத்த உரை கற்றறிந்த மூடனின் ஒருகாதில் புகுந்து மற்றொரு காதில் வெளியேறியது. 'எல்லாம் அறிந்த எனக்கு இச்சொற்களைக் கூறியது குன்றில் வாழும் ஒரு குரங்கு ஆகும்' என்று எண்ணி மாநகை செய்தனன், இலங்கை வேந்தன்.

(6) இராம தூதனாகச் சென்ற அநுமன் பிராட்டி தூதனாகத் திரும்பிய நிலையில் தான் கண்டவற்றை இவ்வாறு கூறுவான் :

இலங்கையினின்றும் திரும்பிய அநுமன் இராமன் மொய்கழல் தொழுதிலன்; முளரி நீங்கிய தையலை நோக்கிய தலையன்; கையினன். இந்நிலையில் பிராட்டியிருக்கும் தென் திசையை நோக்கிப் பூமியில் நெடிது வீழ்ந்து வணங்கினன்.

---

51. சுந்தர. பிணிவீட்டு - 104
52. சுந்தர. பிணிவீட்டு - 105

**"கண்டனென் கற்பினுக்கு**
**அணியைக் கண்களால்"** [53]

*என்று இரத்தினச் சுருக்கமாகக் கூறுகின்றான். அநுமன் வாக்கினாலேயே (கவிதையில்) கூறியுள்ளதை*[54] *ஈண்டு என் சொற்களால் கூறுவேன்.*

*(அ) "உன் சிறந்த மனைவி என்ற தகுதிக்கும், உன்னைப் பெற்ற தசரத சக்கரவர்த்தியின் மருமகள் என்ற சொல்லுக்கும், மிதிலை மன்னன் சனகன் மகள் என்ற தன்மைக்கும், என் தெய்வம் என்னும் பெருமைக்கும் ஏற்பச் சிறப்புச் சேர்க்கும் தன்மையளாக அமைந்துள்ளாள்." (59)*

*(ஆ) "பொன்னையொத்திருக்கும் பொருள் பொன்னைத் தவிர வேறு இல்லை; அது போலத் தன்னை யொத்திருப்பவள் தன்னைத் தவிர வேறு ஒருத்தி இலள் என்று யாவரும் சொல்லும்படி பிராட்டி பொறுமைக் குணத்தில் நிலை நின்றாள். தனக்கு நாயகனாக வாய்த்த உன்னையே யன்றி, நின்னை ஒத்திருப்பவர் வேறெவரும் இலர் என்ற கீர்த்தியை நினக்குக் கொடுத்தாள். என்னை யொப்பவன் என்னைத் தவிர வேறு எவனும் இலன் என்ற பெருமையை எனக்கும் நல்கினாள்; அஃதாவது, நான் தூது போய் வந்த செயல் பயன்பட்டு எனக்குப் பெருமை யளித்தற்குக் காரணமாகுமாறு அவள் நிறைகாத்து நின்றாள்." (60)*

*(இ) "நீ பிறந்த குலமான 'சூரிய குலம்' இனி 'இராமகுலம்' (இரகுவமிசம்) என வழங்குவதாயிற்று; தான் பிறந்த குலமான 'ஜனகக்குலம்' இனி 'ஜானகி குலம்' என்று வழங்குமாறு செய்தாள். வானரர் குலமாகிய என் குலம் 'அநுமார்குலம்' என்று வழங்குமாறு செய்தாள். அரக்கர் குலத்தைக் கூற்றுக்கு ஈந்து வானவர் குலத்தை வாழச்செய்தாள்." (61)*

*(ஈ) "வில்லை ஏந்திய வீரர் திலகமே, இலங்கை நகரில் நற்பெரும் தவச்செல்வியை நான் பார்க்கவில்லை. பின்னர் எதனைக் கண்டேன்? உயர்குடிப் பிறத்தல் என்ற ஒரு குணமும்,*

*53. சுந்தர. திருவடி தொழுத - 58*
*54. சுந்தர. திருவடி - 59 - 80*

பொறுமை என்பதொரு குணமும், கற்பென்ற ஒரு குணமும் ஒருங்கு கூடிக் களிநடம் புரியக் கண்டேன்." (62)

(உ) "நீ பிராட்டியின் கண்களிலும் உள்ளாய்; மனத்திலும் இருக்கின்றாய்; வாயின் எல்லையிலும் நீ உள்ளாய்; இரு கொங்கைகளின் முகட்டிலும், இடைவிடாமல் காமவேள் மலரம்புகளால் தொளைத்த புண்களிலும் நீ உள்ளாய். இந்நிலையில் நின்னை அவள் பிரிந்துள்ளாள் என்பது எப்படிப் பொருந்தும்?" (63)

(ஊ) "இலங்கை மாநகரில் காலை மாலை இல்லாத கற்பகக்கா என்னும்படியான அசோக வனத்தில் உம்பி புல்லினால் தொடுத்த குடிசையில் 'தவம் செய்த தவம்' என்று சொல்லும்படியான மங்கை இருந்தாள்." (64)

(எ) "விருப்பமில்லாத பெண்ணை இராவணன் தொட்டால் அவன் தலை எண்ணற்ற பிளப்புகளாய் வெடிக்கும் என்ற நான்முகனின் சாபம் இருப்பதால், அவன் பிராட்டியின் திருமேனியைத் தொடுவதற்கு அஞ்சுவான். அதனால்தான், அவள் இருந்த நிலத்தோடு பெயர்த்துக் கொண்டு போனான்." (65)

(ஏ) "அவன் பிராட்டியைத் தொடவில்லை என்பதற்குச் சான்றுகள் : நான்முகன் படைத்த அண்டங்கள் பிளந்தில; அனந்தன் தலை கிழிந்திலது; கடல்கள் பொங்கி மேல்வழிந்த தில்லை; சுடர்களும் உடுக்களும் கீழே விழுந்தில; வேதமும் வேத விதிப்படி செய்த கருமமும் அழியவில்லை. இவற்றால் அந்த உண்மை நிலை பெற்றுள்ளது." (66)

(ஐ) "சோகத்தாளாகிய பிராட்டி கற்பு நிலை குன்றாதிருத்தலால் தேவர்களின் மனைவிமாரும் இப்போது தொழுதற்கு ஒத்த பெருமையை அடைந்தனர்; இனி, அப்பனின் இடப்பாகத்திலுள்ள அம்மை அவன் தலையில் இருப்பதற்கேற்ற சிறப்பை அடைந்தாள்; செந்தாமரை மலரில் இருக்கும் திருமகளும் திருமாலின் மார்பை நீங்கி அவனுடைய ஆயிரம் தலைகளில் இடம் பெற்றவளாகின்றாள்." (67)

(ஒ) "இலங்கை நகர் முழுவதும் தேடி, இராவணனின் இருப்பிடத்தை அடைந்து, அங்குள்ள மகளிரையெல்லாம்

நோக்கிக்கொண்டே அசோக வனத்தில் நுழைந்தேன். அங்குத்தான் அப்பெருமாட்டியைக் கண்ணீர்க் கடலில் கண்டேன்." (68)

(ஓ) "பல பேய்கள் போன்ற அரக்கிமார் அச்சுறுத்தி பிராட்டி தப்பிப் போகாதவாறு காக்க, தனிப்பட்டவளாய் அவர்களிடையே நெருக்குண்டு, அவலச்சுவையே பெண்ணுருக்கொண்டு சிறைப்பட்டது போன்று உள்ளாள், பிராட்டி." (69)

(ஔ) "பெண்ணின் பெருங்குணங்கள் இயல்பாகவே அமையப்பெற்ற பிராட்டி உன்பால் வைத்துள்ள காதலைக் கண்களினால் தெவிட்டிவிடாமல் பார்த்தற்கு நீ அவதரித்ததனால், நீயே புருடோத்தமன் என்னும் பேற்றை அடைந்தவனாகின்றாய்." (70)

(க) "சுவாமியே, இலங்கையில் நாள்தோறும் பெரு மூச்சுடனும் குற்றுயிருடனும் ஊசல்போல் அலைந்து திரிபவர்களாகிய தெய்வமகளிரும் தேவர்களும் முன்னே பிராட்டியை அறியாதிருப்பினும் அவளது நிலையை இப்போது கண்டறிவார்கள்." (71)

(ங) "அடியேன் பிராட்டியை வணங்குதற்குத் தகுதியான காலத்தை எதிர்பார்த்து இருந்தபொழுது, இலங்கை வேந்தன் அங்கு எய்தித் தன்னைக் காதலிக்கும்படி வேண்டி நின்றனன்; பிராட்டி கடுஞ்சொற்களைக் கூற, அவன் சீறி அப் பெருமாட்டியைக் கொல்ல மேற்கொண்டுவிட்டான்." (72)

(ச) "பெருமானே, பிராட்டியின் கற்பு நிலையும், நின் கருணையும், தூய அறமும் என்ற இவையாவும் தொடர்ந்து விடாமல் பாதுகாத்தன; அப்பொழுது அரக்கன் காவல் புரிந்த அரக்கிமாரைப் பிராட்டிக்கு அறிவு மாறும்படி வருத்துமாறு கூறிச்சென்றனன்." (73)

(ஞ) "அச்சமயத்தில்தான் பிராட்டி உயிர் துறப்பதாக உன்னி, கொடி ஒன்றனை எடுத்து, ஒரு மரத்தின் கிளையில் உறுதியாகக் கட்டி, தன் மணிக்கழுத்தில் சேர்த்துச் சுருக்கிட்டுக்கொள்ளும் சமயத்தில் அச்செயலைத் தடைசெய்து, அப்பெருமாட்டியின் திருவடிகளை வணங்கி நின்று நின் திருநாமத்தைச் சொன்ன பொழுதில்." (74)

(ட) "கண்ணீர் மார்பில் வழியும் நிலையிலுள்ள பிராட்டி, என் செயல் வஞ்சனையுடைய அரக்கரின் மாயச் செய்கையாகும் என ஐயுற்றும், என்னை நோக்கி, 'நீ யான் இறக்கும் தறுவாயில் அஞ்சன வண்ணனின் திருநாமத்தைச் சொல்லி யான் இறப்பதைத் தவிர்க்குமாறு செய்தாய்' என்று மகிழ்ச்சியுடன் உரைத்தாள். (75)

(ண) "எந்தாய், அடியேன் அறிவிற் பொருந்துமாறு விளக்கமாகச் சொன்ன பெரிய அடையாளங்களையெல்லாம் பிராட்டி பொருத்தமாக நோக்கி, அடியேன் மனத்தில் மாறுபாடில்லாமையையும், அடையாள மொழியையும் எண்ணி, இறுதியாக, நீ தந்த கணையாழியை எடுத்துக்காட்ட அதனை ஏற்றுக்கொண்டாள்; அஃது உயிரை இறவாமல் நிலை நிறுத்திக் காக்கும் மருந்தை ஒப்பதாயிற்று. (76)

(த) "அடியேன் தந்த ஆழி, வஞ்சரூர் வந்தமையால் தூய்மையை இழந்தது என்று கருதித் தன் மழைக்கண்ணீரால் ஆயிரம் திருமுழுக்காட்டினாள்; இரங்கிக்கொண்டிருந்த தல்லாமல் ஒன்றும் பேச முடியாதவளாயினள்; இளைத்திருந்த திருமேனி பூரித்தது; வியப்பு எய்தினாளன்றி இமைத்திலள்; பெருமூச்செறிந்தாள். (78)

(ந) "பெருமானே, அடியனேன் அப்பெருமாட்டிக்கு நின்னைப் பிரிந்த பின் நேர்ந்தவற்றையெல்லாம் அவள் அறியும்படி சொன்னேன்; பின்னர், 'தோகாய், நீ இருந்த இடம் இன்னதென்று அறியக்கூடாமையால் இத்துணைக் காலம் தாழ்த்தது' என்றேன்; அவளைப் பிரிந்தமையால் நீ வருத்தப்படும் தன்மையையும் தெரியச் சொன்னேன்; அதன் பின்னர் உயிர் நீங்காதிருக்கப்பெற்றாள். (79)

(ப) "இவ்விடத்திலுள்ள தன்மைகளையெல்லாம் நடந்த முறைப்படி அடியேன் சொன்னவற்றைக் கேட்டாள்; அங்குள்ள தன்மையெல்லாம் அடியனேன் தெரியச் சொன்னாள்; 'இனி ஒரு மாத காலம் உயிருடன் இருப்பேன்; அதற்குள் சக்கரவர்த்தித் திருமகன் அழைத்துச் .செல்லத் திருவுள்ளம் இல்லையென்றால் உயிரிழப்பேன்' என்றும் சொல்லி நின் திருவடிகளைத் தலையின்மீது வைத்துத் திக்கு நோக்கித் தண்டன் சமர்ப்பித்தாள்." (80)

*(ம) "இந்த நிலையில் துகிலில் பாதுகாப்பாகப் பொதிந்து வைத்திருந்த சூளாமணியை எடுத்து அடியேனிடம் சேர்ப்பித்தாள். அதனை நின் திருக்கண்கள் மகிழக் காண்பாயாக" என்று மொழிந்து சிரஞ்சீவியான மாருதி இராமனிடம் கொடுத்தான்.*

*இதுகாறும் கூறியவற்றால் 'உய்த்துள காலமெல்லாம் புகழொடும் ஓங்கி நிற்கும்' அநுமன் சிறந்த தூதனாகச் செயற்பட்டதை அறிந்து மகிழ்கின்றோம்.*

**"தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றும்**
**வாய்மை வழியுரைப்பான் பண்பு."** [55]

*55. குறள் - 688 (தூது.)*

# 7. இராமபக்தன்

"கற்பார் இராமபிரானை அல்லால்
மற்றும் கற்பரோ?"[1]

என்கின்றார், நம்மாழ்வார். இராமனை நினைக்கும்போது அவன் பிறந்து, வளர்ந்து, அரசாண்ட நகரமாகிய அயோத்தி நகர் நினைவிற்கு வருகின்றது. இன்று அயோத்தியில் மட்டும் 2700 இராமர் கோயில் இருப்பதாகச் சொல்லுகின்றனர்.[2] இராமபக்தி ஆழ்வார்கள் காலத்தில் இமயம்போல் உயர்ந்தது; ஆசாரியர்கள் காலத்தில் இமயத்தின் கொடுமுடி போல் உயர்ந்தது.

"இராமனது மெய்யும் கிருட்டிணனது பொய்யும்
நமக்குத் தஞ்சம்."

"சிறை இருந்தவள் ஏற்றம் சொல்லுவது இராமாயணம்."

என்ற திருமறைச் சொற்றொடர்கள் போன்ற சொற்றொடர்கள் தோன்றி, வைணவர்கள் நாக்கில் தாண்டவமாடுகின்றன.

அடியேன் அயோத்தியில் தங்கிப் பல இடங்களைச் சுற்றிப் பார்க்கும்போது இராமபக்தியைப்பற்றி அங்கு நிலவும் சான்றுகள் :

(1) **ஒரு மசூதி** : இஸ்லாமியர்கள் படையெடுப்பின் பொழுது பழைய திருக்கோயிலை இடித்து அவ்விடத்தில்

---

1. திருவாய். 7.3:1

2. 1968இல் என் வடநாட்டுத் திருத்தலப் பயணத்தின்போது அயோத்தியில் ஒரு வாரம் தங்கியிருந்து, விஷ்ணு கயை, புத்த கயை முதலான இடங்கட்குச் சென்று, பல செய்திகளை அறிந்த காலம் அது. ஒவ்வொருவரும் இல்லத்தில் இராமமூர்த்தியை வழிபடுவதும் இக்கணக்கில் அடங்கும். திருவயோத்தியில் இராமபக்தி உச்ச நிலையில் உள்ளது என்பதை இது காட்டுகின்றது.

*மசூதி எழுப்பப்பெற்றதாக வரலாறு. மசூதியின் ஒரு பகுதி இராமன் பிறந்த இடம் எனக் காட்டப்பெறுகின்றது. அம்மி, ஆட்டுக்கல், மருந்தரைக்கும் கல்வம் போன்ற அடையாளங்கள் அங்கு வைக்கப்பெற்றுள்ளன. அவை யெல்லாம் பிற்காலத்தில் இஸ்லாமியர் பழைய கோயிலை இடித்த பிறகு வைக்கப்பெற்றவை. அவ்விடமே இன்று* **'இராம சன்ம பூமி - பாபர் மசூதி'** *என்ற பிரச்சினைக்குரிய இடமாகும்.*

*(2) இம்மசூதிக்கு அருகில், சரயு நதிக்கரையில், தென்னிந்திய பாணியில் 'அம்மாஜி மந்திர்' என்ற ஒரு புதிய கோயில் கட்டப்பெற்றுள்ளது. அங்கு இராமன், பிராட்டி, தம்பியர், சிறிய திருவடி சூழ மகுடம் சூட்டிய திருக்கோலத் தில் காட்சி அளிக்கின்றான். கோயில் மிகத் தூய்மையாக வைக்கப்பெற்றுள்ளது. மூர்த்தியின் திருக்கோலம் கைபுனைந்தியற்றிய கவின்பெறு வனப்பெல்லாம் திரண்டு அமைந்துள்ளது; கண்டாரை ஈர்க்கவல்ல பெற்றியுடன் திகழ்கின்றது. நாமும் இராமனின் முடி சூட்டு விழாவில் கலந்துகொண்டுள்ளோம் என்ற மனநிலையைக் கொள்ளுகின்றோம்.*

*(3)* **குப்தர் படித்துறை :** *இத்திருக்கோயிலிலிருந்து ஆறு கிலோ மீட்டர் தொலைவில், சரயு நதியில்* **'குப்தர் படித்துறை'** *உள்ளது. இராமன் சரயு நதியில் மூழ்கித் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளிய இடம் இதுதான் என்று சொல்லுகின்றனர். அந்த இடத்திற்கு வந்ததும் ஆழ்வார் பாசுரங்களில் ஆழங்கால் பட்டவர்களுக்கு*

**"அன்றுசரா சரங்களை வைகுந்தத்து ஏற்றி**
**அடலரவப் பகையேறி அசுரர் தம்மை**
**வென்றிலங்கு மணிநெடுந்தோள் நான்கும் தோன்ற**
**விண்முழுதும் எதிர்வரத்தன் தாமம் மேவி"** [3]

*(சரம் - இயங்கு திணை; அசரம் - நிலைத்திணை; விண் முழுதும் - பரமபதத்திலுள்ளவர்கள் அனைவரும்; தாமம் - இடம்)*

---

*3. பெரு.திரு. 10 : 10*

என்னும் குலசேகரப்பெருமாளின் திருமொழிப்பகுதி மனத்தில் எழும். இந்நிலையில் முத்தராக, வைகுந்தத்திற்குச் செல்லும் அநுபவத்தையும் பெறச்செய்யும்.

இந்த இடத்தில்தான் இராமன் தன்னைச் சார்ந்தோர்கள் அனைவரையும் வைகுந்தத்திற்கு இட்டுச் சென்றான் என்பது மரபான நம்பிக்கை. அப்பொழுது அநுமன் அங்குச் செல்ல மறுத்துவிட்டதாகவும், இப்பூவுலகி லிருந்துகொண்டே ஒழிவில் காலமெல்லாம் இராமனின் புகழ் பரப்பிவர உறுதி கொண்டதாகவும், அந்த அநுமனே பசனை நடைபெறும் இடங்களிலெல்லாம் கோமாளியாக பக்திப் பெருக்கில் திளைக்கின்றான் என்பதும் மற்றொரு மரபு வழி நம்பிக்கை

(4) **'அநுமான் தேக்ரி'** : சரயு நதிக்கரையில் பிறிதோர் இடத்தில் 'அநுமான் தேக்ரி' என்று வழங்கப்பெறும் 'ஆஞ்சநேயர் கோயில்' ஒன்று உள்ளது. இங்கு எழுந்தருளியிருக்கும் சிறிய திருவடி பேருருவம் கொண்டவர். தலைப்பகுதி மட்டிலும் வெளியில் தெரியுமாறு அமைக்கப் பெற்றுள்ளது. இதனைக் காணுங்கால், அநுமன் அசோக வனத்திலும் பிற இடங்களிலும் கொண்ட பேருருவம் நினைவிற்கு வரும். இத்திருக்கோயிலெங்கும் இராமபக்தர்கள் துளசி இராமாயணத்தை ஓதியவண்ணம் உள்ளனர். தாம் கோரிய யாவற்றையும் அளிக்க வல்லவன் மாருதி என்ற நினைப்பில் இச்சீரிய பணியில் ஈடுபட்டுள்ளனர். இங்கு ஆண்டவன் வழிபாடும் அடியார் வழிபாடும் இணைந்து நடைபெற்று வருகின்றன.

இந்த வரலாறுகளையெல்லாம் அறிந்துகொண்ட நிலையில், கம்பன் காட்டும் அநுமனின் இராம பக்தியைக் காண முற்படுவோம்.

(1) இராமலக்குமணர்களை முதன் முதல் கண்டவுடன், அவர்களை நெருங்கிப் பேசுவதற்கு முன்னதாகவே

**"அன்பினன் உருகு கின்ற**
**உள்ளத்தன் ஆர்வத் தோரை**
**முன்பிரிந் தனையர் தம்மை**
**முன்னினான் என்ன நின்றான்."[4]**

---

4. கிட்கிந்தை - அநுமப் - 11

இஃது இவன் தந்தை கூறியவாறு திருமாலுக்கு அடிமை செய்யுமாறு பணித்ததையொட்டி நடைபெற்றதாகக் கருதலாம்.

(2) சுக்கிரீவனுக்கு இராமலக்குமணர்களின் தன்மையை எடுத்துக்கூறும் போதும்[5], அடுத்து அவனுக்கு இராம பிரானின் சிறப்பை விவரிக்கும்போதும்[6] இராமலக்குமணர் களின் மகிமையைக் கொண்டாடும்போதும்[6] அநுமன் அவர்கள்மீது கொண்டுள்ள பக்தி தெளிவாகின்றது.

**"முனைவரும் பிறரும்மேல்**
**முடிவுஅரும் பகலெலாம்**
**இனையர்வந்து உறுவர்என்று**
**இயல்தவம் புரிகுவார்**
**வினைஎனும் சிறைதுறந்து**
**உயர்பதம் விரவினார்"[7]**

(முனைவர் - முனிவர்; இனையர் - இவர்கள்; உறுவர் - சேர்வர்; சிறை - கட்டு; துறந்து - நீங்கி; உயர்பதம் - மோட்சம்)

என்ற பாடற்பகுதி மட்டுமே போதும். இதற்கு

(3) பிராட்டியைத் தேடுவதற்குத் தென்திசைக்கு அனுப்பப்பெற்றவர்களுள் அநுமன் முக்கியமானவன். தன்மீது அளவற்ற பக்தி கொண்டிருப்பதை இராமனே நன்கு அறிவான். அதனால் அவனிடம் பிராட்டியின் அவயவங் களை வருணித்தும்[8], சில அடையாளங்களை அவனுக்குக் கூறியும்[9], கணையாழி தந்தும்[10] அனுப்புகின்றான்.

(4) சுயம்பிரபையிடம் தம்மை (வானரவீரர்களை) அறிமுகப்படுத்தும்போது 'ஏதமில் அறத் துறை நிறுத்திய இராமன், தூதவர்'[11] என்கின்றான். அஃதாவது திருமால்

5. கிட்கிந்தை - நட்புக்கோள் - 3 - 5
6. கிட்கிந்தை - நட்புக்கோள் - 6 - 12
7. கிட்கிந்தை - நட்புக்கோள் - 12
8. கிட்கிந்தை - நாடவிட்ட - 33 - 65.
9. கிட்கிந்தை - நாடவிட்ட - 67 - 72
10. கிட்கிந்தை - நாடவிட்ட - 73
11. கிட்கிந்தை - பிலம்புக்கு - 53

சாதுசனத்தை நலியும் கொடியவர்களைக் கடிந்து, நல்லோர்களைப் பாதுகாத்து, அறத்தை நிலைநாட்டுமாறு ஆதியஞ்சோதி உருவை அங்குப் போல் இங்கு வைத்து இராமபிரானாகத் திருவவதரித்தமை (அவதார இரகசியம்) இதனால் சொல்லப்பெறுவதால் அநுமனது இராம பக்தி தெளிவாகின்றது.

(5) பிராட்டியைத் தேடுவதில் முன்னேற்றம் இல்லாமையால் ஒரு நிலையில் வானர வீரர்கள் மனம் உடைந்து நின்றபோது, அநுமன், "தேட வேண்டிய இடம் இன்னும் அதிகமாக உள்ளது. அதற்குள் நீங்கள் சலிப்படைவது தகுதியன்று. தேடுவது இன்றியமையாதலால் தவணை நாள் கடந்தாலும் சிறிதும் கலங்காது, மேற்கொண்ட செயலில் ஊக்கம் கொள்ளுதலே தக்கது. சுக்கிரீவனும் மெச்சுவான். நம்மால் இயன்றவரையில் பிராட்டியை எல்லா இடங்களிலும் தேடிப் பார்ப்போம். அகப்படாவிட்டால், பிராட்டிக்கு நேர்ந்த துன்பத்திற்காக இராவணனை எதிர்த்து நின்று போரிட்டு மாய்ந்த சடாயுபோல் வீழுதல் பெருமை"[12] என்று கூறுவான். இராமன்பால் எவ்வளவு பக்தி இருந்தால் இவ்வாறு பேசி இருக்கமுடியும்!

(6) பிராட்டியைத் தேடித் தென்திசைச் சென்ற வானர வீரர்கள் மயேந்திர மலையை அடைகின்றனர். ஒருநிலையில் சாம்பவான் அநுமனை நோக்கி, "நீரே கடல் கடந்து பிராட்டியைக் கண்டு வரவேண்டும்" எனக் கூற, அநுமன் அதற்கு உடன்படுகின்றான். தனக்கு இது பெறற்கரிய பெரும்பேறு என்று கூறியவன் மேலும் கூறுவான் :

"இலங்கையை வேரொடு பெயர்த்தெடுத்துக் கொண்டுவா என்றாலும், அரக்கர்களை அடியோடு அழித்துப் பிராட்டியை எடுத்துக்கொண்டு வா என்றாலும் சொன்ன சொற்படி செய்து முடிப்பேன். மண் அளந்த மால் போல, ஒரு நூறு யோசனை தொலைவும் ஓரடிக்குள் அடங்கும்படி கடலை எளிதாகத் தாண்டி, இந்திரன் முதலான தேவர்கள் அரக்கர்கட்கு உதவியாக வந்தாலும்,

12. கிட்கிந்தை. சம்பாதிப் - 19 - 21

அரக்கர்களைப் பூண்டோடு அழித்து நினைத்ததை முடிப்பேன். கடல் இவ்வுலகத்தை அழிக்கும்படி பொங்கி வந்தாலும், இவ்வண்டமே உடைந்து ஆகாயத்தில் சென்றாலும்,

"இற்றைநும் அருளும் எங்கோன்
ஏவலும் இரண்டு பாலும்
கற்றைவார் சிறைகள் ஆகக்
கலுழனில் கடப்பல்..." [13]

*(அருள் - ஆசி; எங்கோன் - இராமன்; ஏவல் - கட்டளை; கற்றைவார் சிறைகள் - தொகுதியான நீண்ட சிறகுகள்; கலுழன் - கருடன்)*

*என்று கூறுகின்றான். இதனாலும் இராமபக்தி புலனாகின்றது.*

*தூதனாகக் கடல் கடந்தது முதல் இராமகாதையின் நிறைவுவரையிலும், அநுமனது இராம பக்தி பளிச்சிட்டுக் காட்டும் இடங்கள் பல. அவற்றைக் காட்ட முயல்வேன்.*

*(அ) அங்காரதாரையைக் கொன்றொழித்த பிறகு, அரக்கர் முதலியோர் தரும் எல்லா வகைத் துன்பங்களையும் இராமநாம உச்சரிப்பே போக்க வல்லது என்று உறுதி கொள்ளுகின்றான்.*

"ஏறுவகை யாண்டைய
இராமன்என எல்லாம்
மாறும்;அதின் மாறுபிறிது
இல்லென வலித்தான்" [14]

*(ஏறுவகை - கடந்து உய்யும் உபாயம்; மாறும் - நீங்கும்; பிறிது - வேறான; வலித்தான் - உறுதி கொண்டான்)*

*(ஆ) பிராட்டியிடம் அநுமன் இராமனின் திருமேனி யழகினை வருணிக்குங்கால், அநுமனின் இராமபக்தியைக் காணலாம்.[15] இராமபிரானைக் கண்டது முதல் அவன்*

*13. கிட்கிந்தை - மயேந்திரப் - 21 - 23*

*14. சுந்தர - கடல்தாவு - 88*

*15. சுந்தர - உருக்காட்டுப் - 38 - 58. இஃது இராமாநுசர் பிள்ளையுறங்கா வில்லிதாசருக்கு அரங்கனின் திருவடிமுதல்*

*அநுமனது சிந்தையில் எவ்வாறு இடம் பெற்றுள்ளான் என்பதை அவனது வருணனை காட்டுகின்றது. அரங்கனின் திருமேனியைப் 'பாதாதி கேசமாகக்' கண்டு அநுபவித்த திருப்பாணாழ்வார்*

**"நீலமேனி ஐயோ! நிறை**
**கொண்டதுஎன் நெஞ்சினையே![16]**

**"கொண்டல் வண்ணனைக்**
**கோவலனாய் வெண்ணெய்**
**உண்ட வாயன்என்**
**உள்ளம் கவர்ந்தானை**
**அண்டர் கோன்அணி**
**அரங்கன்என் அமுதினைக்**
**கண்ட கண்கள்மற்று**
**ஒன்றினைக் காணவே" [17]**

*என்று கூறிக் களிப்பார். அநுமனது இராமன் திருமேனி வருணனையையும், அடையாள மொழிகளையும் கேட்ட பிராட்டி அடைந்த மகிழ்ச்சியைக் கம்பநாடன் இவ்வாறு காட்டுவான் :*

**"இறந்தவர் பிறந்தபயன்**
**எய்தினர்கொல் என்கோ?**
**மறந்தவர் அறிந்துஉணர்வு**
**வந்தனர்கொல் என்கோ?**
**துறந்தவுயிர் வந்துஇடை**
**தொடர்ந்ததுகொல் என்கோ?**
**திறந்தெரிவது என்னைகொல்**
**இந்நன்னுதலி செய்கை?[18]**

**இழந்தமணி புற்றுஅரவு**
**எதிர்ந்ததுஎனல் ஆனாள்;**
**பழந்தனம் இழந்தன**
**படைத்தவரை ஒத்தாள்;**

***திருவபிடேகம்வரை காட்டியதையும், திருப்பாணாழ்வார் அரங்கத் தம்மானின் 'கமலபாதம்' முதல் திருமுடிவரை காட்டியதையும் நினைவு கூரலாம் (அமலனாதிபிரான்)***

***16. முதலாயிரம் - அமலனாதி - 9***
***17. முதலாயிரம் - அமலனாதி - 10***
***18. சுந்தர. உருக்காட்டு - 64***

குழந்தையை உயிர்த்தமல
டிக்குஉவமை கொண்டாள்;
உழந்துவிழி பெற்றதுஓர்
உயிர்ப்பொறையும் ஒத்தாள்." [19]

*(3) பாசத்தால் பிணிப்புண்டு இராவணன் முன் நிறுத்தப்பெற்ற அநுமன் இராவணன் விடுத்த வினாக்களுக்கு கூறிய மறுமொழியில் இராமபக்தியைக் காணலாம். அவன் கூறுவன் :*

"அல்லியம் கமலமே அனைய செங்கண்ஓர்
வில்லிதன் தூதன்யான்" [20]

"அனையவன் யாரென அறிதி யாதியேல்
முனைவரும் அமரரும் மூவர் தேவரும்
எனையவர் எனையவர் யாவர் யாவையும்
நினைவரும் இருவினை முடிக்க நின்றுளோன்" [21]

*(முனைவர் - முனிவர்; இருவினை - பெரிய காரியம்; நின்றுளோன் - அவதரித்துள்ளவன்)*

"ஈட்டிய வலியும் மேனாள்
இயற்றிய தவமும், யாணர்க்
கூட்டிய படையும், தேவர்
கொடுத்தநல் வரமும், கொட்பும்,
தீட்டிய பிறவும் எய்தித்
திருத்திய வாழ்வும், எல்லாம்
நீட்டிய பகழி ஒன்றால்
முதலொடும் நீக்க நின்றான்." [22]

*(வலி - உடல் பலம்; யாணர் - புதிது புதிதாக; கொட்பு - சிறப்பு; எய்தி - அடைந்து; வாழ்வு - அரசுச் செல்வம்; பகழி - அம்பு; முதலொடு - அடியோடு)*

*இன்னும் அவன்,*

"வேதமும் அறனும் சொல்லும்
மெய்யற மூர்த்தி வில்லோன்" [23]

---

*19. சுந்தர. உருக்காட்டு - 65*
*20. சுந்தர. பிணிவீட்டு - 74*
*21. சுந்தர. பிணிவீட்டு - 75*
*22. சுந்தர. பிணிவீட்டு - 76*
*23. சுந்தர. பிணிவீட்டு - 78*

"கடையிலா மறையின் கண்ணும்
ஆரணம் காட்ட மாட்டா
அறிவினுக்கு அறிவும் அன்னோன்
போர்அணங்கு இடங்கர் கவ்வப்
பொதுநின்று முதலே என்ற
வாரணம் காக்க வந்தான்
அமரரைக் காக்க வந்தான்"[24]

*(கடை இல்லா - முடிவு இல்லாத; மறை - வேதம்; ஆரணம் - உபநிடதம்; காட்டமாட்டா - விளக்க மாட்டா; போர் அணங்கு - வருத்தம் செய்கின்ற; இடங்கர் - முதலை; பொது நின்ற முதல் - ஆதிமூலம்; வாரணம் - யானை, கசேந்திரன்)*

"மூலமும் நடுவும் ஈறும்
இல்லதோர் மும்மைத் தாய
காலமும் கணக்கும் நீத்த
காரணன் கைவில் ஏந்திச்
சூலமும் திகிரி சங்கும்
கரகமும் துறந்து தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப்
பொருப்பும்விட்டு அயோத்தி வந்தான்"[25]

*(மூலம் - முதல்; மும்மைத்து - இறப்பு; நிகழ்வு, எதிர்வு; கணக்கு - எல்லை; காரணன் - முழுமுதற் கடவுள்; கரகம் - கமண்டலம்; ஆலம் - ஆலிலை; மலர் - தாமரை)*

பாடல்களைப் பன்முறை படித்துப் பாடி அநுபவித்தால் அநுமனின் இராமபக்தி கொடுமுடியை எட்டும். முதற்போர் நடைபெற்ற பொழுது ஒருநிலையில் அநுமன் தோளின்மீது இராமன் ஏறிப் போர் புரிகின்றான். அதனைக் கண்ட தேவர்கள் 'குன்றின்மீ துள்ள சிங்கம்' என்று கூறி மகிழ்கின்றனர். "ஈன்ற கன்று தாங்கிய தாய் என மாருதி களித்தான்."[26] இராமபக்தியில் திளைக்கும் கம்பன், இக்காட்சியை,

*24. சுந்தர. பிணிவீட்டு - 79*
*25. சுந்தர. பிணிவீட்டு - 80*
*26. யுத்த. முதற்போர் - 219*

"ஓதம் ஒத்தனன் மாருதி
அதன்அகத்து உறையும்
நாதன் ஒத்தனன் என்னிலோ
துயில்கிலன் நம்பன்
வேதம் ஒத்தனன் மாருதி
வேதத்தின் சிரத்தின்
போதம் ஒத்தனன் இராமன்வேறு
இதனில்லை பொருவே" [27]

*(ஓதம் - கடல்; நாதன் - திருமால்; வேதத்தின் சிரம் - உபநிடதம்; போதம் - பரம்பொருள்)*

*இங்கு அநுமனது இராமபக்தியை இணை இணையாக ஒப்பிட்டுக் காட்டி, தன்னை மறந்த நிலையில் தனது பக்தியின் அருமையையும் அற்புதமாகக் காட்டுகின்றான், கம்பன்.*

**பக்தியின் சிறப்பு :** *முதற்போர் நடைபெற்ற பொழுது ஒருநிலையில் இராவணன் இலக்குவன்மீது வேற்படையை எறிகின்றான். அஃது அவன் மார்பிற் பாய அவன் அயர்ந்த நிலையில் உள்ளான். அவனுடலைத் தூக்கிச் செல்வதற்காக "நஞ்சினால் செய்த நெஞ்சினான் நடந்தான்."* [28] *வந்தவன் தனது இருபது கைகளினாலும் இலக்குவன் உடலைத் தூக்க முயலுகின்றான்.*

"வெள்ளி யங்கிரி எடுத்தனன்
வெள்கினான் என்ன
எள்ளில் பொன்மலை எடுக்கலுற்
றானென எடுத்தான்." [29]

*(எள் இல் - குற்றமற்ற)*

*தூக்க முடியவில்லை.*

"தொடுத்த எண்வகை மூர்த்தியைத்
துளக்கிவெண் பொருப்பொடு
எடுத்த தோள்களுக்கு எழுந்திலன்
இராமனுக்கு இளையான்" [30]

---

*27. யுத்த. முதற்போர் - 221*
*28. யுத்த. முதற்போர் - 208*
*29. யுத்த. முதற்போர் - 209*
*30. யுத்த. முதற்போர் - 209*

*(எண்வகை மூர்த்தி - எட்டுப் பொருள்களைச் சரீரமாக உடைய சிவபெருமான்; துளக்கி - சலிக்கச்செய்து)*

*இராவணன் சிவபெருமானுடன் கைலாய மலையைத் தூக்கினவனாயினும், இலக்குவன் விட்டுணுவின் அமிச மாதலால், அவ்விராவணனால் தூக்க முடியாதவனாயி னான். விட்டுணுவின் சொரூபம், பக்தர்க்கு அன்றி மற்றை யோர்க்குப் பெரும் பாரமாகத் தோன்றும்.*

*பாவேந்தர் காதலின் ஆற்றலைக் குறிப்பிடும்போது, வஞ்சி தன் கோவை உதடு திறந்து சிரிக்குமுன் "குப்பன் பறந்தான் பருவத மேல் பாங்கியைத் தூக்கியே" என்று காட்டி,*

**"கண்ணின் கடைப்பார்வை**
**காதலியர் காட்டிவிட்டால்**
**மண்ணில் குமரருக்கு**
**மாமலையும் ஓர்கடுகாம்"** [31]

*என்ற அடிகளையும் சான்றாக்குவர். காதலுக்கு இருக்கும் ஆற்றலைவிடப் பன்மடங்கு ஆற்றலுடையது பக்திக் காதல்.*

*இராவணன் இளையபெருமாளைத் தூக்க முயன்று வெய்துயிர்த்து நிற்கும் நிலையில், எங்கோ ஒரு மூலையி லிருந்த அநுமன் ஓடோடி வந்து, இளையபெருமாளை ஏந்தி எடுத்துத் தடுக்க முடியாத விரைவுடனே அப்பாற் சென்று விட்டான்.*

**"தொகஒ ருங்கிய ஞானம்ஒன்று**
**எவரினும் தூயான்**
**தகவு கொண்டதோர் நண்பெனும்**
**· தனித்துணை அதனால்**
**அகவு காதலால் ஆண்டகை**
**என்னினும் அநுமன்**
**மகவு கொண்டுபோய் மரம்புகு**
**மந்தியை ஒத்தான்"** [32]

*(தொக ஒருங்கிய - தொகுதியாகச் சேர்ந்துள்ள; ஞானம் ஒன்று - ஞானம் பொருந்திய; தகவு - நன்மை; மந்தி - பெண் குரங்கு)*

---

*31. சஞ்சீவி பர்வதத்தின் சாரல்.*
*32. யுத்த. முதற்போர் - 213*

இங்கு இளைய பெருமாள் அநுமனுக்கு இலேசாக இருந்ததற்குக் காரணம், அந்த அநுமன் மிகுந்த பக்தியுடையவனாக இருப்பதுபற்றியேயாகும். "நண்பெனும் தனித்துணை யதனால் அகவு காதலால்" என்ற பாடற்பகுதி இதனைத் தெளிவுறுத்துகின்றது.

ஓர் ஆழ்வார் பாசுரம் நினைவிற்கு வருகின்றது.

**"தேவுமற்று அறியேன்; குருகூர் நம்பி**
**பாவின் இன்னிசை பாடித் திரிவனே"** [33]

மதுரகவி ஆழ்வார் ஆண்டவனைப் பாடாது அடியாரைப் பாடியவர். அவர் இவ்வாறு காட்டுவார். அவர் மறைந்துவிட்டார்; ஆனால், நம் மனத்தில் வாழ்கின்றார். அநுமனோ இராம நாமத்தைச் செபித்துக்கொண்டு இன்றும் நம்மிடையே வாழ்கின்றான். அவன் சிரஞ்சீவியாதலால், அவன் நம் ஊனக் கண்ணுக்குப் புலப்படாவிடினும் மனக் கண்ணுக்குப் புலப்படுகின்றான். பல மனிதர் உடலில் வாழ்ந்துகொண்டு பசனையில் 'இராமநாம சங்கீர்த்தனம்' நடைபெறும் போதெல்லாம், குதித்துக் கும்மாளம் போட்டுக்கொண்டு வாழ்ந்துகொண்டுள்ளான்.

33. கண்ணிநுண் - 2

# 8. குணக்குன்றன்

"குணம் என்னும் குன்றேறி நின்றார்"[1] என்று வள்ளுவர் பெருமான் முனிவர்களைக் குறிப்பிடுவர். அந்த அரும் பெருந்தொடரை அநுமனைக் குறிப்பிடவும் பயன்படுத்தலாம் என்பது அடியேனின் கருத்து. இராமகாதையைக் கவனத்துடன் படிப்போர், அநுமன் என்ற கதை மாந்தன் தன் அரும்பெருங்குணங்களால் படிப்போர் மனத்தினைக் கவர்கின்றான் என்று சொல்லுவது மிகையன்று; உண்மை உரையேயாகும். இத்தகைய கதை மாந்தனைக் கம்பன் எடுத்த எடுப்பில்,

> "தன்பெருங் குணத்தால் தன்னைத்
> தானலாது ஒப்பிலாதான்" [2]

என்று பாராட்டுவதைக் கண்டு மகிழலாம். முதன் முதலில் இராமலக்குமணர் அநுமனைச் சந்தித்துப் பேச்சுக் கொடுத்த சிறிது நேரத்திலேயே, இராமபிரான் "இசைசுமந்து எழுந்த தோளுடைய" [3] அநுமனை எடைபோட்டுவிடுகின்றான். 'தேற்றமுற்று இவனினூங்குச் செவ்வியோர் இன்மை தேறித் தம்பியிடம் கூறுகின்றான்.

> "ஆற்றலும் நிறைவும் கல்வி
> அமைதியும் அறிவும் என்னும்
> வேற்றுமை இவனோடு இல்லை
> யாம்" [4]

என்று 'வீரம், சற்குணநிறைவு, கல்வி அமைதி, ஞானம் என்ற வேற்றுமை இவனிடம் காணப்பெறவில்லை' என்று குறிப்பால் உறுதி செய்வதைக் கண்டு மகிழ்கின்றோம்; வியக்கின்றோம்.

---

1. குறள் - 29
2. கிட்கிந்தை - அநுமப் - 11
3. கிட்கிந்தை - அநுமப் - 18
4. கிட்கிந்தை - அநுமப் - 19

இத்தகைய பெருமை வாய்ந்த 'கோதில் சிந்தை அநுமனின்' [5] குணநலன்களை நாமும் ஆய்ந்து காண முயல்வோம்.

*1.* **அடக்கம்** : "அடக்கம் அமரருள் உய்க்கும்" [6] என்ற பொன் மொழியை நன்கு உணர்ந்த சீலன்.

(1) தசரதன் புதல்வர்களை முதன் முதலில் சந்திக்க விரும்பியவன் ஒரு பார்ப்பன மாணி உருவம் கொண்டு வருகின்றான். இதிகாசங்களிலும் புராணங்களிலும் பார்ப்பன வடிவமே அடக்கத்திற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளப் பெறுகின்றது. முதலில் சந்திக்கும் போதே,

**"கவ்வையின் றாக**
**நுங்கள் வரவு"** [7]

என்று அடக்கத்துடன் பௌவியமாகக் கூறி வரவேற்கின்றான்.

(2) அங்கதனுக்கு அறிவுரை கூறி அனுப்பியபோது, அநுமனுக்கும் விடைகொடுக்கின்றான், இராமன். அப்போது வாயு குமாரன்,

**"இத்தலை இருந்து நாயேன்**
**ஏவின எனக்குத் தக்க**
**கைத்தொழில் செய்வேன் என்று**
**கழலிணை வணங்கி"** [8]

வேண்டிய பொழுது சக்கரவர்த்தித் திருமகன் அவனை நோக்கி, "அறிவு, ஆண்மை, பெருமை என்ற மூவகைத் திறனும் நிரம்பிய ஒருவனது அரசை மற்றொருவன் எளிதில் கொண்டால் அப்போது அங்கே நன்மையே யன்றித் தீமையும் விளையக்கூடும்; அவ்வரசு உன்னைப் போன்ற அறிஞர் தாங்கவே நிற்கும். ஆகவே, அறமே வடிவெடுத்தாற் போன்ற நீ, சுக்கிரீவன் ஆட்சியை நிலைநிறுத்திப் பின்னர் என் காரியத்தைச் செய்யலாம்'' என்று அறிவுரை கூறி அனுப்புகின்றான். இதில் அநுமனின் அடக்கப் பண்பையும் அறிவுத் திறனையும் ஒருங்கே காணலாம்.

---

*5. கிட்கிந்தை - கிட்கிந்தைப் - 26*
*6. குறள் - 121 (அடக்கம் உடைமை)*
*7. கிட்கிந்தை - அநுமப் - 16*
*8. கிட்கிந்தை - அரசியல் - 27*

*(3) சாம்பவான் அநுமனை நோக்கி, அவனைப் புகழ்ந்து, 'உம்மால்தான் கடலைக் கடந்து பிராட்டியைக் கண்டு திரும்ப முடியும்' என்று கூறும்போது, அநுமன் 'முகந்தாழ்ந்து கூப்பிய கையனாய்' இசைவு தெரிவிப்பதில் இந்த அடக்கப் பண்பைத் தெளியலாம்.*

மேலும், "இந்தச் சிறிதாகிய கடலையேயன்றி ஏழு பெருங்கடல்களையும் கடக்க வேண்டுமென்றாலும் அவ்வாறே செய்து பிராட்டியை மீட்கும் வல்லமை யுடையவர் பலர் இருக்கவும், அடியேனை ஏவியது அடியேனது பெரும்பேறு"[9] என்கின்றான். இஃது அவையடக்கம் போல் கூறியது; பெரியோர்கள் நிறைந்த இடத்தில் ஒருவன் தன்னைத் தானே தாழ்த்திடக் கூறுவது 'அவையடக்கம்' எனப்படும். வைணவப் பெரியார்கள் இதனை **'நைச்சியாநு சந்தானம்'** எனப் பகர்வர்.

"இலங்கையை வேரோடு பெயர்த்து எடுத்துக்கொண்டு வரவேண்டும் என்றாலும், இடையூறு விளைவிக்கும் அரக்கர்களையெல்லாம் வேரோடும் அழித்துப் பிராட்டியை எடுத்துக்கொண்டு வருமாறு பணித்திட்டாலும் நீங்கள் சொன்னபடியே செய்து முடிப்பேன்; அதனைக் கண்கூடாகக் காண்பீர்கள்."[10]

"திருமால் உலகளந்தது போல இங்கிருந்து இலங்கை வரையிலுள்ள ஒரு நூறு யோசனை தூரமும் ஓரடி வைப்புக்குள் அடங்கும்படி எளிதாகத் தாண்டி, இந்திரன் முதலிய தேவர்கள் அரக்கர்க்கு உதவியாக வந்து எதிர்த்துப் போரிடினும், இலங்கையில் வாழும் அரக்கர்களையெல்லாம் அடியோடு அழித்து நினைத்தது முடிப்பேன்."[11]

"கடலானது இவ்வுலகை அழிக்கும்பொருட்டுப் பொங்கி வழிந்தாலும், இவ்வண்டமே உடைந்து விண்ணில் சென்றாலும், அடியேன் சிறிதும் பின்வாங்காமல் உங்களுடைய ஆசியால் சக்கரவர்த்தித் திருமகனின்

---

*9. கிட்கிந்தை - மயேந்திரப் - 21*
*10. கிட்கிந்தை - மயேந்திரப் - 22*
*11. கிட்கிந்தை - மயேந்திரப் - 23*

கட்டளைப்படியே கடல் கடந்து சென்று, பிராட்டியைக் கண்டு, செய்தி உணர்ந்து மீண்டு வருவேன்" [12] என்று பணிவாகக் கூறுவதிலிருந்தும் இவ்வடக்கப்பண்பைக் கண்டு தெளியலாம்.

(4) அநுமனின் வாலைக் கொளுத்திவிடுமாறு இலங்கை வேந்தன் கட்டளையிடப் பாசபந்தத்தை இந்திரசித்து விடுவிக்கின்றான். அரக்கர்கள் கயிறு கொண்டு அவனைப் பிணிக்கின்றனர். அப்பொழுது அநுமன், மிக வலிமையுடைய தனது உடலை வருத்தும் திறன் அக்கயிறுகட்கு இல்லா திருக்கவும், அப்பிணிப்பைப் பொறுக்கும் வலிமை யில்லாதவன்போல் அதற்கு உட்பட்டு அடங்கியிருந்தான்; அரக்கர்கள் இழுத்துச் செல்லும் வழிகளிலெல்லாம் சென்று கொண்டிருந்தான்.[13] அதை யோக முதிர்ச்சியினால் தத்துவப் பொருளையுணர்ந்த ஒரு யோகி, தன்னை மெய்யுணர்வு இல்லாதவன்போல் காட்டிப் பொய்யுணர்வாகிய அவித்தையை மெய்யுணர்வாக மேற்கொண்டு உலகத்தவ ரோடு ஒத்து நடித்தாற்போல் என்ற உவமை கொண்டு விளக்குவன், கம்பன்.[14] பரமுத்தி நேர்கிறவரையில் சீவன் முத்தி இருக்கிற நிலை (சைவம்) இத்தன்மைத்து என்றும் கருதலாம்.

(5) பிராட்டியைக் கண்டு இலங்கையினின்றும் மீண்ட அநுமன்,

> "சென்றது முதலா வந்தது
> இறுதியாய்ச் செப்பற் பாலை
> வன்திறல் உரவோய் என்னச்
> சொல்லினன்" [15]

அனைத்தையும் சொன்னவன் சிலவற்றைச் சொல்லவில்லை. ஏன் சொல்லவில்லை?

---

12. கிட்கிந்தை - மயேந்திரப். - 24
13. சுந்தர. பிணிவீட்டுப். - 122
14. எடுத்துக்காட்டுகளாகச் சுகர், சடபரதர், நம்மாழ்வார் போன்றவர்களை இத்திறத்தவர் எனலாம்.
15. சுந்தர. திருவடிதொழுத. - 8

"போரில்
நீண்டவாள் அரக்க ரோடு
நிகழ்ந்ததும் நெருப்புச் சிந்தி
மீண்டதும் விளம்பான் தான்தன்
வென்றியை விளம்ப வெள்கி"[16]

தற்புகழ்ச்சி தன் மேன்மைக்கு இழுக்காதலால், அரக்கருடன் நிகழ்ந்த போரையும் நெருப்புச் சிந்தியதையும் அநுமன் தெரிவிக்கவில்லை. ஆனால், இவற்றை அவர்கள் அறிந்து கொண்டுவிட்டனர். எப்படி?

"பொருதமை புண்ணே சொல்ல
வென்றதைப் போந்த தன்மை
உரைசெய ஊர்தீ இட்டது
ஓங்குஇரும் புகையே ஓத,
கருதலர் பெருமை தேவி
மீண்டிலாச் செயலே காட்ட,
தெரிதர உணர்ந்தேம்"[17]

(கருதலர் - பகைவர்.)

அநுமான வகையால் இவற்றையெல்லாம் அநுமனது நிலையைக்கொண்டு உணர்ந்துகொண்டனர்.

2. **சமயோசித புத்தி** : கார்காலம் கழிந்தவுடன் வருவதாகச் சொன்ன சுக்கிரீவன், சொன்னபடி வாராததால் இராமன் சீற்றங்கொண்டு நிலைமையை அறிந்து வருமாறு இலக்குவனைக் கிட்கிந்தைக்கு அனுப்புகின்றான்.

"அஞ்சில் ஐம்பதில் ஒன்றுஅறி யாதவன்
நெஞ்சில் நின்று நிலாவ நிறுத்துவாய்."[18]

என்பது இராமன் வாக்கு. இலக்குவன் வேகமாக வருகின்றான்; ஏழு மராமரத்தைத் துளைத்துச் சென்ற இராமபாணம் போல் வேகமாக வருகின்றான்.[19]

---

16. சுந்தர. திருவடிதொழுத. - 9
17. சுந்தர. திருவடிதொழுத. - 10
18. கிட்கிந்தை - கிட்கிந்தைப். - 5. அஞ்சில் ஒன்றும் அறியாதவன்; ஐம்பதிலும் ஒன்றும் அறியாதவன். இளமை முதுமை என்னும் வேற்றுமையின்றி எப்பொழுதுமே, செய்வது அறியாதவன் என்பது இது. இளமையில் ஆராய்ச்சியின்றித் தன் அண்ணனான வாலிபக்கல் தவறுதல் செய்தான்; இப்பொழுது முதுமையில் எனக்குப் பிழை செய்தான் என்றவாறு.
19. கிட்கிந்தை - கிட்கிந்தைப். - 12

(1) **தன்னால் ஒன்றும் செய்யமுடியாத நிலையில் அநுமனை** அடைகின்றான், அங்கதன். இருவரும் தாரையிடம் வருகின்றனர்.[20] நேரிட்ட நிலைக்குத் தாரை கடிகின்றாள்; பழிக்கின்றாள்.[21] ஒருநிலையில் இலக்குவன் கிட்கிந்தை நகரில் பிரவேசிக்கின்றான்.[22] அப்போது அநுமன் கூறிய யோசனை: இலக்குவன் புயவலி மிக்கவனாயினும் அவன் மனம் மலர்போல மென்மையுடையது. பெண்பாலாகிய தாரை சென்று சுக்கிரீவனது அரண்மனை வாயிலில் நின்றுவிட்டால், மகளிரை எதிர்த்துப் பொருது கொல்லலாகாது என்ற கொள்கையை உணர்ந்த அப்பெருமகன், அவ்வழியைக் கண்ணெடுத்தும் பாராமல் விலகிச் சென்றிடுவன்; இது தக்கதோர் உபாயம் என்று அநுமன் சமயோசிதமான ஆலோசனையைக் கூறினன். அங்ஙனமே தார்குழலார்களுடன் தாரை சென்று இலக்குமணனை விலக்கினாள்.[23]

மெல்லியலாரின் சேனை இலக்குவனைச் சூழ்கின்றது. அவர்தம் காற்சிலம்புகள் போர்க்குரிய பலவகை வாத்தியங்களாக ஒலிக்கின்றன; அல்குலாகிய போர்க்கு ஏற்ற பெரிய தேர் அவனைக் கவிந்துகொண்டு நிற்கின்றது. மகளிரின் கண்கள் வேற்படைகளாகவும், வெம்புருவம் விற்படைகளாகவும் அமைந்துவிடுகின்றன; இங்ஙனம் மெல்லியர் வளைந்த சேனையால் பெருவீரனான இலக்குமணனின் சீற்றம் ஒதுங்கிப் போயிற்று. தன் முகத்தை மாற வைத்துக்கொண்டு திரும்பியதோடன்றி அவர்களைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் அஞ்சினான்.[24]

20. கிட்கிந்தை - கிட்கிந்தைப். - 27
21. கிட்கிந்தை - கிட்கிந்தைப். - 28
22. கிட்கிந்தை - கிட்கிந்தைப். - 41
23. கிட்கிந்தை - கிட்கிந்தைப். - 43, 44
24. கிட்கிந்தை - கிட்கிந்தைப். - 47. **வனவாச காலத்தில் வானர அரசனான சுக்கிரீவன் பிராட்டியின் அணிகலன்களைக் காட்டிய போது இலக்குவன், "யான் பிராட்டியின் தோள் வளையங்களைக் கண்டறியேன்; நாடோறும் அப்பெருமாட்டியின் திருவடிகளைப் பணிதலால் அவருடைய நூபுரங்களை அறிவேன்" என்ற வான்மீகம் ஈண்டுக் கருதத்தக்கது.**
25. கிட்கிந்தை - கிட்கிந்தைப். - 48

இப்போது இலக்குவனனின் நிலையைக் கம்பன்,

"தாமரை வதனம் சாய்த்துத்
தனுநெடுந் தரையின் ஊன்றி
மாமியர் குழுவின் வந்தான்
ஆமென மைந்தன் நிற்ப"[25]

(வதனம் - முகம்; தனு - வில்.)

என்று காட்டுவான். தரையை நோக்கியிருந்த இளைய பெருமாளை நோக்கி, 'தூமனம் நெடுங்கண் தாரை', "பெருமானே, அளவற்ற காலம் தவம் செய்த மகிமை உண்டானாலன்றி உன் வரவு இந்திரன் முதலானவர்களாலும் அடையத்தக்க தன்மையையுடையதன்று. அத்தன்மையனான நீ எம் மனைக்கு வரப்பெற்றது நாங்கள் எல்லையில் காலம் நோற்றிருந்த பெருநோன்பின் பயனேயாக வேண்டும்; இதனால் எம் வினை தீர்ந்து உய்ந்தோம். இதனினும் மேம்பட்ட உறுதி எமக்கு இல்லை"[26] என்று கூறினாள். **'இசையினும் இனிய சொல்லாள்'** தொடர்ந்து, "நீ உக்கிரமும் விரைவும் கொண்டு வரும் காரணம் அறியாது வானர சேனை அஞ்சிக் கலங்கியது; இராமபிரானைப் பிரியாத நீ இன்று பிரிந்து தனியாய் ஈண்டு எழுந்தருளியது என்ன காரணம்?" என்று வினவினாள்.

வினவியவர் யார் என்று சிறிது ஏறிட்டுப் பார்க்கின்றான், இலக்குவன். கவிஞன் கூறுவான் :

"ஆர்கொலோ உரைசெய் தாரென்று
அருள்வரச் சீற்றம் அஃகப்
பார்குலாம் முழுவெண் திங்கள்
பகல்வந்த படிவம் போலும்
ஏர்குலாம் முகத்தி னாளை
இறைமுகம் எடுத்து நோக்கித்
தார்குலாம் அலங்கல் மார்பன்
தாயரை நினைந்து நைந்தான்."[27]

(அருள் - கருணை; சீற்றம் - கோபம்; அஃக - குறைய; பார் - பூமி; படிவம் - தோற்றம்; ஏர் - அழகு;

*26. கிட்கிந்தை - கிட்கிந்தைப். - 49*
*27. கிட்கிந்தை - கிட்கிந்தைப். - 51*

*இறை - சிறிது; தாயர் - சுமித்திரை முதலியோர்; நைந்தான் - வருந்தினான்.)*

*கைம்பெண் கோலத்துடன் தாரையைப் பார்த்தவுடன், தன் தாயர் (சுமித்திரை, கோசலை) 'இப்படித்தானே கைம்பெண் கோலத்துடன் இருப்பர்' என்று நினைக்கின்றான்; துக்கம் அவன் மனத்தைக் கவிந்துகொள்கின்றது. அயோத்தியில் தன் குடும்ப வரலாறு மானதக் காட்சியாக மனத்தில் எழுகின்றது.*[28]

*அநுமன் தன் சமயோசித புத்தியால் இலக்குவன் சீற்றத்தையே மாற்றித் திசை திருப்பியதைக் காண முடிகின்றது.*

*(2) தன்னைச் சரணடைய வந்த வீடணனைத் தம் பக்கம் சேர்த்துக்கொள்ளலாமா என்று இராமன் வினவும்போது, ஒவ்வொருவரும் ஒவ்வொன்றைச் சொல்லி வீடணனைச் சேர்த்துக்கொள்ளலாகாது என்று கூற, அநுமனைக் கேட்கும்போது அவன் சொன்னது சமயோசித புத்தியின் விளைவாக எழுந்ததாகக் கருதலாம்.*

*அநுமன் மிகப் பணிவாகத் தொடங்குகின்றான். "நும்மைப் போன்ற அறிவாளிகட்கு அற்ப அறிவுடைய எங்களுடைய ஆலோசனையைக் கேட்க வேண்டிய இன்றியமையாமை இல்லை; ஆதலால், எம்மைப் போன்ற வானரர்களைத் துணையாகக்கொண்டு ஆலோசனை கேட்கின்றீர்" என்று கூறிவிட்டு அநுமன் தலைவணங்கி வாய் பொத்திக்கொண்டு கூறுகின்றான். இங்கே கம்பன் இவனை 'நுணங்கிய கேள்வியான்' என்று குறிப்பிடுவதிலிருந்து இவனது பெருமை துணியப்பெறும். இவனுடைய பேச்சு சித்தாந்தமாக இருக்கும் எனக் கருத்தினால், இவனை இராமன் இறுதியாகக் கேட்டனன் என்று கருதலாம். வள்ளுவர் பெருமானும்,*

> **"நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய**
> **வாயினர் ஆதல் அரிது."** [29]

---

***28. இராமலக்குமணர்கள் கானகம் ஏகிய பின்னர்தான் தசரதன் மரிக்கின்றான். ஈமச்சடங்குகூடச் செய்ய அவர்களுக்கு வாய்ப்பில்லை. இலக்குவன் தன் தாயர் மங்கல நாண் கழற்றியதைப் பார்த்தறியாதவன்.***

***29. குறள் 419 (கேள்வி)***

என்று கூறுவதும் சிந்திக்கற்பாலது. நுணங்கிய கேள்வி யுடையாரிடையேதான் பணிந்த மொழியைக் காணலாம். அநுமன் கூறியவற்றை நோக்குவோம்.[30]

(அ) நீரே நன்குணர்ந்த வித்தகர். வேறு ஒருவர் உமக்குச் சொல்லவேண்டும் என்பது இல்லை; மேலும், இச்சேனையி லுள்ள அறிவுடையார் எல்லாம் ஆராய்ந்து ஒருபடியாகத் தீர்மானமான கருத்தையும் தெரிவித்தாயிற்று; இந்நிலையில் அடியேன் சொல்லுவதற்கு என்ன உள்ளது? (88)

(ஆ) தூய்மையான அமைச்சர்கள் துணிந்து கூறியது மிகவும் தூய்மையானதே. ஆயினும், ஒன்று கூறுவேன்; இங்குள்ளார் கருதுவது போல இவனைத் தீக்குண முடையவன் என்று யான் ஐயுறவில்லை. அதற்கு ஏற்பன சிலவற்றை அடியேன் சொல்லியே ஆகவேண்டும். (89)

(இ) 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்.' ஆதலால், இவர் வஞ்சனை இல்லாதவர் என்பது முகத்தில் தெரிகின்றது. மேலும், பகைவர்கள் பலவகை மாயைகள் செய்து ஏமாற்றலாம்; நம்மைப் புகலாக வந்து சேர்தல் என்பதோ நிகழாது; இதனாலும் இவர் உண்மையானவர் என்றே தெளியலாம். (90)

(ஈ) இருட்டானது பள்ளமான இடத்திலல்லாமல் ஒளி உள்ள இடத்தில் மிக்குத் தோன்றுமோ? அது போலத் திருட்டுத்தனத்தினால் விளைவன யாவும் ஒருவர் மனத்தில் தானே தங்கி இருக்கும். ஆதலால், மனத்தில் மறைந்திருக்கும் வஞ்சகம் அவரவர்களுடைய வாயினின்றும் பேச்சு வருவதற்கும் முன்பாக, மெள்ளத் தம்முடைய முகமே சொல்லிவிடும். (91) [31]

(உ) தன் அண்ணனால் அலக்கண் உற்றார்க்கு அபயமளித்து நல்வாழ்வு அளித்தவன் இராமன் என்பதைக் கேள்வியுற்ற வீடணன், தன் அண்ணனால் துரத்தப்பெற்று அலக்கண் உற்றுத் தரும மூர்த்தியாகிய இராமபிரானைப்

30. யுத்த. வீடணன் அடைக்கலப். 87 - 105.

31. "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம், கடுத்தது காட்டும் முகம்" என்பது வள்ளுவம் (குறள் - 706) குறிப்பறிதல்.

புகலடைந்து அலக்கண் நீங்கி அரசும் பெறலாம் என்று வந்தவன், வீடணன். ஆகவே, இவன் வந்தது தக்கதே யாகும். (92)

(ஊ) நீதி நெறி தவறிய அரக்கர்கட்கு அரசு நிலை நில்லாதென்பதையும், தம்பியர் விஷயத்தில் கருணை வைக்கும் தன்மையுடன் உண்மைக்குப் பாடுபடுந் தன்மையையும் கண்டு விரும்பி வந்தவன், வீடணன். (93)

(எ) இந்த வீடணன் தன் தமையனை விட்டு நம்மை வந்தடைந்த காலம் 'தக்க காலமன்று' என்று கருதுவார்க ளாயின் அது சரியன்று; வாலி என்கின்ற தனது பெரும் பகைவனின் வலியை இராமன் தொலைத்துவிட்டதால், இனி இவ்விடத்து இந்த இராவணனுக்கு நாசம் பொருந்தும் என்று கருதி நீ மூலப் பொருளாகுவை என்ற உணர்ச்சி தோன்றத் தன் தமையனை விட்டுப் பிரிந்து உம்மை அடைந்திட்டான். ஆகவே, இவன் வந்த காலம் ஏற்ற காலமேயாகும் (94);

(ஏ) அந்த அரக்கர், மாயத்தை அறிந்தவராயிருப்பது நமக்கு நன்மையேயாகும். 'பாம்பின கால் பாம்பறியும்' என்றபடி இந்த வீடணன் அரக்கர் சாதியிற் பிறந்தவராதலால், அரக்கர் ஏதேனும் மாயம் செய்தால் அதனை அறிந்து கூறுவர்; அன்றியும், ஏதாவது அவர் செய்வதற்கு மாறாக மாயம் செய்ய வேண்டுமென்றாலும் செய்வர்; இதன் வழியாக நன்மையே நமக்கு விளையும் (95);

(ஐ) 'இந்த அரக்கருடைய மனத்திலுள்ள தீமையைச் செவ்வனே அறிதல் அருமையானது; இவர் நாம் இறக்கக்கூடிய செயலைச் செய்வர்' என்று கருதுதலைச் சிலர் செய்யக்கூடும். வலிய பகைவரிடத்துச் சங்கிப்பது போல எளிமைப்பட்டு வந்துள்ள இவரிடத்துச் சங்கிக்க இடம் இல்லை (96);

(ஒ) நான் பிராட்டியைக் காண இலங்கைக்குச் சென்றிருந்த பொழுது 'இவனைக் கொல்லுமின்' என்று இராவணன் சொன்னபோது 'தூதுவரைக் கொல்லுவது என்பது இழிவைத் தருவது; அச்செயல் பழியுடனும் பொருந்தும், பின்னும் போர்த்தொழில் வெல்லலம், என்று சொல்லித் தக்க வேளையில் தடுத்தான், இந்த வீடணன் (97);

*(ஓ) 'மகளிரைக் கொல்லுதலும், வீரத்தினின்று நீங்கிய இழிந்தோரைக் கொல்லுதலும், நமக்குக் கேட்டைச் செய்தாலும் தூதுவரைக் கொல்லுதலும் குற்றமற்ற செயலன்றாம்' என்று அதற்கு ஏற்றனவான சிறந்த ஏதுக்களை இந்த வீடணன் தன் அண்ணனுக்கு எடுத்து அறிவித்தான் (98);*

*(ஔ) 'நான் இலங்கை சென்றிருந்தபோது இராப் போதில் நான் இவன் மாளிகையில் (முதன் முறை) சென்ற காலத்திலும், (பிறகு அந்த மனைப்பக்கமாகத் திரிந்த காலத்திலும்) பல நன்னிமித்தங்கள் தோன்றின; அதுவல்லாமலும் இவனைப்பற்றி அறிந்துள்ளது ஒன்றுண்டு.' (99);*

*(க) இவன் மனையில் கள்ளும் இல்லை; இறைச்சியும் இல்லை. இவனது இல்லம் அந்தணர் இல்லம் போல் விளங்கிற்று' (100);*

*(ங) இந்த வீடணனின் மகள் திரிசடை பிராட்டி சீதை மிகவும் வருந்திய நிலையில் இருந்தபோது 'நான்முகனின் சாபம் ஒன்றுள்ளது; அதனால் கெடுமதியையுடைய இராவணன் உன்னைத் தீண்டினால் உடனே யமன் அவனைச் சேர்வான்' என்று சொல்லித் தேற்றுவித்தாள் (101);*

*(ச) இந்த வீடணன் தனக்குப் பற்றுக்கோடாக இருந்த இராவணனது வரம் முதலியன நின் வில்லிலிருந்து புறப்படும் சரங்களால் தீர்ந்துபோகும் என்று நினைத்து விரைந்து வந்துள்ளான்; இவன் பெருவரங்கள் பெற்றிருத்தலோடு கருணையும் வாய்க்கப்பெற்றிருத்தலால் ஏற்றுக்கொள்ளத் தக்கவன் (102);*

*(ஞ) 'நீர் ஒருவரே அனைத்து அரக்கர்களையும் அழித்தொழிக்கும் திறமை வாய்ந்தவர். அப்படிப்பட்ட நீர் 'எளிமையான இவனால் என்ன நேருமோ?' என்று ஐயுற இடன் உண்டோ? கடலின் நீரைக் கிணற்று நீர் கொள்ளாதவாறு போல, இவனால் நுமக்கு ஒரு தீங்கும் செய்யமுடியாது என்பது திண்ணம்; உன்னையன்றிவேறு எவராலும் செய்ய முடியாத இராவண சங்காரத்திற்குத் துணையாயிருக்க விரும்பி ஆபத்துக் காலத்தில் அபயம் வேண்டும் என்று வரும் இவனை, ஐயுறாமலே கைக்கொள்ளுதலே தக்கது (103);*

(ண) 'அண்ணனால் துரத்தப்பெற்ற தனக்குத் தங்குவதற்கு ஏற்ற இடம் இல்லாமல் கவலைப்பட்டு, இவன் நம்மை வந்தடைந்தபோது இவனைச் சேர்த்துக்கொள்ளாமல் 'இவன் பகைவரைச் சேர்ந்தவன். இவன் மனம் பகைவரான இராவணாதியரை வெல்ல வேண்டுமென்று இராது. ஆகவே, இவனை நம்பி அங்கீகரிக்கலாகாது' என்று சொல்வது அரச நீதி தெரிந்தோர் சொல்லும் சொல்லன்று; அவர்கள் கேட்பின் சிரிப்பார்கள்; ஒருவர்க்கொருவர் பங்காளிகளாய் அன்பு பூண்டவரான தந்தையார், தமையன்மார், தம்பிமார் என்ற இவர்களே பொருள் நிமித்தம் மாறுபாடு பூண்டு ஒருவரையொருவர் கொல்லப்பார்ப்பதைக் கண்கூடாகக் காணவில்லையா?' என்றனன் (104).

(ட) 'இவ்வாறு இருத்தலினால், இந்த வீடணனுடைய வருகை நல்ல எண்ணத்துடன் கூடிய வருகையே' என்று உமக்கு அடியனான யான் அறிந்துள்ளேன்; உம்முடைய வேத நூல் எனத் தகைய திருக்குறிப்பை அறியேன்' என்று சொல்லி முடித்தான், அநுமன் (105).

இங்கும் மாருதி தன் சமயோசித புத்தியால் இராமன் உகக்குமாறு வீடணனைப்பற்றி நல்முறையில் எடுத்துக் கூறியதைக் காணமுடிகின்றது.

இராமனும் அநுமன் கூறியவற்றையெல்லாம் உன்னிப்பாகக் கவனித்து,

"மற்றினி உரைப்ப தென்னோ
மாருதி வடித்துச் சொன்ன
பெற்றியே பெற்றி யன்னது
அன்றெனில் பிறிதொன் றானும்
வெற்றியே பெறுக தோற்க
வீக வீயாது வாழ்க
பற்றுதல் அன்றி உண்டோ
அடைக்கலம் பகர்கின் றானை"[32]

என்று கூறி, மேலும் தன் முடிவைத் தக்க காரணங்கள் காட்டி வீடணனை ஏற்றுக்கொண்டான்.

32. யுத்த. வீடணன் அடைக்கலப். - 10

(3) பிராட்டியைக் காண முடியாமல் வானர வீரர்கள் வருந்திக் கூறத் தொடங்கினர்.[33] அங்கதன் இறக்கத் துணிகின்றான்.[34] சாம்பவான் 'அது கூடாது' எனத் தடுத்து நிறுத்துகின்றான்.[35] அநுமன் அவ்வமயம் பேசிய பேச்சு அவனது சமயோசித புத்தியைப் புலப்படுத்துகின்றது. "தேட வேண்டிய இடம் இன்னும் அதிகமாக உள்ளது. சிறிது தேடினவிடத்துப் பிராட்டி கிடையாமையைக்கொண்டே உயிர்விடத் துணிவது சிறிதும் தகுதியன்று. பிராட்டியைத் தேடுதல் இன்றியமையாத செயலாதலால், காலம் கடந்தமைக்குச் சிறிதும் கலங்க வேண்டா. மேற்கொண்ட செயலில் ஊக்கம் கொள்ளுதலே தக்கது. அவ்வாறு செய்தொழிலை நாம் இனிது முடிப்பின், சுக்கிரீவனும் நமது செயலுக்கு மெச்சுவனேயன்றி, ஒரு கடுஞ்சொல்லையும் சொல்லான். ஆகவே, இனியும் தேடுதலே தகுதியாகும். பின்னும் தேடியும் பிராட்டி அகப்படாவிட்டால், பிராட்டிக்கு நேர்ந்த துன்பத்திற்காக இராவணனை எதிர்த்துச் சென்று, நடைபெற்ற போரில் உயிர் விட்ட சடாயுவைப் போல் உயிர் விடுதல் பெருமை. அவ்வாறு செய்யாமல் இப்போதே உயிர் விடுதல் பெரும் பழிப்பை உடையதாகும்[36] என்று கூறினன்.

(4) சம்பாதி 'சடாயுவைக் கொன்றவர் யார்?' என்று வினவச் சமயோசித புத்தியையுடைய மாருதி, "உன்னைப் பற்றியே நீ உள்ளபடியே கூறினால், பின்னை நடந்த வரலாற்றை விவரித்தல் தவறுதல் இல்லாததாகும்" என்று சம்பாதியை நோக்கிக் கூறினன். எருவை வேந்தனும் தன்னைப் பற்றி அநுமனுக்குச் சொல்லத் தொடங்கினான்.[37] அவனை நோக்கி, "என் பின் பிறந்தவனாகிய துணையைப் பிரிந்த ஏழ்மையுடைய நான் முன் பிறந்தேன்"[38] என்று விளங்கக் கூறினன். இதனைச் செவி மடுத்த மாருதி, மிக்க துன்பக்

33. கிட்கிந்தை. சம்பாதிப். 3, 4
34. கிட்கிந்தை. சம்பாதிப். 12 - 16
35. கிட்கிந்தை. சம்பாதிப். 17, 18
36. கிட்கிந்தை. சம்பாதிப். 19 - 21
37. கிட்கிந்தை. சம்பாதிப். 30
38. கிட்கிந்தை. சம்பாதிப். 31

*கடலில் மூழ்கிப் பின் தெளிந்து, பின்னர் "இராவணன் வீசிய வாளாயுதத்தால் நின் தம்பிக்கு மரணம் நேர்ந்தது" என்று விளங்கக் கூறினன்.*

*3.* **பொறையுடைமை :** *அநுமனைப் பொறையுடைமைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.*

**"மிகுதியால் மிக்கவை செய்தாரைத் தாம்தம்**
**தகுதியால் வென்று விடல்"** [39]

*என்பது வள்ளுவர் வாக்கு. மனச்செருக்கால் தங்கட்குத் தீயவற்றைச் செய்தாலும், அதனைப் பொறையுடைமையால் வென்றுவிடுக என்பது அப்பெருமானின் அறவுரை. வாலி சுக்கிரீவனுக்கு இழைத்த தீங்குகள் மிகப்பல. அவற்றை எதிர்த்துச் சமாளிக்கத் தன்னிடம் ஆற்றலிருந்தும் அதனைப் பொறையுடைமையால் பொறுத்துக்கொண்டு 'காலமும் இடமும்' வந்து சேரும் என்று பொறுமையுடன் காத்திருக்கச் செய்கின்றான், சுக்கிரீவனை.*

*இராமபிரான் வருகையைச் சுக்கிரீவனுக்குத் தெரிவிப்பதைக் கம்ப நாடன்,*

**"மேலவன் திருமகற்கு**
**உரைசெய்தான் விரைசெய்தார்**
**வாலியென்று அளவிலா**
**வலியினான் உயிர்தெறக்**
**காலன்வந் தனன்;இடர்க்**
**கடல்கடந் தனம்' எனா**
**ஆலம்உண் டவனின்நின்று**
**அருநடம் புரிகுவான்"** [40]

*என்று காட்டுவான். அநுமன் உருத்திரமூர்த்தி போல் ஆனந்தக் கூத்தாடிச் செய்தியைத் தெரிவிக்கின்றான். இராம லக்குமணர்களை 'வாலியால் அனுப்பப்பட்டவர்கள்' என்று வெருவியோடி மலை முழைஞ்சினுள் ஒளிந்துகொண்ட சுக்கிரீவனை அநுமன் அவர்களுடன் சேர்த்து வைத்தது அநுமனது திறமைக்கும் பொறையுடைமைக்கும் சிறந்ததோர்*

---

*39. குறள் - 158. (பொறையுடைமை)*
*40. கிட்கிந்தை. நட்புக்கோள் - 2*

எடுத்துக்காட்டான நிகழ்ச்சியாகும். 'பொறுத்தவர் பூமி ஆள்வார்' என்பது மக்கள் பேச்சில் தாண்டவம் ஆடும் பொருள் பொதிந்த வாசகம்.

*(1)* **இராமலக்குமணர்களின் தன்மையைப்** *பொறுமையாக எடுத்துக் கூறுகின்றான், காற்றின் மைந்தன்.*

*(அ) அவ்வீரர்கள் இந்நில உலகத்தில் உள்ளவர்களும், விண் உலகத்திலுள்ளவர்களும் இவற்றிற்கு மாறாகப் பாதாள லோகத்திலுள்ளவர்களும், மற்றை லோகத்திலுள்ளவர்களும், எட்டுத்திக்கிலுள்ளவர்களும் ஆகிய இவர்களுடைய மனத்திலுள்ளவர்களும், செயலில் உள்ளவர்களும், சொல்லில் உள்ளவர்களும், கண்ணாக உள்ளவர்களும் ஆனவர்கள்; பகைவர்களையுடையவர்களும், அப்பகைவர் களால் செய்யப்பெற்ற மிகவும் அதிகமான விவரணங்களை யுடையவர்களுமாய்த் தம்மை அடைந்தவர்களது அருமையான உயிருக்கு அமிழ்தம்போல் உள்ளவர்கள்.*[41]

*(ஆ) இவர்கள் தசரத சக்கரவர்த்தியவர்களின் திருக் குமாரர்கள்; பேரறிவுடையவர்கள்; கட்டழகு வாய்க்கப் பெற்றவர்கள்; உனக்கு முறைமையால் எளிதாக அரசாட்சியைத் தந்து உதவுவார்கள்.*[42]

*(இ) நீதி நெறியில் நிற்பவர்கள்; கருணை வடிவான வர்கள். சன்மார்க்கத்தினின்றும் மாறுபடாத உறுதியுடைய வர்கள்; எல்லோரையும்விடப் பெருமையுடையவர்கள்; இயல்பாகவே வரையறைப்படாத அறிவையுடையவர்கள்; மிகு புகழ் உடையவர்கள்; விசுவாமித்திர மாமுனிவரின் ஆசி பெற்றவர்கள்; கடல் போலப் பரந்த கடவுள் வெம்படைகளை யுடையவர்கள்.*

*(2)* **அடுத்து இராமனது** *பெருமையைப் பகர்ந்து வானர அரசனுக்கு நம்பிக்கை ஏற்படுத்த முயல்வதில் மாருதியின் பொறுமையைக் காணமுடிகின்றது.*

---

***41. கிட்கிந்தை - நட்புக்கோள் - 3. எம்பெருமான் அந்தர்யாமியாய் எங்குமுளனாதலால், அக்கடவுளின் அவதாரமான இவர்களை எங்கும் உள்ளவர்களாகக் கூறினார்.***

***42. கிட்கிந்தை - நட்புக்கோள். - 4***

***43. கிட்கிந்தை - நட்புக்கோள் - 5***

(அ) தாடகையை வதம் செய்தவன்; அவள் மகன் சுபாகுவைக் கொன்றவன்; தன் திருவடித் தூளியினால் கல்லின் வடிவமாய்க் கிடந்த அகலிகைக்கு உண்மை உருவத்தை அருள் செய்த பெருமான்; [44]

(ஆ) இராமன் நல்லுறுப்புகள் அமைந்த நம்பி; மிதிலையில் சிவதனுசை இறுத்துச் சீதாப்பிராட்டியை அடைந்தவன்; [45]

(இ) தந்தை தயரதன் உதவ, சிற்றன்னை பணித்தருள, அரச செல்வத்தைத் தம்பி பரதனுக்கு நல்கி இந்த இடத்திற்கு எழுந்தருளியவன்; [46]

(ஈ) பரசுராமனது வலியை அடக்கியவன்; விராதன் என்னும் அரக்கனை வதைத்தவன்; [47]

(உ) இன்னும் இப்பெருமகன் கரன் முதலிய கருணையற்ற அரக்கர்களுடைய கடல் போன்ற சேனைகளை அழித்தவன்; எல்லாத் திக்குகளிலுள்ள பகைவர்களையும் அழித்தருள்பவன்; [48]

(ஊ) இவன் மானுட வடிவெடுத்து வந்த பாற்கடலிலுள்ள பரமபதநாதன்; மாயமானாக வந்த மாரீசனுக்கு யமனானவன்; [49]

(எ) தன்னிடத்துப் பக்தியுடைய சபரிக்கும், தன்னை விழுங்க முயன்ற கவந்தனுக்கும், வேறுபாடு இன்றி உயர் பதவியளித்த உத்தமன். [50]

முனிவர் முதலியோர் இவ்விருவரது வருகையைக் குறித்துத் தவம் செய்கின்றதனால், இவர்கள் தீயோரை அழித்து நல்லோரைக் காக்கத் திருவவதரித்த முதற்கடவுள் என்று கூறி அவர்களுடன் நட்பு ஏற்படுத்தியவன்.

*44. கிட்கிந்தை - நட்புக்கோள். 6 அகலிகை கௌதம முனிவரின் மனைவி; சதானந்தரின் அன்னை.*

*45. கிட்கிந்தை - நட்புக்கோள். 7*

*46. கிட்கிந்தை - நட்புக்கோள். 8*

*47. கிட்கிந்தை - நட்புக்கோள். 9*

*48. கிட்கிந்தை - நட்புக்கோள். 10*

*49. கிட்கிந்தை - நட்புக்கோள். 11*

*50. கிட்கிந்தை - நட்புக்கோள். 12*

*(3)* **இராமன் வாலியைக் கொல்ல வல்லவன்** என்பதைப் பொறுமையுடன் பல கூறி மெய்ப்பிக்கின்றான்.

*(அ) இராமனது திருக்கைகளிலும் திருத்தாள்களிலும் சங்கு சக்கரக் குறிகளிருப்பதால், அவன் இராமனாக அவதரித்த திருமாலே;*[51]

*(ஆ) சீதையின் திருமணத்திற்காகச் சிவதனுசை ஒடிக்கும் அற்புத ஆற்றல் திருமாலுக்கேயுடையதேயன்றி வேறு எவர்க்கு இருக்க முடியும்?*[52]

*(இ) என் தந்தையாகிய வாயு பகவான் ஒருமுறை என்னை நோக்கி 'உனக்கும் எனக்கும் நல்ல பதவி கிடைக்குமாறு திருமாலுக்கு அடிமை செய்' எனக் கூறினன்; அத்திருமாலே யான் செய்யும் அடிமைத் தொழிலை ஏற்றுக் கொள்ளுமாறு இப்போது வந்துள்ளான். இதற்கு வேறொரு காரணமும் உள்ளது;*[53]

*(ஈ) 'நீ திருமாலுக்கு அடிமை செய்' என்று எந்தை கூறியபோது, 'இவன்தான் திருமால் என்று அறிவது எப்படி?' என்று வினவியபோது, அதற்கு எந்தை 'அத்திருமால் உன் எதிரே வரும்போது, உனக்கு அவனிடத்தில் யாதொரு காரணமும் இன்றிப் பேரன்பு உண்டாகும்; இதுவே அப்பெருமானைக் கண்டறிவதற்குரிய நெறி' என அடையாளம் கூறினான். அஃது இப்போது ஒத்திருப்பதனால் இவன் அத்திருமாலே எனத் துணியலாம்."*[54]

*(உ) மற்றும் அப்பெருமானின் பெருவலியின் தன்மையை அறிய விரும்பினாலும் இங்கிருந்து நமது இருப்பிடத்திற்குச் செல்லும் வழியிலுள்ள மராமரம் ஏழினையும் ஓரம்பு கொண்டு துளைக்கச் சொல்லி, அந்த அம்பு ஊடுருவிச் செல்வதைப் பார்த்தால், வாலியைக்*

---

***51. கிட்கிந்தை - நட்புக்கோள். 79***

***52. கிட்கிந்தை - நட்புக்கோள். 80***

***53. கிட்கிந்தை - நட்புக்கோள். 81. இங்குக் கூறப்பட்டிருப்பது பிறிதோர் இடத்தில் கூறப்பெற்றிருந்தாலும், அதைக் கூறியது கூறலாகக் கொள்ளற்க. விளக்கத்திற்காகத் திரும்பவும் கூறப்பெற்றதாகக் கொள்க.***

***54. கிட்கிந்தை - நட்புக்கோள். 82***

கொல்வதற்கேற்ற வலிமை இவனுக்கு உளதென்பதை நீயே தெளியலாம்.[55]

இவ்வாறு கூறி அநுமன் இராமனது வலிமையில் நம்பிக்கை வருமாறு செய்தான்.

இங்குக் காட்டப்பெற்ற முப்பெருங் குணங்களால் அநுமன் நமக்கு ஒரு குணக்குன்றனாகக் காட்சி அளிக்கின்றான். இன்னும் அவனுடைய குணநலன்களைப் பலவாறு விரித்துரைக்கலாம். அப்படி விரித்துரைத்தால் அஃது அவனுடைய வால்போல் நீளுமாதலால், அதில் ஈடுபடவில்லை.

---

55. கிட்கிந்தை - நட்புக்கோள். 83. மராமரங்கள் ஏழும் ஊழிக்கால முடிவிலும் அழியாதவை; சத்திய லோகத்தில் வாழும் நான்முகனும் அவற்றின் உச்சியை அறிய முடியாது. பகலவனின் தேர்க்குதிரைகள் ஓயாமல் ஒவ்வொரு நாளும் ஓடுவனவாயிருந்தும், இளைப்பு அடையாமைக்குக் காரணம், இம்மர நிழலின் வழிச் செல்வதனாலாகும். இம்மரங்கள் ஆகாய கங்கைக்கும் மேல் உயர்ந்துள்ளன.

# பின்னிணைப்பு

## பயன்பட்ட நூல்கள்


**ஆழ்வார்கள்** : *நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் (பெரும்புலவர் கி.வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பு)*

**கம்பன்** : *கம்பராமாயணம் : கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம் - பகுதி 1, 2. வை.மு.கோ. உரை*

**சுப்பு ரெட்டியார் ந.** : *முத்தி நெறி, வடநாட்டுத் திருப்பதிகள், வைணவ உரை வளம், (கழகத்தில் கிடைக்கும்)*

**திருவள்ளுவர்** : *திருக்குறள் - பரிமேலழகர் உரை (கழக வெளியீடு)*

**பாரதிதாசன்** : *சஞ்சீவி பர்வதத்தின் சாரல் (பா.தா. கவிதைகள் - முதல் தொகுதி)*

## இந்நூலாசிரியரைப்பற்றி.....



பிறப்பு : 27-8-1916

87 அகவையைத் தாண்டிய இந்த நூலாசிரியர் எம்.ஏ., பி.எஸ்சி., எல்.டி., வித்துவான், பிஎச்.டி பட்டங்கள் பெற்றவர்.

ஒன்பதாண்டுகள் துறையூர் உயர்நிலைப்பள்ளி நிறுவனர் - தலைமை ஆசிரியராகவும் (1941 - 50), பத்து ஆண்டுகள் காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியர் - துறைத்தலைவராகவும் (1950 - 60), பதினேழு ஆண்டுகள் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறை நிறுவனர் - பேராசிரியராகவும் (1960-77) பணியாற்றி ஓய்வு பெற்றவர்.

1978, சனவரி, சென்னையில் குடியேறிப் பதினைந்து மாதங்கள் (1978 பிப்ரவரி - ஜூன் 1979) தமிழ்க் கலைக் களஞ்சியத்தின் முதன்மைப் பதிப்பாசிரியராகப் பணியாற்றியவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறையில் 1986ஆம் ஆண்டு மூன்று மாதங்கள் மதிப்பியல் பேராசிரியராகவும், 1989 மே முதல் 1990 அக்டோபர் முடிய 18 திங்கள் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகக் காஞ்சித் தத்துவ மையத்தில் தகைஞராகவும் பணியாற்றி 1200 பக்கத்தில் 'வைணவச் செல்வம்' என்ற ஒரு பெரிய ஆய்வு நூலை உருவாக்கி வழங்கியவர். முதற்பகுதி 1995 இல் 575 பக்கத்தில் வெளி வந்துள்ளது. இரண்டாவது பகுதி அச்சேறும் நிலையில் உள்ளது. (தபக. வெளியீடு). 1990, ஆகஸ்டு 20 முதல் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்

இலக்கியத்துறையில் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியராகவும் (மூன்று பிஎச்.டி மாணவர்கட்கு வழிகாட்டும் தகுதியுடன்), 1996 பிப்ரவரி முதல் சென்னைப் பல்கலைக் கழகத் தெற்கு - தென்கிழக்கு ஆசிய நாடுகளின் மரபுவழிப் பண்பாட்டு நிறுவனத்தில் மதிப்பியல் இயக்குநராகவும் பணியாற்றி வருபவர்.

நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தில் நம்மாழ்வார் தத்துவத்தை ஆராய்ந்து (பிஎச்டி) டாக்டர் பட்டம் பெற்றவர். (இந்த ஆய்வு நூல் ஆங்கிலத்தில் 940 பக்கங்களில் திருவேங்கடவன் பல்கலைக் கழக வெளியீடாக வெளிவந்துள்ளது.) பல எம்.ஃபில்., பிஎச்.டி மாணாக்கர் களை உருவாக்கியவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் பல ஆய்வுக் கட்டுரைகளை வெளியிட்டவர். பெரும்பாலும் இவை நூல் வடிவம் பெற்றுள்ளன; பெற்றும் வருகின்றன. தவிர, ஆசிரியம், கல்வி உளவியல் (5), இலக்கியம் (22), சமயம், தத்துவம் (35), தன்-வரலாறு, வாழ்க்கை வரலாறு (13), திறனாய்வு (20), அறிவியல் (20), ஆராய்ச்சி (6) ஆக 121 நூல்களின் ஆசிரியர்.

இவர்தம் அறிவியல் நூல்களுள் நான்கும், சமய நூல்களுள் நான்கும் தமிழக அரசுப் பரிசுகளையும், அறிவியல் நூல்களுள் ஒன்று தமிழ் வளர்ச்சிக் கழகப்பரிசினையும், அறிவியல் நூல்களுள் ஒன்று சென்னைப் பல்கலைக் கழகப் பரிசினையும் ஆக 10 நூல்கள் பரிசுகள் பெற்றன. இவர்தம் அறிவியல் நூல்களைப் பாராட்டிக் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் '**அருங்கலைக்கோன்**' என்ற விருதினையும் (1968) தமிழ்ப்பணியைப் பாராட்டித் தமிழக அரசு திருவி.க. விருதையும் (1987 - 10,000 வெண்பொற் காசுகள்) இவர்தம் தமிழ்ப்பணியைப் பாராட்டி மதுரை - காமராசர் பல்கலைக் கழகம் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்ற விருதினையும் (1991) இராசா சர் அண்ணாமலைச் செட்டியார் அறக்கட்டளை இராசா சர் முத்தையவேள் விருதையும் (1994 - 50,000 வெண்பொற்காசுகள்), இவர்தம் கம்பன் பணியைப் பாராட்டிச் சென்னைக் கம்பன் கழகம்

பேராசிரியர் இராதாகிருஷ்ணன் விருதையும் (1994 - 1000 வெண்பொற்காசுகள்), சென்னை ஆழ்வார்கள் ஆய்வு மையம் இவர்தம் வைணவ வெளியீடுகளைச் சிறப்பிக்கும் முறையில் ஸ்ரீ இராமாநுசர் விருதையும் (1996 - 25,000 வெண் பொற்காசுகள்) வழங்கிச் சிறப்பித்தன.

மேலும், இவர்தம் இயற்றமிழ்ப் பணியைப் பாராட்டி இயல் இசை நாடக மன்றம் (அரசு) **'கலைமாமணி'** விருதையும் (1999), பல்வேறு துறைகளில் இவர்தம் அனைத்துப் பணிகளையும் பாராட்டி மதுரை காமராசர் பல்கலைக் கழகம் டிலிட் . (கௌரவம்) பட்டத்தையும் (1999), இவர்தம் நீண்டகாலத் தமிழ்ப்பணியைப் பாராட்டி நூற்றாண்டு அறக்கட்டளை (காஞ்சி காமகோடி பீடம்) **சேவாரத்னா** விருதையும் (1999) வழங்கிச் சிறப்பித்தன.

இனிமை, எளிமை, தெளிவு ஆகியன இவர்தம் நூல்களின் சிறப்பியல்புகளாகும்.